University of Madras.



# F. A. EXAMINATION OF 1896.



## A CLEAR COMMENTARY

ON

# CHULAMANI

BY
V. M. SATAKOPARAMANUJACHARIAR,
*Head Tamil Pandit, Ch. of Scot. Miss. College, Madras,*
*and pupil of*
P. M. SRINIVASACHARIAR,
*Tamil Pandit, Presidency College, Madras.*




Madras:

PRINTED AT THE MEMORIAL PRESS.

1896.

Price As. 6 per Copy. Postage One Anna Extra.

# முகவுரை.

செவிக்கினியசெஞ்சொற்செந்தமிழ்ச் செல்வர்களே! மகாகனம்பொருந்திய சென்னையூநிவர்சிடியாரால் பி - ஏ, யப் - ஏ பரீக்ஷைகளுக்குப் பாடமாக ஏற்படுத்தப்பட்ட தமிழ்நூல்களுக்குச் சென்ற பலவருஷகாலமாக உரையெழுதிப் பதிப்பித்துப் பிரசுரஞ்செய்து வந்த யான், இப்பொழுது ௧௮௯௯ - ம் வருஷத்து யப்-ஏ பாடபுத்தகத்துச் செய்யுட்பாகங்களுள் ஒன்றாகிய சூளாமணிக்கு மாணாக்கர்களுக்குத் தெளிவாகப் பொருள்விளங்கும்படி மிகஎளியநடையில் ஓர்உரைசெய்து அச்சிட்டு வெளிப்படுத்தலானேன்.

சூளாமணியென்னும் இந்நூல், செந்தமிழ்மொழியிற் சிறந்துவிளங்கும் பழையகாப்பியமைந்தனுள் முந்தியதாகிய சீவகசிந்தாமணியென்பது போலச் சிறந்தநடையுடையதொரு தமிழ்ப்பெருங்காப்பியமாம்; [பஞ்சகாவியங்களாவன - சீவகசிந்தாமணி, சிலப்பதிகாரம், மணிமேகலை, குண்டலகேசி, வளையாபதி என்பர்.] இது, தோலாமொழித்தேவரென்னுஞ் சைனமுனிவரால் இயற்றப்பட்டது. [தேவரென்பது பெரும்பான்மையாய்ச் சமணமுனிவர்களுக்குப் பெயராய் வழங்கும்; சிந்தாமணி நூலாசிரியர் பெயர் திருத்தக்கதேவரென்பதுங் காண்க: தேவர் என்ற பெயரால் திருவள்ளுவரையும் சமணர் தம்மதத்தவ ரென்பர்.]

இந்நூல், சுரமையென்னும் நாட்டில் போதனமென்னும் நகரத்தில் பாகுபலியென்பவனது குலத்திலே பயாபதியென்னுமரசனது மனைவிமார் பலருள் பட்டத்துத்தேவிமாராய்ச் சிறந்த மிகாபதியென்றுஞ் சசியென்றும் பெயர்கூறப்படுகிற மகளிரிருவரிடத்து முறையே விசயன் திவிட்டன் என்ற இரண்டுகுமாரர் பிறந்து வளர்ந்ததும்,இவர்களுள் திவிட்டனுக்கு வித்தியாதரலோகத்து இரதநூபுரநகரத்து அரசனாகிய சடி யென்பவன் தனது மனைவிமார்பலருள் தலைவியான வாயுவேகை யென்பவளிடம் பிறந்த சுயம்பிரபை யென்னும்மகளை மணஞ்செய்வித்ததும், இரத்தினபல்லவநகரத்தரசனும் வித்தியாதரசக்கரவர்த்தியு மாகிய மயூரகண்டனென்பவனது மகனாகிய அச்சுவகண்டனென்பவனுக்குத் தனதுதந்தைகொடுத்த திறைப்பொருள்களைத் திவிட்டன் தடுத்துவிட்டதும், அதுகேட்டு அவன்மந்திரிமார்களுளொருவனான அரிமஞ்சு என்பவனால் தன்னைக்கொல்லும்படி ஏவியனுப்பப்பட்ட மாயச்சிங்கத்தைத் திவிட்டன் சென்று எதிர்த்து வாய்கிழித்துக் கொன்று வென்றதும், பின்பு அதிககோபங்கொண்டு சேனைகளோடு எதிர்த்துவந்த அச்சுவகண்டனைத் திவிட்டன் தானும் பல சேனைகளோடு சென்று பொருது கொன்று அவனது வித்தியாதரலோகத்தரசாட்சியைத் தனது மாமனான சடியென்பவனுக்குத் தந்ததும், பயாபதியரசன் தன்புதல்வர்க்குப் பட்டாபிஷேகஞ்செய்து அவர்களிடம் அரசாட்சியை வைத்ததும், திவிட்டன் சிலபுலவர்கள்விருப்பத்தின்படி கோடிக்குன்றமென்னும் மலையை வேரோடுபறித்துஏந்தியதும்,இவன் மற்றும்பல்மகளிரைமணந்து அவர்களோடும் இன்பமனுபவித்துவருகையில் பட்டமகிஷியான சுயம்பிரபைக்கு அமிர்தசேனனென்னும் புத்திரனொருவனும் சோதிமாலையென்னும் புத்திரியொருத்தியும் பிறந்ததும், இவர்களுக்கு முறையே சடியரசனது குமாரனை அருக்ககீர்த்தியின் மகளையும் மகனையும் மணஞ்செய்வித்ததும், இறுதியில் பயாபதியரசன் முனிவருபதேசத்தால் துறவறத்தையடைந்து தவஞ்செய்து கடவுளருளைப்பெற்று முத்தியடைந்ததுமாகிய திவ்வியசரித்திரத்தைப் பிரதானமாக விரித்தெடுத்துக்கூறுவது.

இந்நூலின் கதைப்போக்கினால் சிலசிலநீதிகளும் ஆங்காங்குப் புலப்படுவதைக் காணலாம்.

இந்நூற்கதைத்தலைவனான திவிட்டன் சமணசமயத்துக் கூறப்படுகிற ரவாகதேவர்களுள் முதல்வனான திவிபிரஷ்டவாசுதேவ னென்றும், இவ

னுக்கு அண்ணனான விசயன் பலதேவர்ஒன்பதின்மருள் முதல்வனென்றும், திவிட்டனுக்குப்பகைவனான அச்சுவகண்டன் நவப்பிரதிவாசுதேவருள் முதல்வனான அயக்கிரீவப்பிரதிவாசுதேவனென்றும் கூறப்படுவன். திவிட்டனும் விசயனும் நிறம்குணம்செயல்களால் முறையே விஷ்ணுவின்அவதாரமான கிருஷ்ணனையும்அவனது தமையனானபலராமனையும்ஒப்பர். கிருஷ்ணபலராமருள் இளையவனாகிய கிருஷ்ணனுக்குச் சிறப்புமிகுதல் போல, இவ்விருவருள் இளையவனாகிய திவிட்டனுக்கே சிறப்புமிகும். இவன் திருமாலின் அம்சமாவன். இவன் கோடிக்குன்றத்தை யெடுத்தது-கண்ணன் கோவர்த்தனகிரியைக் குடையாக ஏந்தியதையும், இவன் விசயன்முதலியோரோடு சென்று திருமாலுக்குரிய கருடவாகனம் சங்கம் சக்கரம் சார்ங்கவில் என்னுமிவற்றைப் பெற்று வித்தியாதரராசனான அச்சுவகண்டனால் ஏவியனுப்பப்பட்ட உக்கிரமான சண்டவேகையென்னும் மாயாதேவதையையும் அவனது பரிவாரங்களையும் அவனையும் உயிர்தொலைத்தது -கண்ணன் பலராமன் முதலியோருடனே கருடன்தோள்மேலேறிச்சென்று பாணாசுரனை யெதிர்த்து அவ்வசுரராசனது பரிவாரங்களுளொன்றான ஜ்வரதேவதையைச் சங்கநாதத்தால் துரத்தியோட்டி மற்றையபரிவாரங்களைச் சார்ங்கவில்லால் வென்று பாணாசுரனைச் சக்கராயுதத்தால் தோள்துணித்த வரலாற்றையும், இவன் பதினாறாயிரம் மகளிரை மணஞ்செய்துகொண்டது - கண்ணன் பதினாறாயிரம்கோபஸ்திரீகளைக் கூடினதையும் ஒக்கும்; [ஸ்ரீகிருஷ்ணனுக்குப் பிரதியாய்ச் சங்கசக்கராதியாயுதங்களையும் வனமாலை முதலியவற்றையும் கருடவாகனத்தையுஞ் செய்வித்து வைத்துக்கொண்டு யானேதிருமாலென்று கூறியிருந்தானென விஷ்ணுபுராணத்திலும் பாகவதத்திலுங் கூறப்படுகிற பௌண்டரகவாசுதேவனென்பவன்தானோ இந்தத்திவிட்டனென்று ஒருவாறு ஐயப்படவு மிடமுண்டு]. அன்றியும், இக்கதாநாயகனான திவிட்டன் கோடிக்குன்றத்தை யெடுத்தது- சீவகசிந்தாமணியிற் கதாநாயகனான சீவகன் ஆயிரம்மனிதராலும் சில யானைகளாலும் எடுக்கமுடியாத பெருங்கல்லைத் தனது கையி லேந்தி ஆடினதையும், இவன சுயம்பிரபையென்னும் வித்தியாதரமகளை மணந்தது - சீவகன் காந்தருவதத்தையென்னும் வித்தியாதரகன்னிகையைக் கலியாணஞ்செய்துகொண்டதையும் போலும்.

இந்நூல், கடவுள்வாழ்த்தும் பாயிரமுந் தவிரப் பன்னிரண்டுசருக்கங்களை யுடையது. இதன்செய்யுட்டொகை, சற்றேறக்குறைய இரண்டாயிரத்து ஒருநூறு.

இந்நூலாசிரியருடைய மதமொன்றைத் தவிர அவருடைய காலம் இடம் சரித்திரம் முதலியவிவரமொன்றும் நிச்சயமாகத்தெரியவில்லை. "திக்கெட்டும் புகழ்படைத்த" என்ற நூற்சிறப்புப்பாயிரச்செய்யுளால் இந்நூல் கார்வெட்டியரசனது காலத்திலே பாடப்பட்ட தென்றும், "நாமாண் புரைக்கும்" என்ற தற்சிறப்புப்பாயிரச்செய்யுளால் சேந்தனென்பவனது அவைக்களத்தில் அரங்கேறிய தென்றும் இவ்வளவே ஏற்படுகிறது. உரையாசிரியர்களுட்சிறந்த நச்சினார்க்கினியர் பரிமேலழகர் என்பவரால் சிந்தாமணி சிலப்பதிகாரம் மணிமேகலை வளையாபதி என்பவற்றிற்போல இந்நூலினின்று மேற்கோள்கள் எடுத்தாளப்படாமையாலும், இந்நூல் சங்கமேறியநூலன்றாதலாலும், இது அவ்வளவு பிராசீனக்கிரந்தமன்றென்று தோன்றுகின்றது. ஆயினும், யாப்பருங்கலவிருத்தியிலும் யாப்பருங்கலக்காரிகை விருத்தியுரையிலும் சிலப்பதிகாரத்து அடியார்க்குநல்லாருரையிலும் இந்நூலிலிருந்து செய்யுட்கள் எடுத்துக்காட்டப்பட்டிருத்தலாலும், அவ்வுரைகாரர்கள் இங்ஙனம் கம்பராமாயணம் கந்தபுராணம் என்பவற்றினின்று மேற்கோள்கொள்ளாமையாலும், இந்நூல் கடைச்சங்கத்தார்கால

த்தின்பின் நச்சினார்க்கினியர்பரிமேலழகர்காலத்திலில்லாமல் கம்பராமாயணம்கந்தபுராணங்களின்முன் அடியார்க்குநல்லார்முதலியோரது காலத்தில் தோன்றியதென விளங்குகின்றது. இதனால், கம்பராமாயணமரங்கேறிய "எண்ணிய சகாத்த மெண்ணூற் றேழி"ற்கும், கந்தபுராணமரங்கேறிய "ஏதமறு சகாத்த மெழுநூற்றி"ற்கும் முந்தியதெனவே, இந்நூலின்காலம் ஆயிரத்துநூற்றிருபதுவருஷங்களின்முன் இருக்கலாமென ஒருவாறு ஊகிக்கப்படுகிறது. [இங்கே சகமென்றது - சாலிவாகனசகத்தை; இப்பொழுது நடப்பது, சாலிசகம் - ௧௮௧௮-ம் வருஷம்.] இந்நூல் எந்தக் காலத்ததாயினும், யாவராலுங் கொண்டாடத்தக்க சொற்சுவைபொருட்சுவையினிமைகளில் சிந்தாமணி கம்பராமாயணங்களுக்குச் சிறிதும் பின்வாங்குவதன் றென்பது இந்நூலைக்காண்பார்க்கு விளங்காமற்போகாது.

இந்நூலுக்கு முதனூல் இன்னநூலென்று தெளிவாகத்தெரியவில்லை. தற்சிறப்புப்பாயிரத்திலுள்ள "விஞ்சைக்கிறைவன்" என்ற செய்யுளால், (மகாபுராணம் ஸ்ரீபுராணம் என்பனபோலச்) சைனசமயத்திற் சிறந்ததொருபுராணம் இதற்கு முதனூலாகுமென்று விளங்குகின்றது; மகாபுராணத்தில் இச்சரித்திரம் மிகச்சுருக்கமாகக் காணப்படுகிறது: ஆயினும், இந்நூலின் மந்திரசாலைச்சருக்கத்தில் "முன்னியவுலகுகண் விடுத்தமூர்த்தியான், மன்னியதிருமொழி யகத்தமாதரான், என்னைகொல்விரிந்தவா றெனவு மன்னனுக்கு, அன்னவனுதிமா புராணமோதினன்" என்று தொடங்கிக் கூறப்பட்டுள்ள செய்யுட்களை நோக்குமிடத்து, மகாபுராணத்தையே இதற்கு முதனூலெனக் கூறிவிடலா மெனவுந் தோன்றுகின்றது. இதுநிற்க, இந்நூலின் சுயம்வரச்சருக்கத்திற் பத்தாங்கவிமுதல் அறுபத்தெட்டாங்கவிவரையில் விரித்துக்கூறப்பட்ட விதூஷகனென்னும் விகடகவியினது விநோதங்களை உய்த்துணர்கையில், புராணத்தின் வழித்தான இந்நூலுக்கு நாடகமொன்றும் ஆதாரமாக இருத்தல்வேண்டு மெனக் கூறவுங் கூடும்.

இந்நூலை ஆறேழுவருஷங்களின் முன்னர் யாழ்ப்பாணம் ம-ா-ா-ஸ்ரீ சி. வை. தாமோதரம்பிள்ளையவர்கள், ஆறேழுபிரதிகளைக்கொண்டு பரிசோதித்து நூதனமாக வேண்டியபலதிருத்தங்களையுஞ்செய்து லோகோபகாரமாக அச்சிட்டு வெளிப்படுத்தினார்கள். அவர்கள் வெளியிடுதற்குமுன் சிலர்க்கேயன்றிப் பலர்க்குச் சூளாமணியென ஒருகாவியம் தமிழில் இருப்பதாகப் பெயருந்தெரியாது. இப்படிப்பட்ட அரியபெரியநூலைப் பழையதாயழியாதபடி புதிதாக்கி வெளிப்படுத்திய அவர்கள்திறத்தில் இந்நூலைப்படிப்பவரெவரும்நன்றிபாராட்டாமலிரா ரென்று நம்புகிறேன். அவர்கள் பதிப்புரையில் எழுதியுள்ளதனால், இந்நூல் இரண்டாவதுகாவியமெனத் தெரியவருகின்றது. மற்றையகாவியங்க ளின்னவையென ஐயமற விளங்கவில்லை. யான் இந்நூற்கு உரையெழுதத்தொடங்குகையில் ஒருமகாவித்துவானிடத்தினின்று எனக்கு மிகப்பழையதொருசூளாமணியேட்டுப்பிரதிகாணக்கிடைத்தது. அதற்கும் பிள்ளையவர்கள்பிரதிக்கும் ஒப்பிட்டுப்பார்க்கும்பொழுது இடந்தோறும் பற்பலபாடபேதங்களும் சருக்கவேறுபாடுகளும் செய்யுட்டொகைவேற்றுமையும் காணப்பட்டன. இங்ஙனமிருப்பது நமதுநாட்டு ஏட்டுப்பிரதிகளி னியல்பே. [கம்பராமாயணஏடுகள் சிலவற்றை வைத்துப் பார்த்தால் ஒவ்வொருபிரதியும்ஒவ்வொருஇராமாயணமாகஇருக்கக் காணலாம்.] எனக்குக்கிடைத்த சூளாமணியேடு மேற்படிபிள்ளையவர்கள் பலபிரதிகளைக்கொண்டு பதிப்பித்த புத்தகத்தவ்வளவு சுத்தமான தன்றாயினும், அவர்கள்தாம்செய்தபுதுத்திருத்தங்களுக்குஉதாரணமாகச்சூளாமணிமுழுப்புத்தகத்தில்அனுபந்தத்திலெடுத்துக்காட்டியமுப்பத்துமூன்றுஇடங்களுள் பதினைந்துஇடம் அவர்கள்திருத்தியவண்ணமே அவ்வேட்டுப்பிரதியி லிருந்த

ன. அவை, பிள்ளையவர்கள் பதிப்புரையில் 'நற்றிணையாதியதொகைகளிலும் பத்துப்பாட்டிலும் பின்னராய்ச்சியால் யான்இப்பொழுது செய்துவைத்திருக்கிற திருத்தங்களுள் அநேகம் அப்பொழுது யான்இவை இன்னவாறுஇருத்தல்வேண்டுமென்று உத்தேசித்தபடியே இருக்கின்றன' என்றும், 'எனது திருத்தமே பூர்வசொருபமாக இருப்பினும் இருக்கலாமே' என்றும் தாமே கூறியுள்ளபடி அவர்களுக்குப் பழையபாடங்களை உள்ளதுஉள்ளபடிகண்டுபிடிப்பதில் உள்ள தேர்ந்ததிறமையை நன்றாகத்தெரிவித்தன. இவற்றைக் கண்டு சிலகனவான்கள் பிள்ளையவர்கள்திறத்தைப்பற்றி மிகவியப்புற்றார்கள். இப்படிப்பட்ட பிரதி இன்னுமிரண்டொன்று கிடைத்தால் அவர்களது சாமர்த்தியம் முழுவதும் நன்குவிளங்கும். அன்றியும், நல்லபிரதிகள் கிடைக்குமாயின் புதுத்திருத்தங்கள்செய்யவேண்டிய பரிசிரமம் பிள்ளையவர்களுக்கு இல்லாமலுமிருக்கும்.

பதிப்பாசிரியரதுபாடத்திற்கும் குறிப்புரைக்கும் வேறுபட்ட பாடங்களையும் பொருள்களையும் இவ்வுரையில் ஆங்காங்குக் காணக்கூடும்; அறிவுடையார் அவற்றில் ஏற்றனகொள்வர்.

இந்நூலின் சரித்திரத்தைச் சுருக்கி எட்டுப்பக்கங்களில் அடக்கி வசனரூபமாக யாழ்ப்பாணம் ம-ா-ா-ஸ்ரீ. தாவடி அம்பிகைபாகஉபாத்தியாயரவர்கள் எழுதியுள்ளார்கள்; அதனை, புதுக்கோட்டை ம-ா-ா-ஸ்ரீ. இராதாகிருஷ்ணையரவர்களது நான்காம்வகுப்புத் தமிழ்ப்பாட புத்தகத்திற் காண்க: அது, இந்நூலின்கதையைத் தொடர்ச்சியாக அறிவதற்கு மிக உபயோகமானது.

சிந்தாமணியோடொத்த சிறப்பையுடைய இச்சூளாமணிக்கு நச்சினார்க்கினியர்போன்ற நல்லறிவினரே தக்கவுரை செய்தற்பாலரன்றிச் சிற்றறிவுடைய சிறியேன் போலியர் உரைசெய்தற்குச் சிறிதுந்தக்கவரல்லர். அந்த வேதபோத நச்சினார்க்கினியர்தாமே சிந்தாமணிக்கு முதல்முறை ஒருரையெழுதி, அவ்வுரை ஜைனவித்துவான்களால் அங்கீகரிக்கப்படாமற்போகவே, பின்பு ஆருகதநூல்கள் பலவற்றையும் நலமுறஆராய்ந்து இரண்டாமுறை தக்கதோருரையெழுதி அவர்கள் வியந்து அங்கீகரிக்கச் செய்தாரென்றால், அந்நூலோடொத்த இதற்கு யானோ உரையெழுதற்கு ஏற்றவன்! "எழுத்தின் திறனறிந்தோ இன்சொற்பொருளின், அழுத்தந் தனிலொன்றறிந்தோ—முழுத்தும், பழுதற்றமுத்தமிழின் பாடற் குரையின், றெழுதத் துணிவதே யான்" என அடியார்க்குநல்லார்கூறிய அவையடக்கம் என்போலியர்க்கு உண்மையன்றோ? இப்படியிருக்கவும் யான் இந்நூற்கு உரையியற்றினது "உற்றிங்கொர்காதல்கிளரத்தமிழ்நூற்கலுற்றேன்" என இந்நூலிலும், "ஆசைபற்றியறையலுற்றேன்" எனக் கம்பராமாயணத்திலுங் கூறியுள்ளபடி வெறும் விருப்பமாத்திரத்தினாலேயே யென்று கருதி நல்லுணர்வுடையபெரியோர் இவ்வுரையிற் காணப்படுங் குற்றங்களை ஒருபொருளாகக் கொள்ளாமற் பொறுத்தருளுவார்களென்று நம்புகிறேன். "சிறியோர்செய்த சிறுபிழையெல்லாம், பெரியோராயிற் பொறுப்பதுகடனே," "குணநாடிக் குற்றமுநாடியவற்றுள், மிகைநாடிமிக்ககொளல்," "கற்றோர்கள்தாமுகப்பர்கல்விதனிலாசையுள்ளோர், பெற்றோமெனவுகந்து பின்புகற்பர்—மற்றோர்கள், மாச்சரியத்தாலிகழில்வந்ததென் னெஞ்சேயிகழ்கை, ஆச்சரியமோதானவர்க்கு" என்ற நீதிகளை அறிந்தவர் பெரியோராதலால், அவர்கள்பக்கல் யான் அதிகமாக விண்ணப்பஞ்செய்யவேண்டுவது யாதுஉளது?

பெரியோரிடத்துக் கற்றுங் கேட்டு முள்ளவற்றில் மறப்பெனும் பகைவன் வாரிக்கொண்டதொழிய அவன்கையிலகப்படாதபடி நெஞ்செனுந் துணைவன் நிறுத்திவைத்தவற்றைக்கொண்டு ஆங்காங்கு அவசியமான

பதப்பிரயோசனங்களையும் இன்றியமையாத இலக்கணக்குறிப்புக்களையும் முக்கியமான கதைகளையும் எடுத்துக்காட்டி, பதப்பொருளுங் கருத்தும் விசேஷார்த்தங்களும் சொற்சுவைபொருட்சுவை முதலியனவும் யாப்பிலக்கண அணியிலக்கணங்களும் அங்கங்கே இனிது விளங்குமாறு தெரிந்தவரையில் ஜைனசம்பிரதாயத்துக்குப் பொருந்த, இவ்வுரை செய்யப்பட்டது.

இந்நூல், பி - ஏ பட்டப்பரீக்ஷைக்குப்பாடமாகத்தக்கதேயன்றி யப்-ஏ தாரதிக்குத் தருந்ததன்றுதலால், இதனுரையிலும் சிற்சிலவிஷயங்கள் அவ்வகுப்புமாணாக்கர்க்கு மேற்பட்டனவாயுமிருக்கும்; அவற்றையும் சிறிதுசிரமமெடுத்துக்கொண்டு பிள்ளைகள் அறிந்துகொள்வது மிகநலம்.

சிந்தாமணியிற்போலவே இந்நூலிலும் பலநாளாகப் பயிற்சியையுடைய கும்பகோணம் கவர்ன்மெண்டு காலெஜ் தமிழ்ப்பண்டிதர் மகாவித்துவான் ஸ்ரீமத். உ-வே. சாமிநாதையரவர்கள், தாம் இந்நூலில் ஆராய்ந்தறிந்துள்ள சிலஅரியபெரியவிஷயங்களை எனக்கு அன்புடன் தெரிவிப்பதாகச் சொல்லியிருந்தார்கள். அவற்றைக் கேட்டு அறிந்து இவ்வுரையிற்சேர்ப்பதற்குப் போந்த அவகாசம் இப்பொழுது இல்லாமற்போனதைப்பற்றி மிகஇரங்குகிறேன். இனிச் சந்தர்ப்பப்படுமாயின், அவையும் அவைபோன்றபிறவுஞ் சேர்த்துத் தனியே ஒருஅனுபந்தமாக வெளியிடப்படும்.

சென்னைக் கோவிந்தநாயகர்மிடில்ஸ்கூல் தமிழ்ப்பண்டிதர் ம-ா-ா-ஸ்ரீ ஆ. சிங்காரவேலுமுதலியாரவர்கள் இந்நூலுக்கு ஒருஉரையெழுதி முதலில் வெளியிட்டிருந்தாலும், மற்றைய யப் - ஏ பாடங்களுக்கு உரையெழுதியுள்ள யானே இதற்கும் ஏற்றதோருரையெழுதிப் பிரசுரிப்பது நலமென்று பலமாணாக்கர்களும் சிலபோதகாசிரியர்களும் அபிப்பிராயப்பட்டதனாலும், அவர்களுரை வெளிப்படுதற்குமுன்னமே யான் உரையெழுதத்தொடங்கிவிட்டதனாலும், இந்த வியாக்கியானம் வெளியிடப்பட்டது.

திருவல்லிக்கேணி ஆங்க்லோவர்னாக்யுலர்ஹைஸ்கூல் பிரதம தமிழ்ப்பண்டிதரும், எனதுநண்பருமாகிய ஸ்ரீ-உ-வே. திரு - இராகவாசாரியர் இவ்வுரைவிரைவில்முடிந்துவெளிவரும்பொருட்டு உடனிருந்து செய்த உதவி ஒருபொழுதும் மறக்கற்பாலதன்று.

பரீக்ஷைக்குப்படிக்கும் மாணாக்கர்களுக்குப் போதுமானவளவு எனது சிற்றறிவிற்குஎட்டியமட்டிற்செய்த இவ்வுரையிலுள்ள குற்றங்குறைகளையாயினும் எனக்குப்புலப்படாத அரியபெரிய வேறுபல விஷயங்களையாயினும் எடுத்து எவராயினும் எனக்குத் தெரிவிப்பாராயின், அவரைப் பேருதவிசெய்தவராக நன்குமதித்து மகிழ்வோடு அவர்பக்கல் நன்றிபாராட்டுவதுடன் அவ்விஷயங்களை அவர்பெயருடனே பிரசுரஞ்செய்து மாணாக்கர்களுக்குக் கொடுத்துப் பயன்படும்படிசெய்யச் சித்தனாயிருக்கின்றேன்.

மன்மத ௵ }
பங்குனி ௴ } வை - மு - சடகோபராமாநுஜாசாரியன்.

---

## இப்புத்தகத்தில் அடங்கியவை.





# நூற்சிறப்பு

நூலினது பெருமையை யுணர்த்துஞ் செய்யு ளென்று பொருள்; ஆறும் வேற்றுமைத்தொகை: சிறப்பு - அதனைத்தெரிவிக்கும் பாட்டுக்கு இங்கே ஆகுபெயர்.

(இதன்பொருள்.) செழு - சிறந்த, தாளம் - முத்தாகிய, தோளா - துளைக்கப்படாத, மணியை - இரத்தினத்தை, நகும்-இகழ்ந்து சிரிக்கின்ற, தோலா மொழி - (எப்பொழுதும் எவர்க்கும் எவற்றிற்கும்) தோற்காத சொற்களை யுடைமையாகிய காரணத்தாற் பெயர்பெற்ற தோலாமொழித் தேவரால், தொகுத்த - செய்து அமைக்கப்பட்ட, சூளாமணி அகத்து - சூளாமணியென்னுங்காப்பியத்தினிடத்திலுள்ள, சொல் - சொற்கள், பொருள் பொழிந்து விளக்கும் - அருத்தத்தை மிகுதியாகச்சொரிந்து விளங்கச் செய்யும்; இருள் போழ்ந்து கால்சீக்கும்-(அஜ்ஞானமென) இருளைப் பிளந்து ஒழிக்கும்; இழிந்தவரை ஏற்றி நிறுத்தும் - (கல்வியறிவில்) தாழ்ந்தவர்களை உயர்வடைவித்து நிலைநிற்கச்செய்யும்; (என்றவாறு.)

தாளம் - வடசொல். தோளா, தோலா - ஈறுகெட்ட எதிர்மறைப் பெயரெச்சங்கள்; தோள், தோல் - பகுதிகள். 'மணியை நகும்' என்ற அடைமொழியை மொழிக்காவது சொல்லுக்காவது கூட்டுக. மணியை நகும் என்பதற்கு - மணியோடு ஒப்பாகாத, மணியினும் மேம்பட்ட என்று கருத்து. சொல்லுக்கு, முத்தை உவமைகூறுதல் - தெளிவிற்கும், ஒழுங்கிற்கும், மதிப்பு மிகுதிக்குமென்க. துளையிடப்படாத முத்தெனச் சிறப்புக்கு எடுத்துக்கூறுதல், அது அழிவடையாது பலவகையாலும்பயன்படக்கூடிய பெருமையைக் கருதி; 'நடுவிற்புரைசனுண்டானால் முத்தும்பந்தனைப்படுகிறது' என்றபஞ்சதந்திரவாக்கியத்திலும், துளையுள்ளமுத்தினுந் துளையில்லாதமுத்துக்கு உள்ள சிறப்புத் தோன்றுதல் காண்க. தோலாமொழி - அடையடுத்த வினையாகுபெயர்; அன்மொழித்தொகையாகா: வினைத்தொகை முதலிய ஐவகைத்தொகைகளில் ஒன்றின் புறத்துப் பிறவாமையின். நகும்- இங்கே, நகை, இகழ்ச்சிபற்றியது. நகும் என்பதை வினைமுற்றாக்கியும் உரைக்கலாம். ஆராய்ச்சி செய்யச் செய்யப் பொருள் மேல்மேல அளவுபடாது தோன்றுதலால், 'பொழிந்து பொருள்விளக்கும்' எனப்பட்டது; இதனால், நூலழகுபத்தினுள் சுருங்கச்சொல்லல், விளங்கவைத்தல், ஆழமுடைத்தாதல், உலகமலையாமை, விழுமியதுபயத்தல் என்ற ஐந்தின் அமைதி கூறப்பட்டது. 'தோலாமொழி தொகுத்த சூளாமணி' என்றதனால், நன்மொழிபுணர்த்த லென்ற அழகு பெறப்படும். சூளாமணியென இந்நூலை ஒருஇரத்தினமாகக்கூறியதற்கு ஏற்ப,'போழ்ந் திருள் கால்சீக்கும்,' 'இழிந்தவரை யேற்றி நிறுத்தும்' என்றார்; ஒளியால் இருளைப் பிளந்து ஒழித்தலும், வறுமையினால் தாழ்ந்தவரைச் செல்வத்தினால்உயர்த்தி அந்நிலையில் நிறுத்துதலும் இரத்தினத்தின் இயல்பு. மணி ஒளியைப்பொழிந்து பொருள்களை விளங்கச்செய்தல்பற்றி, 'பொழிந்துபொருள்விளக்கும்' என்றது. போழ்ந்திருள்கால்சீக்கும், இழிந்தவரையேற்றிநிறுத்தும் என்றவற்றால், கற்றோர்க்கு கலையறிவுதந்து அறம்பொருள்இன்பம்வீடு என்னும் நாற்பொருட்பயனையும் விளைக்குஞ் சிறப்பு விளக்கப்பட்டது. கால்சீத்தல் - துடைத்தல், நீக்கல்; ஒருசொல்: இதில், கால் என்பது - வினைப்பகுதியோடு சேர்ந்து வந்து பொருளுணர்த்தாத தமிழுபசர்க்கம்; இதனைத் துணைப்பெயரென்பர். தாள மணி யென இயையும். 'தோளாமணி தொகுத்தாற் போலாதே தோலாக்கீர்' என்ற பாடத்துக்கு, தோலாக்கீர் - தோலாமொழிப்புலவர்; கீர் - சொல்: வடமொழி; தோளாமணிதொகுத்தாற்போலாதே-துளையிடப்படாத முத்துக்களை ஒருங்குசேர்த்துவைத்தாற்போலு மன்றோ? போலாது - எதிர்மறைமுற்று, ஏ - எதிர்மறையிடைச்சொல்: இரண்டெதிர்மறை, உடன்பாடு உணர்த்திற்று.

இச்செய்யுள் "தன்னாசிரியன் தன்னொடுகற்றோன், தன்மாணாக்கன் தகுமுறைகாரனென், றின்னோர் பாயிரமியம்புதல்கடனே" என்றபடி பிறரொருவர் நூலின்சிறப்பைக்கூறிய தென்க. இதனைச்செய்தவர் இன்னாரென விளங்கவில்லை. நூலாசிரியர்காலத்திலேயே ஏற்பட்ட (பழம்) பாடலாகவே தோன்றுகின்றது. மேற்கவியும் இவ்வாறே.

"ஆக்கியோன் பெயரே வழியே யெல்லை, நூற்பெயர் யாப்பே நுதலிய பொருளே, கேட்போர் பயனோ டாயெண் பொருளும், வாய்ப்பக் காட்டல் பாயிரத்தியல்பே," "காலங்களனே காரணமென்றிம், மூவகையேற்றிமொழிநரு முளரே" எனக் கூறிய சிறப்புப்பாயிரத்திலக்கணம் பதினொன்றில ஆக்கியோன்பெயர், நூற்பெயர், பயன் என்ற மூன்றும் இச்செய்யுளில் விளங்கும்.

நாளென்னும் வாய்பாட்டால் முடிந்த இருவிகற்பநேரிசைவெண்பா.(க)

(இ - ள்.) புயல் அனைய கையன் - மேகம்போலக் கைம்மாறுகருதாது தருகிற கைகளையுடையவனும், தெவ்வை கை கொட்டி நகைக்கும் இகல் - பகைவர்களைக் கைதட்டிச்சிரிக்கும் [மிகஎளிதில் அவமதித்து வெல்லும்] வல்லமையையுடைய, கார்வெட்டி அரையன் - கார்வெட்டிநகரத்து அரசனும், வளம் நாடன் - எல்லாவளங்களையுமுடைய நாட்டையுடையவனும் ஆகிய, திக்கு எட்டும் புகழ் படைத்த திறல் விசயற்கு - எட்டுத்திக்குக்களிலுங் கீர்த்தியைப்பெற்ற பெருமையையுடைய விசயனென்பவனுக்கு, ஏற்ப - தக்கபடி, பொக்கு எட்டும் பத்தும் இலான் - எட்டுக்குற்றங்களும் பத்துக் குற்றங்களும் இல்லாதவனாகிய, புகழ் தருமதீர்த்தன் - கீர்த்தியையுடைய அருகக்கடவுளினது, மலர் பதம் - செந்தாமரைமலர்போன்ற திருவடிகளை, பூசிப்போன் - பூசைசெய்பவரும், சொற்கு எட்டா வான் - (சொல்பவர்) சொற்களுக்குஎட்டாதசிறப்புடையவருமாகிய, தோலாமொழி - தோலாமொழிப்புலவரால் (செய்யப்பட்ட), சூளாமணி - சூளாமணியென்னுங் காப்பியத்தை, உணர்வோர் - அறிபவர், துறை கண்டோர் - (தமிழ்ப்பாஷையின்) எல்லைமுழுவதையும் அறிந்தவராவர்; (எ - று.)— ஈற்றுஏகாரம்-தேற்றம்.

'ஏற்ப' என்னுஞ் செயவெனெச்சம், வருவிக்கப்பட்ட 'செய்யப்பட்ட' என்னும் பெயரெச்சவினையைக் கொள்ளும். திக்குஎட்டு-கிழக்குமுதலியன; உம்மை - முற்றுப்பொருளது. இனி, எட்டும்என்பதைப் பெயரெச்சமாக்கொண்டு, எல்லாத்திக்குக்களிலுஞ்சென்றுபரவிய கீர்த்தி என்றும் உரைக்கலாம். விஜயன் - மிக்கவெற்றியுடைமைபற்றிய காரணப்பெயர். புயலனையகை - பயனுவமை; "கைம்மாறுவேண்டா கடப்பாடுமாரிமாட், டென்னாற்றுங் கொல்லோ வுலகு" என்றார் திருவள்ளுவனார். அரையன் - அரசனென்பதன் போலி. நாடற்கு என்பதன் நான்காம்வேற்றுமையுருபு, பிரித்து 'விசயன்' என்பதனோடு கூட்டப்பட்டது. குற்றமெட்டு - ஞானாவரணீயம், தரிசனாவரணீயம், வேதநீயம், மோகநீயம், ஆயு, நாமம், கோத்திரம், அந்தராயம் என்பன. பொக்குஎன்பதனைப் பத்தும்என்பதனோடுங் கூட்டுக. பத்துக்குற்றம் - பொய், கோள், கடுஞ்சொல், பயனில்சொல், களவு, வீண், கொலை, தீநினைவு, பெண்ணாசை, பொருளாசை எனப்படும்; பத்துக்குற்றங்களுக்குக் கூறப்படும் வேறுவகையைச் சைனநூல்களிற் காண்க. தருமதீர்த்தன்-அறத்தின்வடிவமானபரிசுத்தமூர்த்தி. பதத்திற்கு மலர் உவமை - மென்மைக்கும், செம்மைக்கும், தண்மைக்கு மென்க. வான் - வடசொல். தமிழ்ப்பாஷை கடலாதலால், துறை - அதன்இறங்குதுறையென்றுங் கொள்ளலாம்; என்றது- அகப்பொருள் புறப்பொருள்களின் துறைகளை: இலக்கண இலக்கிய வகைகளையுமாம். எல்லாநூல்களையும்படித்ததன்பயனாகஉண்டாகும் அறிவை இந்நூலொன்றே தருமென்பதாம். ஈற்றேகாரத்தை உணர்வோரென்பதனொடுகூட்டி, பிரிநிலைப்பொருளதாக்கி, சூளாமணியையறிந்தவர்க

ளே தமிழ்த்துறையையறிந்தவராவ ரென்றும் உரைக்கலாம். காணுதல் - இங்கே, அறிவினால் நோக்குதல். திக்-வடசொல்.

இச்செய்யுளில், சிறப்புப்பாயிரத்திலக்கணங்களுள் முற்கூறியவற்றோடு நூலின்காலமுங் கூறப்பட்டது. 'விசயற்குஏற்ப'என்றதனால்,விசயராசனது வேண்டுகோளாற்பாடப்பட்டதெனக்கொள்க; அவனுக்கேற்றபடி சிறப்பாகப்பாடப்பட்ட தென்றுங் கூறலாம்.

இது - ஈற்றுச்சீரிரண்டும் மாச்சீர்களும் மற்றவைநான்குங் காய்ச்சீர்களு மாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட அறுசீராசிரியவிருத்தங்கள். (உ)

## இப்புத்தகத்தில்வரும் பெயர்களின் அகராதி.

அச்சுவகண்டன்=அச்சுவக்கிரீவன் - இரத்தினபல்லவநகரத்தரசன்; மயூரகண்டனது மகன்; பூலோகவித்தியாதரலோகங்கள்முழுவதுந் திறைபெற்றுத் தலைமைசெலுத்தியவன்; இவன் - நவப்பிரதிவாசுதேவருள் முதல்வனாவன்; இவன், திவிட்டனாற் கொல்லப்பட்டான்.

அரிகேது - ஒருவித்தியாதரன்; மாயைச்சிங்கமாக வந்தவன்.

அரிமஞ்சு - அச்சுவகண்டனது மந்திரி.

இரத்தினபல்லவம் - ஒருவித்தியாதரநகரம்; அச்சுவகண்டனுடையது.

இரதநூபுரம் - ஒருவித்தியாதரநகரம்; சடியரசனுடையது.

சசி - பயாபதியரசனது இளைய ராணி; திவிட்டன்தாய்.

சடி - இரதநூபுரநகரத்து வித்தியாதரராசன்; அருக்ககீர்த்தியென்பவனுக்குஞ் சயம்பிரபைக்குந் தந்தை; திவிட்டனுக்குப் பெண்கொடுத்தவன்.

சதவிந்து-ஒருநிமித்திகன்;பயாபதிக்குக்கனவும்அதன்பயனுங்கூறியவன்.

சயம்பிரபை=சுயம்பிரபை - திவிட்டன்மனைவி; சடியரசன்மகள்.

சுரமை - பயாபதியரசன்நாடு.

திவிட்டன் - பயாபதிக்குச் சசியினிடம் பிறந்த குமாரன்; விசயன்தம்பி; நவவாசுதேவஅவதாரத்தில் ஒருவன்; இவனே, இக்காப்பியத்தலைவன்.

திருமகாந்தன் - புட்பமாகரண்டமென்னும் அரசனதுசோலைக்குக் காவலாக வைக்கப்பட்டவன்.

பயாபதி=பிரஜாபதி - சுரமைநாட்டுப் போதனநகரத்து அரசன்; திவிட்டனுக்கும் விசயனுக்குந் தந்தை;வாகுவலியின் வமிசத்திலே தோன்றியவன்.

புட்பமாகரண்டம் - பயாபதியரசனது உத்தியானவனம்.

போதனம் - பயாபதியரசனது இராசதானி.

மருசி - சடியரசனால் பயாபதியினிடம் அனுப்பப்பட்ட தூதன்.

மிகாபதி=மிருகாபதி - பயாபதியரசனது முதல்மனைவி; விசயன்தாய்.

விசயன் - பயாபதிக்கு மிகாபதியினிடம் பிறந்த குமாரன்; திவிட்டன் தமையன்; இவன - பலதேவர் ஒன்பதின்மருள் ஒருவன்.

## பிழைதிருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம் |
|---|---|---|---|
| ௨௪ | ௨௪ | வீங்கிருக் | வீங்கிருய |
| ௨௭ | ௫௮ | தணிச் | விதணிச் |
| ௨௮ | ௧௭ | ஞால் | ஞால் |

ககரச்சருக்கம், ஏழாம்பாட்டு, முதலிரண்டடி - "கண்ணிலாக் கவர்வன கனக கூடமும், வெண்ணிலாச் சொரிவன வெள்ளி வேயுளும்" என அடியார்க்குநல்லார்கொண்ட பாடம்.

நகரச்சருக்கம், இருபத்தாறும்பாட்டு, ஏமத்து ஒத்து அலர்ந்தவர் என்பதற்கு - பொன்னையொத்து விளங்குபவ ரென்றும் உரைக்கலாம்.

ஸ்ரீ

கடவுள் துணை.

# சூளாமணி

சூளாமணி - சூடாமணி; இது, வடநூல்முறைப்படிவந்த டகரளகரப் போலி. இது - சூளா, மணி என்னும் இரண்டுவடமொழிகள் தொக்கு நின்றதோர் தொகைநிலைத்தொடர்மொழி. இதனை ஏழாம்வேற்றுமை உருபும்பயனும் உடன்தொக்கதொகை யென்றால் தலையிலணியும்இரத்தினமென்றும், ஆறும்வேற்றுமைத்தொகை யென்றால் தலையினதுசம்பந்தமான மணி யென்றும் விரிந்து பொருள்படும். சூளாமணியென்னும் ஒருவகைத் தலையணியின்பெயர், 'சிந்தாமணி' என்பதுபோல இங்கு உவமவாகுபெயராய், யாவராலுந் தலைமேற்கொண்டு கொண்டாடத்தகுவதொரு சிறந்த நூலுக்குக் காரணக்குறியாயிற்று. சூடாமணியென்னும் வடசொற்றொடர் சூளாமணியெனத் திரிந்துவழங்குவதைக் கம்பராமாயணத்துச் சுந்தரகாண்டத்துச் சூளாமணிப்படல மென்னுமிடத்தும், இது நூலுக்குப்பெயராகி வருதலை 'சத்திரசூளாமணி,' 'சூடாமணிநிகண்டு' என்னுமிடங்களிலுங் காண்க. சூடா - தலைமயிர்முடி; இது ஆவீறுஐயாய்த்திரிந்து சூடையென்றும், சிதைந்து சூட்டென்றும் வழங்கும். மணி - இரத்தினம் : இதற்கு- யாவராலுங் கொண்டாடப்படுவ தென்று வடநூலார் உற்பத்தியருத்தங் கூறுவர்; [மண் - அலங்காரம், அதனையுடையது - மணி எனத் தமிழ்வழியால் இதற்குக் காரணப்பொருளுரைத்தல், பொருந்தாது: வடசொல்லாதலின்.] சூளாமணி - சிரோரத்தினம். (கருதியபொருள்கொடுக்குஞ்) சிந்தாமணி, (திருமால்மார்பிலணிந்துள்ள) கௌத்துவமணி, (சூரியன்கழுத்திலணியும்) சியமந்தகமணி என்பனபோலச் சூளாமணியென்பதும் ஒருதேவமணியென்று பிங்கலந்தையென்னுந் தமிழ்நிகண்டிற் கூறப்பட்டிருப்பினும் அதற்கு வடமொழியில் ஆதாரங் கிடைத்திலது. இந்நூல் - சொற்பொலிவு, பொருளமைதி, நடையழகு, கதைமுடிவு முதலிய பல விஷயங்களிற் சீவகசிந்தாமணியென்னுஞ் சமணமகாகாவியத்தைப் பெரும்பாலும் ஒத்துள்ளது; அதிற் பிரதானவாசனைச் சிற்சிலவிடங்களிற் சிந்தாமணியெனக் கூறியிருத்தல்போல இதிற் சூளாமணியெனக் கூறுதலும் பிறவுங் காண்க.

இந்நூல், முதலிற் கடவுள்வாழ்த்தும் பாயிரமும் அமையப்பெற்று, பின்பு நாட்டுச்சருக்கம், நகரச்சருக்கம், குமாரகாலச்சருக்கம், இரதநூபுரச்சருக்கம், மந்திரசாலைச்சருக்கம், தூதுவிடுசருக்கம், சீயவதைச்சருக்கம், கல்யாணச்சருக்கம், அரசியற்சருக்கம், சுயம்வரச்சருக்கம், துறவுச்சருக்கம், முத்திச்சருக்கம் எனப் பன்னிரண்டு சருக்கங்களாகப் பகுக்கப்பட்டிருக்கின்றது.

இப்பொருட்டொடர்நிலைச்செய்யுளைத் தேவர் செய்கின்ற காலத்திற்கு நூல் அகத்தியமுந் தொல்காப்பியமு மாதலானும், "முந்துநூல் கண்டு முறைப்பட வெண்ணி" என்ற தொல்காப்பியச்சிறப்புப்பாயிரத்தால் அகத்

இயத்தின்வழிநூல்தொல்காப்பியமாதலானும், பிறர்கூறியநூல்கள் நிரம்பியஇலக்கணத்தனவன்மையாலும், அந்நூலிற்கூறிய இலக்கணமே இதற்குஇலக்கணமென்று உணர்க: அந்நூலிற் செய்யுளியலில் ஆசிரியர், பாநான்கென்றும் அவற்றைஅறம்பொருளின்பத்தாற்கூறுகவென்றுங் கூறி,பின்பு அம்மைமுதலியஎட்டுந் தொடர்நிலைச்செய்யுட்குஇலக்கணமென்று கூறுகின்றவிடத்து, "இழுமென் மொழியான் விழுமியது நுவலினும், பரந்த மொழியா னடிநிமிர்ந் தொழுகினுந், தோலென மொழிப தொன்மொழிப் புலவர்" என்னுஞ்சூத்திரத்தால்,'அறம் பொருள் இன்பம் வீடு என்னும் விழுமியபொருள் பயப்பப் பழையதோர்கதைமேற் கூறின் அது தோல்' என்றுகூறினமையின், இப்பெருங்காப்பியம் அங்ஙனங்கூறிய தோலாமென்று உணர்க. [பா நான்காவன - ஆசிரியப்பா, வஞ்சிப்பா, வெண்பா கலிப்பா என்பன. அம்மைமுதலிய எட்டாவன-அம்மை, அழகு, தொன்மை, தோல், விருந்து, இயைபு, புலன், இழைபு என்பன.]

மூன்றுநூல்களிற் காப்பியமென்னும்வடமொழியால் தொடர்நிலைச்செய்யுட்குப் பெயரில்லையாயினும், ஆசிரியர் தொல்காப்பியனார், "வடசொற்கிளவி வடவெழுத் தொரீஇ, எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே" என்றதில் 'ஆகும்மே' என்ற இலேசினால் உய்த்துணர்தற்பாலதனை மாணாக்கன் ஐயந்தீர்தற்கன்றே பின்னும் "சிதைந்தன வரினு மியைந்தன வரையார்" என்பாராயினா ரெனக் கொள்க; அன்றியும், பெரியதனைப் பெருங்காப்பியமென்றே கூறல்வேண்டுதலானும், உதயணன்கதை, சிந்தாமணி, மணிமேகலை முதலிய சான்றோர்செய்யுளுள்ளுங் காப்பியமென்னும்பதம் பிரயோகிக்கப்பட்டுள்ளதனானும், சொற்றொடர்நிலை பொருட்டொடர்நிலையென்னுஞ் செய்யுட்குக் காப்பியமென்றுபெயர் கூறுதலும் ஆசிரியர்கருத்தென்க.

பெருங்காப்பியத்தின் இலக்கணத்தை "பெருங்காப் பியநிலை பேசுங் காலை, வாழ்த்து வணக்கம் வருபொரு ளிவற்றினொன், றேற்புடைத் தாகி முன்வர வியன்று, நாற்பொருள் பயக்கு நடைநெறித் தாகித், தன்னிக ரில்லாத் தலைவனை யுடைத்தாய், மலைகட னாடு வளநகர் பருவ, மிருசுடர்த் தோற்ற மினையன புனைந்து, நன்மணம் புணர்தல் பொன்முடி கவித்தல், பூம்பொழில் நுகர்தல் புனல்விளை யாடல், தேம்பிழி மதுக்களி சிறுவரைப் பெறுதல், புலவியிற் புலத்தல் கலவியிற் களித்தலென், றின்னன புனைந்த நன்னடைத் தாகி, மந்திரந் தூது செலவிகல் வென்றி, சந்தியிற் றொடர்ந்து சருக்க மிலம்பகம், பரிச்சேத மென்னும் பான்மையின் விளங்கி, நெருங்கிய சுவையும் பாவ [भाव] மும் விரும்பக், கற்றோர் புனையும் பெற்றிய தென்ப" இச்சூத்திரத்தால் அறிக; பெருங்காப்பியமாவது - வாழ்த்து தெய்வவணக்கம் தலைமைப்பொருளுரைத்தல் என்கிற மூன்றி லொன்றை முதலிற்பெற்று, அறம்பொருளின்பம்வீடென்னும் நாற்பொருளையுந் தருந்தன்மையதாய், சிறந்ததோர் தலைவன்மேலதாய், நாடு, நகரம், மலை, கடல், காலம், சந்திரசூரியர் உதயஅத்தமனம், விவாகம், முடிகவித்தல், பொழில்விளையாட்டு, நீர்விளையாட்டு, மதுபானம், மக்கட்பேறு, கலவியிற்களித்தல், புலவியிற் புலத்தல், மந்திரம், தூது, போர்ச்செலவு, போரிடல், வெற்றி முதலிய பலவகைவருணனைகளை யுடையதாய், சருக்கம் இலம்பகம் பரிச்சேதம் முதலான பாகுபாடுகள் பொருந்தி, வீரம்முதலியசுவைகளும் அவற்றைவிளக்குங்கருத்துக்களும் விளங்க, காதிற்கினிய ஒருதிறப்பாட்டாலேனும் பலதிறப்பாட்டாலேனுங் கட்டுரையாலேனுங் கற்றோரால் இயற்றப்பட்டிருப்பதாம்: இங்குக்கூறிய வருணனைகளுள் சிலகுறைந்துவரினுங் குற்றமில்லை; இங்ஙனங்கூறியதனால் இது ஒருகதையின்மேலதென்றதாயிற்று.

## காப்பு.

காப்பு - காத்தல்; அது - இங்கு, காக்கின்ற கடவுள் விஷயமான வணக்கத்துக்குத் தொழிலாகுபெயர்: ஆகவே, கவி தனக்குநேரிடத்தக்க இடையூறுகளைநீக்கித் தனதுஎண்ணத்தைமுடிக்கவல்லதோர் பொருளின் விஷயமாகச் செய்யுந் தோத்திர மென்பது கருத்து.

(இதன்பொருள்.) வினையின் தொகை - ஊழ்வினைகளின் கூட்டத்தை, வென்றோன் ஆகி - சயித்தவனாய், ஒன்று ஆய் - ஒப்பில்லாமல் தனிப்பட்டதாய், தன்கண் விரிந்து பரந்த - தன்னிடத்து விசாலமாய்ப்பரவிய, உணர்வின் - நுண்ணறிவினால், ஒழியாது முற்றும் சென்றோன் - குறைவில்லாமல் முழுவதும் அறிந்தவனும், திகழும் சுடர் சூழ் ஒளி மூர்த்தி - விளங்குகின்ற ஒளி மண்டலத்தாற் சூழப்பட்ட ஒளிமயமான வடிவமுடையவனும், ஆகி - ஆய், நின்றோன் - அழியாதுநின்ற அருகக்கடவுளினது, அடிக்கீழ் - திருவடிகளிலே, பணிந்தார் - வணங்கினவர், வினை நீங்கி நின்றார் - இருவகைவினையும் ஒழிந்து (முத்தியுலகத்து அழியாது நிலை) நின்றவராவர்; (என்றவாறு.)

கடவுள்வணக்கம் இரண்டுவகைப்படும்; வழிபடுகடவுள்வணக்கமென்றும், ஏற்புடைக்கடவுள்வணக்கமென்றும். வழிபடுகடவுள்வணக்கமாவது - தாம்தாம்குலதெய்வமாகக்கொண்டுஆராதிக்கின்ற கடவுளை வணங்குதல்; இதற்கு உதாரணம் - வைஷ்ணவசமயத்தார் விஷ்ணுவையும், சைவமதத்தவர் சிவனையும், ஜைனர் ஜினனையும், பௌத்தர் புத்தனையும் வணங்குவது போல்வன. ஏற்புடைக்கடவுள்வணக்கமாவது - தாம்தாம்செய்யவெடுத்துக் கொண்டகாரியத்துக்குத்தகுதியையுடையகடவுளை வணங்குதல்; இதற்கு உதாரணம் - இராமாயணங்கூறுபவர் இராமனையும், பாகவதஞ்சொல்பவர் கண்ணனையும், கந்தபுராணம்உரைப்பவர் சுப்பிரமணியக்கடவுளையும் வணங்குவது போல்வன. அருகமதத்தைச்சேர்ந்தவரான இந்நூலாசிரியராற் கூறப்பட்ட அருகக்கடவுளின் விஷயமான இச்செய்யுள் அவ்விருவகைவணக்கத்துள் வழிபடுகடவுள்வணக்கமா மென்க; அன்றியும், அக்கடவுளின் அடியையடைந்து அவனருள்வழிப்பட்டு உயர்கதிபெற்ற அடியவர்களது வரலாறு இந்நூலுட் கூறப்படுவதாகிய காரணமொன்றைக்கொண்டு இதனை ஏற்புடைக்கடவுள்வணக்கமெனவும் இடமுண்டு.

மனம் மொழி மெய் என்னுந் திரிகரணங்களால் முறையே செய்யப்படுகின்ற மானஸிகம் வாசிகம் காயிகம் என்கிற மூவகைக்கடவுள்வாழ்த்துக்களுள் இது இடையிலேயுள்ள வாசிகமென்பதாகு மென அறிக.

ஆசீர்வாதம், நமஸ்காரம், வஸ்துநிர்த்தேசம் எனப்படுகின்ற மூன்று வகையான மங்களங்களுள் இது வஸ்துநிர்த்தேச ரூபமான மங்களமாம்.

"வாழ்த்தியல் வகையே நாற்பாற்கு முரித்தே" என்ற தொல்காப்பியச் செய்யுளியற் சூத்திரத்தில் 'வகை' என்றதனாற் கொண்ட அறுமுறை வாழ்த்தன்றித் தனக்கும் பிறர்க்கும் பயன்படும்படி "யாப்பினும் பொருளினும் வேற்றுமை யுடையது" என்றதனால் இது முன்னிலையன்றியுங் கடவுள் வணக்கங்கூறிய தென்க; [அறுமுறைவாழ்த்துள் வாழ்த்தப்படும் பொருள்களாவன - முனிவரும், பசுவும், பார்ப்பாரும், அரசரும், மழையும், நாடுமாம்.]

அருகசரணம், சித்தசரணம், சாதுசரணம், தருமசரணம் என்னும் நான்கினுள், இது - அருகசரணம்.

வினைவென்றோனென்றும், காமனைவென்றோனென்றும், ஐவரைவென்றோனென்றும், முற்றுமறிந்தமூர்த்தியென்றும், திகழொளியென்றும், விளங்கொளியென்றும், பரத்திலொளியோனென்றும் அருகக்கடவுளுக்கு நூல்களில் திருநாமங்கள் கூறப்படுதலால், இக்காப்புச்செய்யுள் அருகக்கடவுளைப்பற்றியதென்று அறியப்படும்.

எல்லா நூல்களும் மங்கலமொழிமுதல்வகுத்துக்கூறவேண்டுவது மரபாதலின், வெற்றியையுணர்த்தும் 'வென்றான்' என்ற சொல்லால் இந்நூல் தொடங்கினார்.

வினையின்தொகைவென்றானி - வினைத்தொடர்பில்லாதவனாகி யென்றபடி. வென்றான், சென்றான், நின்றான் - இறந்தகாலவினையாலணையும்பெயர்கள்; வெல், செல், நில் - பகுதிகள். வினையின்தொகை - ஆறாம்வேற்றுமைத்தொகை; பலவினீட்டத்தற்கிழமைப்பொருளது: இன் - சாரியை. விரிந்து பரந்த - ஒருபொருட்பன்மொழி; மிகஅதிகமாய்ப்பரவிய வெனச் சிறப்புப் பொருளுணர்த்தும்: [நன்னூல் - பொதுவியல் - சஎ.] ஒன்று - அத்விதீயம், ஏகம். ஒப்பில்லாத தெனவே, உயர்வில்லாததென்பது தானேபெறப்படும். உணர்வின், இன் - ஐந்தனுருபு, ஏதுப்பொருளது; 'கல்வியிற் பெரியன் கம்பன்' என்பதிற்போல. உணர்வின் சென்றான் என இயையும். உணர்வு என்பதில்,வு - தொழிற்பெயர்விகுதி; உ - விகுதியென்றால், வ் - எழுத்துப்பேறு. ஒழியாது - மிச்சமில்லாமலென்றபடி. 'அடைதலென்னும்பொருளுள்ள சொற்கள் அறிதலென்னும் பொருளையுந் தரும்' என்ற வடமொழி நியாயத்தால், போயினானென்னும் பொருளுள்ள 'சென்றான்' என்னுஞ் சொல்லுக்கு அறிந்தானென்று பொருள் உரைக்கப்பட்டது; "மலர்மிசை யேகினான் மாணடி சேர்ந்தார்" என்ற திருக்குறளில் 'சேர்தல் - இடைவிடாது நினைத்தல்' எனப் பரிமேலழகர் உரைகூறியதும் இதுபற்றியே யெனக் காண்க. ஒழியாது - எதிர்மறைவினையெச்சம்; ஆ - எதிர்மறையிடைநிலை: இதனை விகுதியென்பாருமுளர்; பகுதிக்கும் விகுதிக்கும் இடையிலேநிற்பதை இடைநிலை யென்றலே சிறப்புடைத்து: து - வினையெச்சவிகுதி; உ - விகுதி என்றால், த் - எழுத்துப்பேறு. முற்றும், உம்மை- முற்றுப்பொருளது. இனி, விரிந்து தன்கண் ஒன்றாய்ப்பரந்த உணர்வின் ஒழியாதுமுற்றுஞ்சென்றானென்பதற்கு - தன்னிடத்தொன்றேயாய் விரிந்து பரவிய அறிவுபோலத் தான் உலகமெங்கும் இடைவிடாதுபரவிச்சென்றவனென்றும் உரைக்கலாம்; இவ்வுரைக்கு, 'உணர்வின்' என்பதிலுள்ள இன் என்னும்ஐந்தாமுருபு - ஒப்புப்பொருளது. சீவகசிந்தாமணியில் அருகசரணத்தில் "வெம்புஞ் சுடரிற் சுடருந் திருமூர்த்தி" என்றாற்போல, இந்நூலில் 'திகழுஞ் சுடர்சூழொளிமூர்த்தி" என்றார். கடவுளின்வடிவம் ஒளிமண்டலத்தாற் சூழப்பட்டிருத்தலை மேல் இந்நூலின் துறவுச்சருக்கத்தில் "ஏழிய லுலகினு ளிருளகய் கையகன், றூழியல் வினைகளோ டுவிய வாயிரங், காழொளி சுடரவன் றன்னைக் காணவோர், சூழொளி மண்டிலஞ் சுடரத் தோன்றுமே" என்ற செய்யுளாலுங் காண்க. திகழும் என்னும் எதிர்காலப்பெயரெச்சம், இங்குக் காலங்கருதாது தன்மைகுறித்துநின்றது. மூர்த்தி- தற்சம வடசொல்; [ஆரியத்திற்குந்தமிழிற்கும்பொதுவெழுத்தாலாகி விகாரமின்றித் தமிழில்வந்து வழங்கும் வடமொழி தற்சமமென்றும், ஆரியத்திற்கேயுரிய சிறப்பெழுத்தாலும் பொதுவுஞ்சிறப்புமாகிய ஈரெழுத்தாலுமாகித் திரிதல்முதலியவிகாரம்பெற்றுத் தமிழில்வந்துவழங்கும் வடமொழி தற்பவமென்றுங் கூறப்படும்.] அடிக்கீழென்பதில், கீழ் - ஏழனுருபு; "பிண்டிக்கண் ணார்நிழற்கீ, ழெந்த மடிகள்" என்பதிற்போல: "முனை சார் வலமிடமேல் கீழ் புடைமுதல்" என்றார் நன்னூலார். இங்கே 'வினை' எனப்பொதுப்படக்கூறியதனால், நல்வினை தீவினை என்னும் இரண்டையுங் கொள்க;இங்கே 'நல்வினை' என்றது அழியுந்தன்மையனவாகிய சுவர்க்கஇன்பமுதலியகாமியங்களைத் தருவனவான தானதருமமுதலியவற்றின் பயனை: இவை முத்திக்கு சேசேகாரணமாகிய தத்துவஞானத்தை உண்டாக்காமைமாத்திரமேயன்றித் தீவினைபோல அதனைகழவொட்டாமல் தடைசெய்துநிற்றலுமுடை

யனவாம்; ஆதலால், இந்நல்வினை தீவினை இரண்டும் ஒருவனுக்கு ஞானத்தைத் தடுத்துப் பந்தமுறுத்துவதிற் பொன்விலங்கும் இருப்புவிலங்கும்போலத் தம்முள் ஒப்பனவாமென்க: இதுபற்றியே தெய்வப்புலமைத் திருவள்ளுவனாரும் "இருள்சேர் இருவினையுஞ் சேரா இறைவன், பொருள்சேர் புகழ் புரிந்தார் மாட்டு" எனக் கூறியவாறு காண்க. வினை நீங்கிநிற்பா ரெனக் கூறாமல், நின்றாரென இறந்தகாலத்தாற் கூறினது, தெளிவும் விரைவும் பற்றி வந்த காலவழுவமைதி; [நன் - பொது - ௩௩.] கடவுளினடியை வணங்கினவர் இப்பிறப்பு ஒழிந்தபின் முத்திபெறுவதுமாத்திரமேயன்றி வணங்கினமாத்திரத்தில் இவ்வுடம்போடு இவ்வுலகத்தில் வாழ்ந்திருக்கும்பொழுதே முத்திபெற்றவரோடொப்ப ரென்னுங் கருத்தால், 'பணிந்தார் வினை நீங்கினின்றார்' எனக்கூறினரென்றுங் கொள்க; இதனை "அற்றது பற்றெனி, லுற்றது வீடு," "பசையற்று,லன்றே யப்போதே வீடு அதுவே வீடு வீடாமே" என்பனவற்றோடு ஒப்பிடுக. 'வினைநீங்கநின்றார்' என்றும்பாடமுண்டு. 'உணர்வின்றொழியாது' என்றதில், னகரவொற்று - விரித்தலென்னுஞ் செய்யுள் விகாரம். வினையின்தொகைவென்றுநீக்கிச் சென்றானும் மூர்த்தியும் ஆகி நின்றானது அடி யென்க. 'வினையின்தொகையாய' என்றபாடத்துக்கு - வினைகளின் தொகுதிகளாகியவற்றை வென்றானு மாகி யென்க. தொகை - தொழிற்பெயர்; தொகு - பகுதி, ஐ - விகுதி.

இங்ஙனங் கடவுள்வணக்கங்கூறியதனால், எடுத்தகருமம் இடையூறின்றி இனிதுமுடியு மென்பது கருத்து.

இதுமுதல் ஆறுகவிகள் - பெரும்பாலும் மூன்றாஞ்சீர் புளிமாங்கனிச்சீரும் இரண்டாஞ்சீர் புளிமாச்சீரும், மற்றை மூன்றும் தேமாச்சீர்களுமாகிய நெடிலடி நான்கு கொண்ட கலிநிலைத்துறைகள்; விருத்தக்கலித்துறையெனவும் காப்பியக்கலித்துறையெனவும் படுவது இதுவே: இவ்வகை விருத்தத்தினாலேயே சிந்தாமணியென்னுஞ் சிறந்தகாவியந் தொடங்கப்பட்டுள்ளவாறும், அதனுரையில் ஆசிரியர் நச்சினார்க்கினியர் 'தாழம்பட்ட ஓசையான் விருத்தமாயும், சீர்வரையறையானும் மிகத்துள்ளியவோசையானுந் துறையாயுங் கிடத்தலின், இவற்றை விருத்தக்கலித்துறையெனல் வேண்டும்' என உரைத்தவாறும் உணர்க.

---

# பாயிரம்.

பாயிர மென்றது, முகவுரையை; அப்பாயிரம் - பொதுப்பாயிரமும், சிறப்புப்பாயிரமு மென இரண்டுவகைப்படும்: தன்னாலுரைக்கப்படும் நூலுக்குமாத்திரமே உரியதன்றி எல்லாநூன்முகத்தும் உரைக்கத்தக்கது பொதுப்பாயிர மெனவும், தன்னாலுரைக்கப்படும் நூலுக்கே இன்றியமையாமல் உரியதாய் அவ்வொருநூன்முகத்திலே உரைக்கப்படுவது சிறப்புப்பாயிர மெனவும் அறிக. கீழ்க்கூறிய கடவுள்வாழ்த்துச்செய்யுள் எந்நூலின்முதலில்வைக்கப்பட்டாலும் இருத்தற்கேற்றதாதலின் பொதுப்பாயிரமும், இதுமுதலைந்துகவிகள் இந்தநூலுக்குமாத்திரமே உரியனவாதலின் சிறப்புப்பாயிரமுமாமென அறிக. இச்சிறப்புப்பாயிரம், பிறராற் புனைந்துரைத்துக் கூறப்படாமற் கவிதன்னாலேயே கூறப்பட்டதாதலின், இதனைத் தற்சிறப்புப்பாயிரமென்னவேண்டும்.

**௧.—(இ - ள்.) அம் - அழகிய, கண் - இடத்தையுடைய, உலகிற்கு - உலகமுழுவதுக்கும், அணி வான் சுடர் ஆகி நின்றான் - அழகிய சிறந்த ஒளியாகிய சூரியனை யொத்து விளங்கிநிற்கிற தீர்த்தங்கரர் [இவரைத் தீர்த்தங்கரரிருபத்துநால்வருள் பதினொன்றாவராகிய சிரேயாம்ஸ ரென்பர்], வெம்**

கண் வினை போழ்ந்து - (தமது திருவடியை யடைந்த அடியார்களது) கொ
டிய தன்மையையுடைய ஊழ்வினைகளை அழித்து, இருவ - (அவர்களை
உயர்ந்தமுத்திநிலையில் என்று மழியாது) வாழ்ந்திருக்கச்செய்யும்பொருட்டு,
சரண் சென்ற - சமவசரணத்தை அடைந்த, மேல் நாள் - முன்காலத்தி
லே, பைங் கண் - (இயற்கையிற்)பசுநிறமான கண்களையும், மதர்வை - வலி
மைக்களிப்பையும், பகு வாய் - (தகுந்தஇரையைவிரும்பித்) திறந்தவாயையு
முடைய, அரி ஏறு - ஆண்சிங்கத்தை, போழ்ந்த - பிளந்துதள்ளின, செம்
கண் நெடியான் - சிவந்த கண்களையும் பெருமைக்குணத்தையு முடைய
திவிட்டமகாராசனது, சரிதம் இது - சரித்திரமாகிய இதனை, செப்பலுற்
றேன் - (இப்பெருங்காப்பியமாகக்) கூறத்தொடங்கினேன்; (எ - று.)

இது - கவிக்கூற்று. சிறப்புப்பாயிரத்துஇலக்கணமாகக் கூறப்பட்ட
பதினொன்றனுள் நூலிற்கூறப்படும்பொருள்இன்னதென்ற ஒன்றை இக்கவி
கூறிற்று. இச்செய்யுளை "மீனே றுயர்த்த கொடிவேந்தனை வென்ற பொற்
பின், தானே றனையா னுளன்சீவக சாமி யென்பான், வானேற நீண்ட புக
ழான்சரி தம்மி தனைத், தேனூற நின்று தெருண்டாரவை செப்ப லுற்றேன்"
என்னுஞ் சீவகசிந்தாமணிப்பதிகமுதற்செய்யுளோடு ஒப்பிடுக.

இச்செய்யுளி னிரண்டாமடியில், 'வெங்கண் வினைபோழ்ந் திருவ' என்
பதே எமக்குக்கிடைத்த ஏட்டுப்பிரதியின் பாடம். இந்நூலிற்கூறப்படுங்
கதை நிகழ்ந்தது பதினொன்றாந்தீர்த்தங்கரரதுகாலத்தி லென்பர்; தீர்த்தங்
கரரென்பவர், கடவுளதுஅவதாரபுருஷர்: இவர், உபதேசமில்லாமலேயெல்லா
வுண்மைப்பொருள்களையுமறிந்து யாவராலுந்துதிக்கப்படும்பெருமையுடைய
ராய்ப் பிறந்தபொழுதேதொடங்கித்தத்துவஞானத்தோடுகூடிச் சமவசரண
மென்னும்பெயரையுடையகோயிலிலே அசோகமரத்தின்நிழலில் மூன்றுகு
டைகளின்கீழே ஆசனத்தின்மீது வீற்றிருந்து தம்மையடைந்தார்க்குத்
திருவருளால் தத்துவஞானோபதேசஞ்செய்து அவர்களதுகருமங்களையொ
ழித்து அவர்களுக்குமுத்தியின்பத்தைக்கொடுப்பர்; இவர்களைச் சைனமத
த்தவர் அருகக்கடவுளென்றேகருதிக்கொண்டாடுவர். சமவசரணமாவது -
பூமிக்குஐயாயிரம்வில்லுயரத்துக்குமேலே பன்னிரண்டுயோசனையளவுள்ள
தாய்ச் சௌதருமேந்திராதிதேவர்களால்நிருமிக்கப்பட்ட ஜினாலயம்: இத
ற்குப் பூமியிலிருந்து இருபதினாயிரம்படிகளுள்ளன வென்பர்; இவ்வாலயத்
தினியல்பு ஸ்ரீபுராணத்திலும் மேருமந்தரபுராணத்திலும் நிரம்பவிரித்துக்
கூறப்படும்: சீவகசிந்தாமணியிலும் இந்நூலிலுஞ் சுருக்கமாகக்கூறப்பட்டு
ள்ளது; "எண்ணெஞ்சமேயிட்டமேயுடைத்தேயிந்திராதிவிண்ணோர், முன்னெஞ்
செய்பன்னிரண்டோசனைத்தாய்முழுமாமணித்தூண், மன்னிஞ்சிமூன்றொடு
மானாங்கணமூதலேழ்நிலத்துப், பொன்னினிலையமாயிற்றன்றேயெங்கள்
புங்கவற்கே" என்றார் திருநூற்றந்தாதியிலும். கண்ணுலகு - இடம்விசால
மான உலகம். உலகு - லோகமென்னும்வடமொழித்திரிபு; இதனைத் தமிழ்ச்
சொல்லேயாமென்பது ஆசிரியர்நச்சினார்க்கினியர்கொள்கை. சூரியன் தனது
ஆயிரங்கிரணங்களாலும் உலகத்திலுள்ளஇருள்முழுவதையும்ஒழிப்பதுபோ
ல உலகத்துயிர்களதுஅகத்திலுள்ள அஜ்ஞானவிருள்முழுவதையுந் தம்மரு
வத்தைக் கண்டமாத்திரத்தில் ஒழியச்செய்திடுபவர் தீர்த்தங்கரரென்பார்,
'அங்கண்ணுலகிற் கனிவான்சுடராகின்றான்' என்றார்; "மலர்தலை யுலகின்
மல்கிரு ளகல,விலங்கொளி பரப்பி யாவையும் விளக்கும், பரிதியி னொருதா
னாகி" என்றார் நன்னூற்சிறப்புப்பாயிரத்தும். வான்சுடர் - முச்சுடர்களுள்
மற்றைச் சந்திரஅக்கினிய ிருவரினுஞ் சிறந்த சுடர்; அல்லது, மற்றைய
ஒளிகளினும் பெரியஒளி: இனி, வானத்துவிளங்கும் ஒளி யென்றுமாம். மற்
றையிருசுடர்போலப் பதினாறுஎழுகிரணங்களையுடைத்தாகாமல் அவற்றி

ற்கு ஒளிகளைக் கொடுத்து வாழும் ஆயிரங்கிரண முடைமைபற்றி, சூரியன் சுடரென்றும் வான்சுடரென்றுங் கூறப்படும். சுடரென்னும் பொதுப்பெயர், இங்கே சிறப்பாய்ச் சூரியனையுணர்த்திற் றென்க. சுடரென்னும் ஒளியின்பெயர், அதனையுடைய சூரியனுக்குப் பண்பாகுபெயர். ஆகி - உவமவுருபு. போழ்ந்து, போழ் - பகுதி. போழ்தல் - பிளத்தல்; இங்கே, ஒழித்தல். இருவ - இருத்த; இச்செயவெனெச்சத்தில், இருவு - பகுதி: இரு - இருளென்பதன்பிறவினை; இதில், வு - பிறவினைவிகுதி யெனக் கொள்ளவேண்டும்: உ-விகுதி என்றால், வ் - உடம்படுமெய். இச்சொல் இப்பொருளதாதலை இந்நூலின் அறவுச்சருக்கத்தில் "கோபுயர் கோபுர வாயில் சேர்ந்துதன், னீடுயர் மழகளி யிருவித் தானிழிந்து" என்னுமிடத்தும் நோக்குக; "பஞ்சரத் திருவினர் பாவை யன்னவர்" எனப் பின்னூலாரும் இச்சொல்லை இப்பொருளில் உபயோகித்திருத்தல் காண்க. இருவ - செயவெனெச்சம், காரியப்பொருளதாதலின், எதிர்காலம்; 'நெல்விளைய மழைபெய்தது' என்பதிற்போல. சரணம் - சமவசரணமென்பதன்விகாரம். சமவசரணத்தைச் சிந்தாமணியில் "தாள்நிழல்" என்றுகூறியதுபோல இந்நூலிற் சரணமென்றுகூறினு ரென்றுங் கொள்ளலாம்; சரண - திருவடி: சரணமென்னும்வடசொல்லின்கடைக்குறை. இனி, சரண் - வீடென்றுமாம். மேல்நாள் போழ்ந்த நெடியா னென்ன இயையும். 'போழ்ந்திருவைச்சரண்சென்றமேனுள்' என்ற பாடத்துக்கு, போழ்ம் திருவை எனப் பதம்பிரித்து, போழும் என்பதைப் போழுமென்னுஞ்செய்யுமெனெச்சத்து ஈற்றுயிர் சென்றதெனக் கொண்டு, அடியார்களதுகொடிய இருவினைகளையகற்றும்மேன்மையைத் தமதுசெய்தொழிலாகஅடைந்த பூர்வகாலத்தி லென்க;சரண் - அரசு, அடைக்கலம்: [இதற்குப் பிறவாறு உரைப்பாருமுளர்; அவை பொருந்துமாயிற் கொள்க.] பசுமையென்னும் பண்புப்பெயர், ஈறுபோய் இடையின்றஉயிர்மெய்யுங்கெட்டு அடிஅகரம் ஐயாகி இனமெலிமிக்கது; [நன் - பத - கூ]. மதர்வு - செருக்குக்கொள்ளுதல்; தொழிற்பெயர்: வு - விகுதி; ஐ - சாரியை: பார்வையென்பதிற்போல, வை - விகுதி யென்றல்,மிகப்பொருந்தும். மதர்வையென்னும்அடைமொழி- வலிமைமிகுதியையும், பருவாயென்னும் அடைமொழி - சீற்றத்தோற்றத்தையும் உணர்த்தும். அரி - சிங்கம்; ஹரிஎன்னும்வடமொழித்திரிபு: (யானைமுதலியபெரியவிலங்குகளையும்)அரிக்கவல்லது என்பது பொருள்; அரித்தல்- அழித்தல். ஏறு - ஆண்மைப்பெயர்; காரணக்குறி. அரியேறு - அரியாகிய ஏறு என இருபெயரொட்டுப்பண்புத்தொகை. திவிட்டன் சிங்கத்தைவதைத்த வரலாறு வருமாறு:—வித்தியாதரராசர்க்கெல்லாம் இராசனும் இரத்தினபல்லவநகரத்தரசனுமான அச்சுவகண்டனென்பவன், பூலோகத்திற் போதனநகரத்தரசனாகிய பிரஜாபதிமன்னனது இளையகுமாரனான திவிட்டனென்பவனால் தனக்கு அபாயமுண்டாகு மென்று சதவிந்துவென்னும்நிமித்திகனால்அறிந்து, அரிமஞ்சுஎன்னுந்தனதுமந்திரியின்ஆலோசனையின்படி அத்திவிட்டனதுஇயல்பையறியும்பொருட்டு அவனது தந்தையினிடமிருந்து நூதனமாகத்திறைவாங்கிவரும்படி சிலரை அனுப்ப, அதனைஅறிந்து அஞ்சி அம்மண்ணுலகத்தரசன் விண்ணுலகத்தரசன்கேட்டபடி திறைப்பொருள்கள்பலவற்றையுந் தன்மக்களிருவருமறியாதபடி கொடுத்தனுப்ப, வித்தியாதரத்தூதர்கள் அவற்றை விமானத்திலேற்றிக்கொண்டு தம்முலகஞ்செல்லுமயலுலகையில்,திவிட்டகுமாரன்விசயனென்னுந்தனதமையனுந்தானுமாய் அதனைக்கண்டு இதுஎன்னவென்றுவிசாரித்துக் குறத்தியொருத்திசொல்ல உண்மையுணர்ந்து சீற்றங்கொண்டு அத்திறைப்பொருள்களைத்தடுத்து அத்தூதர்களைத்துரத்திவிட, அவர்கள் இச்செய்தியைத்தம்மரசனிடஞ்சொல்ல

அஞ்சி அரிமஞ்சுவென்னும்மந்திரியிடஞ்சொல்ல, அவன் 'இதனைஅரசன்அறி
ந்தால்அதிககோபங்கொள்வான்' என்றுகருதி அவனுக்குத்தெரியாமலே
தானேஆலோசித்துத் திவிட்டனை மாயையினாற்கொல்லத்துணிந்து அரிகே
துவென்னும் வித்தியாதரனை யழைத்து 'நீ ஒருசிங்கவடிவமாய்ச்சென்று
திவிட்டனைக்கொன்றுவருவாய்' என்று அனுப்ப, அங்ஙனமே அவன் வஞ்சனைச்
சிங்கவடிவங்கொண்டு சிந்துநாட்டுமலையகத்திருந்து அந்நாட்டைஅலைக்க,
அதனைஅவ்வித்தியாதரத்தூதுவராலறிந்து திவிட்டன் தன்தமையனுடனே
அச்சிங்கமிருக்கின்ற மலையிடத்தை யடைந்து தனியே ஆரவாரஞ்செய்ய,
அம்மாயச்சிங்கம்அச்சங்கொண்டு மலைக்குகையினுள்ளே ஓடியொளிக்கவே,
வெளியிலேநின்று திவிட்டன் செய்கின்ற கர்ச்சனையை அக்குகையினுள்ளே
யிருந்த உண்மைச்சிங்கமொன்று கேட்டுத் துயிலொழிந்து பெருங்கோபத்
தோடு இராசகுமாரனைக் கொல்லும்படி புறப்பட்டுவர, திவிட்டன் அச்சிங்
கத்தின்பிடரியின்மேற்பாய்ந்து அதன்வாயைக்கிழித்து அதனைப்பிளந்துதள்
ளிவிட்டு மீண்டுவந்தனனென்பதாம்; இக்கதையை இந்நூலின் (ஏழாவது)
சீயவதைச்சருக்கத்தில் விரிவாய்க்காண்க. மேல், கதையில் "வள்ளுகிர்
மதர்வைத் திங்கட் குழவிவா ளெயிற்றுப் பைங்க, ணுள்ளொளி யுமிழ நோ
க்கி யுருமென வதிரும் பேழ்வாய்க், கொள்ளரி யுருவு கொண்டான கொ
டியவன் கடிய சூழ்ந்தான்" எனக் கூறுதற்கு ஏற்ப, 'பைங்கண் மதர்
வைப் பருவா யரியேறு' என்றார். செங்கண் - செந்தாமரைமலர்போன்ற
கண். நெடியான் - யாவரினுஞ்சிறந்தவன்; இவன் குணஞ்செயல்களிற்
பெரும்பாலுந் திருமாலின் திருவவதாரமான கண்ணபிரானை யொப்பா
னாதலாலும், நவவாசுதேவர்களில் திப்பிரட்டவாசுதேவனிவனாதலாலும்,
இவனைக் கவி 'செங்கண்ணெடியான்' எனத் திருமாலுக்குரிய பெயராற்
கூறினார்; மேலும் பலவிடத்தும் "கொற்றங்கொள் நேமி நெடுமால்" என்
பதுமுதலாக இக்கருத்தே விளங்கக் கூறுமாறு காண்க. சரிதம் - வட
மொழித்தற்சமம். சரிதம்மிது, மகரமெய் - விரித்தல்விகாரம். செப்புவற்
றேன் என்பதில், செப்பு - தெலுங்கில் வழங்குந் திசைச்சொல். பருவாய் -
வினைத்தொகை. திவிட்டனை முற்கூறினார், கதைக்கு நாயகனாதலின்.
நெடியான் - நெடுமையென்னும் பண்படியாப் பிறந்த பெயர். (க)

உ.—(இ - ள்.) கொற்றம் - வெற்றியை, கொள் - கொண்ட, நேமி -
சக்கராயுதத்தையுடைய[அல்லது ஆஞ்ஞாசக்கரத்தையுடைய],நெடு மால்-
யாவரினுஞ்சிறந்த பெருமைக்குணத்தையுடைய திருமாலெனப்படுகிற
திவிட்டனது, குணம் - குணங்களை, கூற-சொல்லும்பொருட்டு, ஓர் காதல்-
ஒருஆசை, இப்பால் - இவ்விடத்து, உற்று - (எனக்கு) உண்டாகி, கிளர -
மேன்மேல்மிகுதலால்,இங்கு-இப்பொழுது,தமிழ்-இத்தமிழ்நூலை[காவியத்
தை],நூற்கலுற்றேன் - நூற்க[செய்ய]த் தொடங்கினேன்; இங்கு - இந்
நூலில், ஓர் குற்றம் வரும் ஆயினும் - யாதாயினுமொருகுற்றம் வருமாறு
னும், நுங்கள்போல்வார் - உங்களைப்போல்பவர்கள், அற்றங்கள் காப்பார் -
அக்குற்றங்களை வெளியிடாது அடக்கிவைத்து அமைத்துக்கொள்வர்;
(ஏனெனில்), அறிவின் பெரியார்கள் அன்றே - (அவர்கள்) அறிவினாற்பெரி
யவர்களன்றோ? (எ-று.)

இது - அவையடக்கம்; அதாவது - நல்லசபைக்கு உரிய புலவர்களின்
முன் தனது அடக்கத்தைத்தெரிவிக்குமாறு தன்னைத்தாழ்த்தியும் அவர்களை
உயர்த்தியுங் கூறுதல்.

"சிறியோர் செய்த சிறுபிழை யெல்லாம்,பெரியோ ராயிற் பொறுப்
பது கடனே" என்பது நீதியாதலால், சிற்றறிவுடைய சிறியேன் செய்த
இக்குற்றங்களை முற்றறிவுடையபெரியோர் பொறுத்தருளுவரென்பதாம்.

கொற்றம் - பகைவரைக்கொன்று அடையும் வெற்றி; இது- கொல்லென்னும் பகுதி யடியாப் பிறந்த காரணப்பெயர்போலும். நேமி, குணம் - வடசொற்கள். திருமாலினது சக்கரத்துக்குச் சுதரிசனமென்றுபெயர். நெடுமால் - மாவலியின்செருக்கை யடக்கும்பொருட்டுத் திரிவிக்கிரமனாய்நீண்ட எம்பெருமான். மால் - பெருமைக்குணமுடையவன்; அடியவர்பலராலும் விரும்பப்படுபவன்; எல்லாவுயிர்களிடத்தும் ஆசைப்பெருக்கமுடையவன்; கருமைநிறமுள்ளவன். காத்தற்றொழிற்குரிய கடவுளாகிய திருமால் அரசர்களாகவடிவமாய்நின்று உலகத்தை ஆளுதலின், இங்கே இவிட்டனை 'கொற்றங்கொணேமிநெடுமால்' என்றார்; "திருவுடை மன்னரைக் காணில் திருமாலைக்கண்டேனே யென்னும்" என்று பெரியாரும் பணித்தார்: அன்றியும், திருமாலுக்குஉரிய பாஞ்சசன்னியமென்னுஞ் சங்கமும் சார்ங்கமென்னும் வில்லும் கருடனாகியவாகனமுந் திவிட்டனுக்குவருவதையும்,இவன் சக்கராயுதத்தை ஏவி அச்சுவகண்டனைத் தலைதுணித்தமையையும்,மேல்அரசியற்சருக்கத்திற்காண்க. ஆஞ்ஞையைச் சக்கரமென்றுங் குடையென்றுங் கோலென்றுங் கூறுவது,கவிகளியல்பு.இனி, நேமி-கையிலுள்ளசக்கரரேகையுமாம்;"செங்கயல் வலம்புரி திகிரி யென்றிவை,தங்கிய வங்கையன்" என்பர் மேற்குமாரகாலச்சருக்கத்தில். மால் - உயர்திணைப்பெய ராதலின், அதன்ஈற்றுமெய் வலிவரினியல்பாயிற்று; [நன் - உயிரீற்றுப்புணரியல் - கூ.] கூற, கிளர என்னுஞ் செயவெனெச்சங்கள் - முறையே காரிய காரணப் பொருளன வாதலால், எதிர்கால இறந்தகாலத்தன. உற்று-உறு என்னுங் குறிலிணைப்பகுதி தன்னொற்றிரட்டி இறந்தகாலங்காட்டிற்று; உ - வினையெச்சவிகுதி: பகுதியீற்று, உகரக்கேடு - சந்தி. இங்கு - சுட்டடியாப்பிறந்து ஏழாம்வேற்றுமையிடப்பொருளுணர்த்தின்ற இடைச்சொல்; அங்கு, அன்று, இன்று என்பனவும் இவ்வாறே. ஓர் - ஒன்றுஎன்னும்எண்ணுப்பெயர் ஈறுகெட்டு னகரமெய்ரகரமாய் உகரம்பெறாமலும் முதல்நீளாமலும் நின்றது. திராவிடமென்னும் வடமொழி,தமிழெனச்சிதைந்தது;இனி,தனிமைப்பொருள்குறித்த தமியென்னும் வினையடியாப் பிறந்து வினைமுதற்பொருளுணர்த்தியவிகுதியின்றி ழகரவொற்றெழுத்துப்பேறுபெற்றுத் தனக்குஒப்பில்லாது தனிப்பட்டபாஷையெனப் பொருள்தருவதென்பாரும், செவிக்கினிமைதருதலால் மதுரமென்னும்பொருளுடையதாய்த் தமிழெனவழங்கிய தென்பாரும், வடமொழிமுதலிய வேறுபலபாஷைகளுக்கு மில்லாமல் தனக்குமாத்திரமே தனிமையாகவுள்ள ழகரவெழுத்தை யுடைய பாஷை யெனப் பொருளுரைப்பாருமுளர். தமிழ் இனிமையாதலை "தமிழ்தழிய சாயலவர்" எனச்சிந்தாமணியிலும்,"தமிழ்ப்பாட்டிசைக்குந் தாமரையே" எனக் கம்பராமாயணத்திலுங் காண்க. இங்கே, தமிழ் - அப்பாஷையிலாகிய காப்பியத்துக்குக் காரணவாகுபெயர். "நொய்திலெய்யசொன்னூற்கலுற்றேன்" என்ற கம்பர் வாக்கிலும்,சொல் - சொல்லாகிறமுதற்கருவியிலாகிய நூலுக்குக் கருவியாகுபெயர்: அன்றி, நூலை என வருவித்து,சொற்களால்(நூலை)நூற்கலுற்றேன் என்றும் உரைக்கலாம். இச்செய்யுளின் முதலிரண்டடியை "ஓசை பெற்றுயர் பாற்கட லுற்றொரு, பூசை முற்றவு நக்குபு புக்கென, வாசை பற்றி யறையலுற் றேன்மற்றிக், காசில் கொற்றத் திராமன் கதையரோ" என்னுங் கம்பராமாயணக்கவியோடு ஒப்பிடுக. நூற்கல் - தொழிற்பெயர்; நூல் - பகுதி, கு - சாரியை, அல் - விகுதி: இது - உற்றேனென்னும் வினைமுற்றொடு சேர்ந்து ஒருசொல்தன்மைப்பட்டது. "நொய்தி னெய்யசொன் னூற்கலுற்றே னென்னை" எனக் கம்பராமாயணத்தும் இங்ஙனங் காண்க. "செப்பலுற்றேன்," "அறையலுற்றேன்," "கூறலுற்றேன்," "மொழியலுற்றேன்," "நயிலலுற்றது" என இங்ஙனம் வரும் பலவாய்பாடு

களைப் பிறநூல்களிலெல்லாங் காணலாம். நூற்றல் எனினும், நூற்கல் எனினும் ஒக்கும். ஏற்றல் - ஏற்கல், தோற்றல் - தோற்கல், நோற்றல்- நோற்கல், நிற்றல் - நிற்கல், கற்றல் - கற்கல், விற்றல்- விற்கல் என்பன போலச் சாரியைபெற்றும் பெறாதும் வரும் இருவகைவடிவமும் வழங்கும். நூற்கலுற்றேனென்ற வினைக்கு ஏற்ப, தமிழ் நூலெனப்பட்டது. "இனி, நூலென்றசொற்குப் பொருள்உரைக்கப்படும்; நூல்போறலின் நூலென்ப: பாவைபோல்வாளைப் பாவையென்றதுபோல்; நூல்போறலென்பது - நுண்ணியபலவாயபஞ்சின் நுனிகளாற் கைவன்மகடூஉத் தனதுசெயற்கைநலந்தோன்ற ஓரிழைப்படுத்தலாம் உலகத்து நூனூற்றலென்பது: அவ்வாறே, சுவிர்ந்துபரந்தசொற்பரவைகளாற் பெரும்புலவன் தனதுஉணர்வுமாட்சியின் பிண்டம் படலம் ஓத்துச் சூத்திரமென்னும் யாப்புநடைபடக்கோத்த லாயிற்று நூல்செய்தலாவது; அவ்வகைநூற்கப்படுதலின், நூலெனப்பட்டது" என்ற இறையனாரகப்பொருளுரைநடையை இங்கே அறிக. [இனி, நூல் கலுற்றேன் எனப் பதம்பிரித்து, தமிழ்நூலைச்சொன்னேனென்று உரைப்பாருமுளர்; அவ்வுரைக்கு, கலுற்றேன் என்பது - இறந்தகாலவினைமுற்றும், அதில் கலுல் அல்லது கலுறு என்பது பகுதியு மாகல் வேண்டும்: சொல்லலென்னும்பொருளில் குயில், நவில், நுவல், பயில், புகல் என்னும் இவ்வாய்பாட்டு லகாரவீற்றுப்பகுதிகளையே யன்றிக் கலுல் என்பதொருபகுதியையும், ஓது, இயம்பு முதலிய உகரவீற்றுப்பகுதிகளையே யன்றிக் கலுறுஎன்பதொருபகுதியையும் எமக்குத்தெரிந்தவரையில் எந்தநூலிலுங் காணாமையின், அவ்வுரையை இங்குக் கொள்ளவில்லை.] மற்று - அசை; வினைமாற்றாகவுங்கொள்ளலாம். காதலினாத் தமிழ் நூற்கலுற்றேன் - ஆசை வெட்கமறியா தாதல் பற்றிக் குற்றம்வருமென்னும்நாணமின்றி நூல்கூறினேனென்றவாறும். வருமாயினும், உம்மை-இழிவுசிறப்புப்பொருளுணர்த்தும். பின்னே 'குற்றங்கள்' எனப் பன்மையாகவருதலால், முன்னே 'குற்றம்' என்றது - சாதியொருமை; குற்றமென்பது பொருளாற் பன்மையாயினும் சொல்லால் ஒருமையாதலால், ஓர் என்னும் அடைமொழி கொடுக்கப்பட்டது. நங்கள்போல்வார் என்பதற்கு - நுங்கள்போல்வாரென்று பொருள்; இதில், நாமென்னும் உளப்பாட்டுத் தன்மைப்பன்மை உயர்வுதோன்ற முன்னிலையில்வந்தது: திருக்கோவையாரில் "காமரைவென்றகண்ணோன்" என்றசெய்யுளில் 'நாமரையாமத்தென்னோவந்தவைகிநயந்ததுவே' என்றவிடத்திலும், கம்பராமாயணத்தில் ஆரணியகாண்டத்திற் சூர்ப்பநகைப்படலத்தில் "செங்கயல்போல் கருநெடுங்கண்" என்கிற செய்யுளில் 'தாமரையுறையும், நங்கையிவ ரெனநெருநல் நடந்தவோ நாமென்ன' என்றவிடத்திலும், திருக்கருவைவெண்பாவந்தாதியில் "பின்னை தழுவுங் கனையேன்" என்னுஞ் செய்யுளில் 'நகைத்தெரிக்கப் போமே நமக்கு' என்றவிடத்திலும் போல; இடவழுவமைதி: [நன் - பொது - உகூ]. இவ்வாறு கூறுதல் 'நம்முடையவூரேது' என வழக்கத்திலுங் காண்க; உலகவழக்கில் நீங்களெனச்சொல்லவேண்டும்முன்னிலையில் தாங்களெனப்படர்க்கைச்சொற்கூறுவதும் இதற்குஇனமேயாம். நங்கள் என்பதில், கள் - பகுதிப்பொருளுணர்த்திய பன்மைவிகுதி. பெரியார்கள் என்பதில், கள் - விகுதிமேல்விகுதி. 'குற்றங்கள் காப்பார்' என்றது உள்ள காப்பார் என்பதை "செல்லிடத்துக் காப்பான் சினங்காப்பான்" என்றதிற்போலக் கொள்க. அறிவிற்பெரியார் - ஞானவிருத்தர். அன்றே - தேற்றம்; ஈற்றசையெனினுமாம். [நங்கள்போல்வார் என்பதற்கு - எம்போலியரென்று உரைத்தலிற் பொருளொன்றுஞ் சிறவாமை காண்க.] அறிவிற்பெரியார்களது இயல்பைப் பொதுப்படக்கூறி அம்முகத்தால் நும்போலியர் குற்றங்களைக்காப்பார்க ளெ

ன்ற சிறப்புப்பொருளைப் பெறவைத்தமையின், இது, வேற்றுப்பொருள்வைப்பணியின்பாற்படும். "கற்பா லுமிழ்ந்த மணியுங் கழுவாது விட்டால், நற்பா லழியுங் நகைவெண்மதி போனிறைந்த, சொற்பா லுமிழ்ந்த மறுவும் மதியாற் கழூஉவிப், பொற்பா, லிழைத்துக் கொளற்பாலர் புலமை மிக்கார்" என்னுஞ் சிந்தாமணியவையடக்கச்செய்யுளை இங்கே அறிக. அற்றங்களைப் பாராதற்குக்காரணம், அறிவிற்பெரியாராதல். 'தமிழ்நூற்கணுற்றேன்' என்ற பாடத்துக்கு, "ஐம்மூன்றதாமுடல்(வன்மையின்வந்திடி லாறொடொன்று), மெய்ம்மாண்பதாநவ்வரின் முன்னழிந்திடின்மிக்கணவ்வாம்" என்ற வீரசோழியவிலக்கணவிதிப்படி வருமொழிமுதல்நகரம் ணகரமாய் நிலைமொழியீற்றுழகரங்கெட்ட தென்க; பிறவிலக்கணங்களின்படி இப்புணர்ச்சி மரூஉமொழியி லடங்கும். (உ)

க.—(இ - ள்.) நா மாண்பு - (மனிதரது) நாவின் இயற்கை, குறை உரைக்கும் என்னினும் - குற்றங் கூறுவ தாயினும், (இந்நூல்), நாமம் - (பகைவர்க்கு)அச்சத்தைவிளைக்கின்ற, வென்-வெற்றியைத்தருகின்ற, வேல்-வேலாயுதத்தையும், தேன் மாலை அலங்கல் - தேன்பெருகுகின்ற அழகிய பூமாலையையு முடைய, திரு மால் - (காத்தற்றொழிலில்) இலக்குமிகொழுநனை ஸ்ரீமகாவிஷ்ணுவை யொத்த, நெடு சேந்தன் என்னும் - பெருமைக்குணமுள்ள சேந்தனென்னும்பெயருடைய, தூ மாண் தமிழின் கிழவன் - பரிசுத்தமான பெருமையையுடைய தமிழ்ப்பாஷைக்கு உரியவனை, சுடர் ஆரம் மார்பின் கோமான் - விளங்குகின்ற இரத்தினமாலையணிந்த மார்பினையுடைய அரசனது, அவையுள் - சபையிலேயுள்ள, தெருண்டார் - தெளிந்தஅறிவுள்ளபுலவர்களால், கொளப்பட்டது அன்றே - ஏற்றுக்கொள்ளப்பட்டதன்றோ? (எ - று.)

முக்குணவசத்தரான மனிதராற் செய்யப்பட்ட நூல்களிற் பிழையிருப்பது இயற்கையேயாயினும், அப்பிழைகளையே பிரதானமாக எடுத்துக் கூறுவது பெரும்பான்மையாக மனிதரியற்கையே யாயினும், இந்நூலைச் செந்தமிழரசனான சேந்த னென்பவனது அவைக்களத்தி லுள்ள அறிவிற் பெரிய புலவர்பலர் கேட்டு இதிலுள்ள வழுக்களை அழகிதாகஅமைத்து அங்கீகரித்தருளுவார்க ளென்பது இதன் கருத்து. கொளப்பட்டது - தெளிவுபற்றி எதிர்காலம் இறந்தகாலமாச்சொல்லப்பட்ட காலவழுவமைதி. "இந்நீர வென்சொற் பழுதாயினுங் கொள்ப வன்றே, பொய்ந்நீர வல்லாப் பொருளால்வினை புகுது மென்பார்" என்றார் சிந்தாமணியாரும். தெருண்ட அறிவினராதலின் குற்றத்தைக்கருதாது குணத்தையேகொள்வ ரெனத் தேறிக்கூறினார்.

சிறப்புப்பாயிரத்திலக்கணம்பலவற்றுள் இந்நூல் இன்னவரசனது காலத்துப் பாடப்பட்டு இன்னவரசனது சபையில் அரங்கேறிய தெனக் காலமுங்களனும் இவ்வவையடக்கச் செய்யுளிற் கூறப்பட்டவாறு காண்க. இதிற்கூறிய சேந்தனென்னும் அரசனைப் பற்றிய விவரம் யாதொன்றுந் தெரியவில்லை; சேந்தன் எனத் திவாகரங்கண்டுசெய்வித்தோனொருவ னுளன்: இந்நூற்சிறப்புணர்த்துஞ் செய்யுளில் 'காரவெட்டியரையன்' எனவருதலின், இவன் அவனாக இருத்தலுங் கூடும். முதலடியில் 'வெள்வேல்' என்றும், ஈற்றடியில் 'மானவை' என்றும் எமக்குக்கிடைத்தபிரதியின்பாடம். நாம் - அச்சத்தையுணர்த்தும் உரிச்சொல்; "பே நா முரு மென வரூஉங் கிளவி, யாமுறை மூன்று மச்சப் பொருள" என்பது தொல்காப்பியம்: இது - அம்சாரியைபெற்று மவ்வீறொற்றழிந்துநின்ற தென்றலது, அஃ சாரியை யென்றலது கொள்க. இனி, நாமம் - பிரசித்தியுமாம். வெல் என்னும் முதனிலைத்தொழிற்பெயர், ஈறுதிரிந்து 'வென்' எனநின்றது. வேல் - வெல்லுதற்

சூரிய கருவி யென்பது பற்றிய காரணக்குறிபோலும். தேன் + மாண் = தேமாண்; தேன்மொழி மெல்வர ஈறுகெட்டது: [நன்-மெய்யீற்றுப்புணரியல்-கக.] மாண் - மாட்சியென்னும் பண்புப்பெயர் விகாரம். உரைக்கும், கு - சாரியை. அலங்கல் - அசைதல்; தொங்கியசைவதாகிய மாலைக்குத் தொழிலாகுபெயர்: இதில், அல் - கருத்தாப்பொருள்விகுதி யெனினும் அமையும். திருமால் - திருமகளிடம் மோகங்கொண்டவன். சேந்தனென்னுஞ் சுப்பிரமணியன்பெயர், உவமையாகுபெயர்வகையால் அவன்போன்ற பலபராக்கிரமங்களையுடையவனுக்கு வழங்கும்;சேயென்னுந் தமிழ்மொழியுங் குமாரனென்னும் வடமொழியும் போல. தாய்மை யென்னும் பண்புப்பெயர், ஈறுபோய் இடைநின்றயகரமுங்கெட்டு 'தா' என நின்றது. தமிழுக்குத் தாய்மை - கடவுளாலுபதேசிக்கப்பட்டுப் பரம்பரையாகவருதல், அதற்கு மாட்சி - வடமொழியோடொப்புமையும், மற்றைப்பாஷைகளுள் முதலதாதலும். தமிழின் கிழவன், இன் - சாரியை; இனி, தமிழ் இன் கிழவன் என எடுத்து, தமிழ்ப்பாஷைக்கு இனிய தலைவ னென்றுமாம். கிழவன், கிழமையென்னும்பண்படி - பகுதி; இதன்பெண்பால் - கிழத்தி: கிழமை - உரிமை; வயதுமுதிர்ந்தவ னென்னும் பொருளில், கிழம் - பகுதி: பெண்பால் - கிழவி; கிழம் - மூப்பு. சுடராரம் - வினைத்தொகை; சுடர்கிற ஆர மென விரியும்: ஒளியையுடைய ஆர மென்றால், இரண்டனுருபும் பொருளுந் தொக்கதாம். ஆரம் - ஹாரம்; வடசொல். மார்பின் - இன்சாரியைநிற்க இரண்டனுருபு தொக்கது. கோமான், மான் - பெயர்விகுதி; மானை மஹான் என்னும் வடசொல் திரிந்ததாகக் கொண்டால், கோவாகிய மகானென இருபெயரொட்டாக்குக: கோ - அரசன்; மகான் - பெரியவன். அவை - ஸபா என்னும் வடமொழித் திரிபு. உள் - ஏழனுருபு: "உள் அகம் புறமில் இடப்பொருளுருபே" என்றார் நன்னூலாரும். தெருண்டார் என்னும் இறந்தகாலப் பலர்பால் வினையாலணையும்பெயரில், தெருள் - பகுதி. அலங்கல் - அடையாளப்பூமாலையும், வெற்றிமலர்மாலையும். ஆரம் - பொன் முதலியவற்றாலாய மாலை. (அ)

கூ.—(இ - ள்.) செம் கண் நெடியான் - சிவந்த கண்களையும் பெருமையையு முடைய விட்டுணது, திறம் - பெருமையையுடைய வரலாற்றை, பேசிய - சொல்லுதற்கு, சிந்தை செய்த - எண்ணங்கொண்ட, நங்கள் - எங்களது, மறுவும் - குற்றமும், நல்லார்கள் முன்னர் - நற்குணமுடைய புலவர்களின் முன்னிலையில், மறு அன்று - குற்றமாகாது [குணமேயாம்]; (எதுபோலவெனின்), அம் கண் விசும்பின் இருள் போழ்ந்து - அழகிய இடத்தையுடைய ஆகாயமெங்கும் பரவிய இருள்முழுவதையும் ஒழித்து, அகல் வான் எழுந்த - பரந்த ஆகாயத்திலே உதித்து விளங்குகிற, திங்களை - சந்திரனது, மறுவும் - களங்கமும், சிலர் கைதொழ - சில நல்லார் [மகளிர்] கைகூப்பிவணங்க, செல்லும் அன்றே - மேலாகப்போகு மன்றோ? (எ - று.)

இது - எடுத்துக்காட்டுவமையணி: உபமானத்தையும் உபமேயத்தையுந் தனித்தனி வேறுவாக்கியமாக நிறுத்தி அவற்றினிடையே உவமவுருபு கொடாமல் (பிம்பப்பிரதிபிம்பபாவந்தோன்றக்) கூறினமையின்; இதனை வடநூலார் திருஷ்டாந்தாலங்காரமென்பர். நல்லார் - குணநன்மையையுடையோர்; நல்லஅழகையுடைய இலக்குமிக்கு நல்லாளென்று பெயராதலால், நல்லாரென்பது மகளிரையுமுணர்த்தும். ஓஷதிவருக்கங்களுக்கு அதிபதியான சந்திரனை இளம்பிறையாகத்தோன்றுங்காலத்திற் கலியாணமாகாதகன்னிகைப்பெண்களும் பிறமாதருந் தொழுது தமதுஇஷ்டசித்தியைப்பெறுதல் இயல்பாதலை மேற்கோள்கள் பலவற்றாலும் அறியலாம்.

இங்ஙனம் யாவராலும் மதிக்கப்படுவதுமன்றியே, சந்திரனுக்கு மதியென்று ஒருபெயர். சந்திரமண்டலம் வணங்கப்படும்பொழுது அதனிடையிலுள்ள மறுவும் வணங்கப்படுவதாக வருணித்தல் கவிகளியல்பு; "ஒண்கதிர் வாண் மதியஞ் சேர்தலா லோங்கிய, அங்கண் விசும்பின் முயலுந் தொழப்படூஉம்" என நாலடியாரினுங் காண்க: சதுரதந்தமென்னும் அரசயானைக்கு ஒருமுயல் சந்திரமண்டலத்தையும் அதிலுள்ளமறுவையுங் காட்ட அவ்யானை அச்சத்துடனே அதனைத்தொழுதுபோயிற்று என ஒரு பஞ்சதந்திரக்கதையுமுண்டு. சந்திரனிடத்துள்ள களங்கத்தைக் குற்றமாகக்கொள்ளாமல் அதனிடத்திலுள்ள ஒளிச்சிறப்பையே முக்கியமாகக்கொண்டு யாவரும் அதனைக் கொண்டாடுதல்போல யான்செய்யும்நூலிலுள்ள பிழையைக் குற்றமாகப் பாராட்டாமல் இதிற்கூறப்படும் புண்ணியசரித்திரச்சிறப்பையே முக்கியமாகக்கொண்டு இதனை அறிந்தவர்யாவரும் அங்கீகரிக்கவேண்டுமென அவையடக்கங்கூறியவாறும். திறம் - பண்பாகுபெயர். பேசிய - செய்யிய வென்னும்வாய்பாட்டு எதிர்காலவினையெச்சம். நங்கள் - இயல்புபற்றிவந்த தனித்தன்மைப்பன்மை. உம்மைகளிரண்டும் - முறையே, எதிரது இறந்தது தழுவிய எச்சப்பொருளன. முன் - இடைச்சொல்; இங்கே, இடப்பொருளது: இதன்மேல், அர் - சாரியை; இது - பிறசாரியைகளைப்பெற்று, முன்பு, முன்னம், முன்னை, முன்னே, முன்னுறல் எனவும் நிற்கும்: பின் என்பது மிவ்வாறே. விசும்பின், இன் - ஏழனுருபு; இது, புறனடைச் சூத்திரத்தாற் கொள்ளப்பட்டது: நீக்கப்பொருளில்வந்த ஐந்தனுருபெனக் கொண்டு, ஆகாயத்தினின்று இருளையொழித்து எனவுங் கொள்ளலாம். அகல்வான் - வினைத்தொகை. 'அலர்வான்' என்றும்பாடம்; பொருள் இதுவே. (சு)

(ரு).—(இ - ள்.) விஞ்சைக்கு இறைவன் - (மாலிகாஞ்சனம்முதலிய) மாயவித்தைக்குத் தலைவனும் [வித்தியாதரனும்], விரை சூழ் முடி வேந்தன் - (சூடின பூமாலைகளின்) வாசனை எங்கும்பரவிய கிரீடத்தையுடைய அரசனு மாகிய சடியென்பவனது, மங்கை - மகளும், பஞ்சிக்கு அனுங்கும் - செம்பஞ்சுக்குழம்பூட்டுதலாலும் வருந்துகிற [மிகமென்மையான], சிலம்பு ஆர் அடி - சிலம்பென்னும் அணியை யணிந்த பாதங்களையுடைய, பாவை - சித்திரப்பதுமைபோல்பவளும், பூ ஆர் வஞ்சி கொடி போல்பவள் - மலர்கள் நிறைந்த வஞ்சியென்னுங்கொடியை யொப்பவளு மாகிய சுயம்பிரபையென்பவளது, காரணம் ஆக—, வந்த - தோன்றிவழங்கிய, செம் சொல் புராணத்து - செவ்விய சொற்களையுடைய புராணத்தினது, உரையின் வழி - பொருளின்படியே, சேறும் - (யாம் இந்நூலிற்) செல்லுவோம்; (எ - று.)— அன்றே - ஈற்றசை.

இக்கவி, சிறப்புப்பாயிரத்திலக்கணங்களுள் நூல்வந்தவழி இன்னதென்பது கூறிற்று. இவ்வழிநூலுக்கு முதனூலான புராணம் இன்னதென்றுணிந்துசொல்லக்கூடவில்லை. வழிச்சேறும் - அதன்படியே சொல்லுவோம் என்றவாறு. விஞ்சை - வித்யா என்னும்வடமொழிச்சிதைவு; இது - வித்தை, விச்சை எனவும் வழங்கும். இறைவன் - இறைமையையுடையவன்; இறைமை - தலைமை: வ் - பெயரிடைநிலை. முடி - மயிர்முடியப்படுவதாகிய சிரசிலணியுங்கிரீடத்துக்குக் காரணப்பெயர். வேந்து - அரசனாதற்றன்மை; அதனையுடையவன் - வேந்தன். சடி - இரதநூபுரசக்கரத்து வித்தியாதரராஜன்; அருக்ககீர்த்திக்கும் சயம்பிரபைக்குந் தந்தை: சயம்பிரபை - திவிட்டனது பிரதானமனைவி. "பஞ்சி யடரனிச்ச நெருஞ்சியின்ற பழமாமென், றஞ்சு மலரடிகள்" எனச் சிந்தாமணியிற் கூறினாற்போல, பஞ்சிக்கனுங்கு மடியெனப் பாதத்தின்மென்மையைக் கூறினார். பஞ்சி - பஞ்சு என்பதன்

விகாரம். பஞ்சிக்கு என்பதில், இழிவுசிறப்பும்மை விகாரத்தால்தொக்கது; அவ்வும்மை, அதன் மிகமென்மையை உணர்த்தும். சிலம்பு - ஒலிப்பது என்னும்பொருள்பற்றிவந்த காரணப்பெயர். மனத்திற்குத்திருப்தியுண்டாகுமளவுங் கலைத்துக்கலைத்துச் சீர்திருத்தமாக எழுதக்கூடு மாதலின், சித்திரப்பாவை மிகஅழகியதாம்; இனி, கண்மணிப்பாவைபோலருமையானவ ளென்றுமாம்; "உண்கண் மணிவாழ் பாவை;" "கண்மணிப் பாவை யன்ன, பெண்" என்றார் நற்றிணைநானூற்றிலும், சீவகசிந்தாமணியிலும். சிந்தாமணியில் "விஞ்சைக்கிறைவன்மகள்" என்றவிடத்து நச்சினார்க்கினியர் 'விஞ்சை-குணப்பண்பு பண்புடைப்பொருள்மேல் நின்ற ஆகுபெயர்' என்றாராதலின், விஞ்சையென்றதற்கு-வித்தியாதரரென்றே பொருள்கொள்ளலாம். ஆரடி - வினைத்தொகை; அருமையாகிய அடியென்றால், பண்புத்தொகையாம். பாவை-உவமவாகுபெயர். மலர்கள் - முகம் கண் கை கால் முதலிய அவயவங்களுக்கும், வஞ்சிக்கொடி - மெல்லிய வடிவத்திற்கும் உவமை. செஞ்சொல்-இலக்கணவழுவில்லாத சொல். புராணம் - வடசொல்; பழமையுணர்த்தும் இப்பண்புப்பெயர், இருமடியாகுபெயராய், பழையவரலாற்றையுணர்த்தும் நூல்மேல் நின்றது. அத்து - சாரியை. நிலைமொழியீற்றுமகரமும், சாரியை முதலகரமும் கெட்டது; [நன் - மெய் - கஎ, உருபுபுணரியல் - கசு.] சேறும், செல் - பகுதி, முதல்நீண்டது - விகாரம், லகரங்கெட்டது - சந்தி, றும்-தன்மைப்பன்மைவினைமுற்றுவிகுதி; [நன் - வினை - கஉ.] இதுவே எதிர்காலமுணர்த்திற்று: [நன்-பத - கஅ.] இதில் தும் விகுதி திரிந்ததென்பார்க்கு, றும்விகுதிக்கு இத்தகையஉதாரணமன்றி வேறுகிடையாமை காட்டி மறுக்க. விஞ்சைக்கிறைவன், விரைசூழ்முடிவேந்தன் என்பனவும், வேந்தன் மங்கை, பஞ்சிக்கனுங்குஞ்சிலம்பாரடிப்பாவை, பூவார்வஞ்சிக்கொடிபோல்பவள் என்பனவும் - ஒருபொருட்பலபெயர்: ஒருபொருட்பன்மொழியன்று; இங்கே இவற்றுக்குள்ள வேறுபாட்டைக் கேட்டுணர்க. பூவார் - பூமாலை சூடின என்றுமாம். மங்கை - பருவங்குறியாது பெண்ணென்னு மாத்திரையாய்நின்றது. (ரு)

பாயிரம் முற்றிற்று.

---

# நாட்டுச்சருக்கம்.

இத்தொடர்மொழி - இரண்டனுருபும்பொருளும் உடன்தொக்கதொகை; இதற்கு - (திவிட்டனது தேசமாகிய சுரமையென்னும்) நாட்டினது சிறப்புக்களைச் சொல்லும் பாக மென்பது பொருள். நாடு என்னும் நெடிற்றொடர்க்குற்றியலுகரம், வேற்றுமைப் புணர்ச்சியில் டகரவொற்றிரட்டிற்று; [நன் - உயிர் - கஅங.] சருக்கம் - ஸர்க்கம்: வடசொற்றிரிபு: முடிபு, அல்லது படைப்பு என்று பொருள்; அது-சங்கேதத்தால், ஒரு நூலின் பகுப்பைக் குறிக்கும்.

க.—(இ - ள்.) மஞ்சு சூழ் - மேகங்கள் வந்து சுற்றிலுந்தங்குதற்கிடமான, மணி வரை - அழகியதொரு மலையை, எடுத்த - கையினால் தூக்கின, மால் - திருமாலெனப்படுகிற திவிட்டன, அமர் - அரசுவீற்றிருக்கின்ற, இஞ்சி சூழ் அணி நகர் - மதில்கள் சூழ்ந்த அழகிய போதனமென்னும் நகரத்துக்கு, இருக்கை - இருப்பிடமான, நாடது - தேசமானது, விஞ்சை நீள் உலகு உடன் விழா கொண்டு அன்னது - நீண்ட வித்தியாதரலோகமுழுவதும் திருவிழாக்கொண்டிருந்தாற்போன்ற சிறப்பினையுடையதும், துஞ்சும் நீள் நிதியது - (இயற்கையிலே) நிலைபெற்ற பெருஞ்செல்வத்

தை யுடையதுமாகிய, சுரமை - சுரமையென்பதாம், என்ப - என்றுசொல்லுவர், (நூலோர்); (எ - று.)—ஏ - ஈற்றசை. மஞ்சு - ஒருமங்கலச்சொல்.

'மஞ்சுசூழ்' என்ற அடைமொழி, மலையினது உயர்வை விளக்கிற்று. மணி வரை - இரத்தினங்களுக்கு இருப்பிடமான மலையென்று முரைக்கலாம்; "கற்பா லுமிழ்ந்த மணி," "கல்லார் மணி" என்றார் சிந்தாமணியார். வரையென்னுங் கணுவின்பெயர், அவற்றையுடைய மூங்கிலுக்குச் சினையாகு பெயராய், அதனையும் மலைக்கு இங்குத் தானியாகுபெயராதலால், இருமடியாகுபெயர். திவிட்டன், அச்சுவகண்டன்முதலிய பகைவர்கள்பலரையும் வென்று முடிதரித்தகாலத்தில், புலவர்கள்சிலர் 'பகைவென்று அரசாளும் வீரர் மலையொன்றைப்பிடுங்கியெடுத்தல், மரபு' என்றுகூற, உடனே இவன் கோடிக்குன்றமென்னும் மலையை வேரோடுபறித்துக்கையிலேந்தினன் என்னும் வரலாற்றை மேல் அரசியற்சருக்கத்திற் காண்க. இவ்வரலாறு கண்ணபிரான் கோவர்த்தனகிரியை எடுத்துக் குடையாகப்பிடித்த செய்கையோடு ஒத்தலின், 'மஞ்சுசூழ் மணிவரை யெடுத்த மால்' என்றார். அமர் நக ரொள இயையும். நகர் - நகரம் அல்லது நகரீ என்னும் வடமொழியின் விகாரம். இருக்கை - இருத்தல்; தொழிற்பெயர்: கை- விகுதி; இருப்பிடத்துக்கு ஆகுபெயர். 'நாடது' என்பதில், அது - முதல்வேற்றுமைச்சொல்லுருபு; அசையெனினுமாம். உற்சவகாலத்தில் நகரம் விசேஷமாக அலங்கரிக்கப்படுதலியல்பாதலின் அங்ஙனம் அலங்கரிக்கப்பட்டாலன்றித் தெய்வத்தன்மையையுடைய விஞ்சையருலகமும் இயற்கையில் இந்நாட்டுக்கு ஒப்பாகாதென இதன் சிறப்பைக் கூறுவார், 'விஞ்சைநீ ளுலகுடன் விழாக்கொண் டன்னது' என்றார். நிதி - செல்வத்திரள்; வடசொல். நிதியது - அகரச்சாரியையும் துகரவிகுதியும் பெற்ற ஒன்றன்பாற் குறிப்பு வினையாலணையும்பெயர். என்ப, என் - இடைச்சொல்; பகுதி: ப - பலர்பால்விகுதி; [நன் - வினை - அ.] இதுவே எதிர்காலங்காட்டிற்று: [நன் - பத - க.அ.] இதற்கு எழுவாய் வருவிக்க. என்ப என்பதை அசையாகவுங் கொள்ளலாம்; சிந்தாமணியில் "குழைபுனற் கன்னிகொண் டிழிந்த தென்பவே" என்றவிடத்து 'என்ப - அசை; இது புறனடையாற்கொள்க: இவ்விதி மேலுங்கொள்க' என்றார் நச்சினார்க்கினியார். கொண்டன்னது - கொண்டாலன்னது என உரைத்தால், எச்சத்திரிபு; கொண்டதன்னது என்று உரைப்பின், தொழிற்பெயர் விகாரமாம். அன்னது - அன்என்னும் உவம இடைச்சொல்லடியாப் பிறந்த பெயர். 'நதியது' என்றும் பாடம்.

இதுமுதல் ஆறுகவிகள் - மூன்றுஞ்சீரொன்று மாச்சீரும் மற்றை மூன்றும் விளச்சீர்களுமாகிய அளவடி நான்கு கொண்ட கலிவிருத்தங்கள்.

உ.—(இ - ள்.) (அந்நாட்டில்), பங்கயம் - தாமரைப்பூக்கள், காடுகொண்டு - தொகுதியைப் பெற்று, அலர்ந்த-மலர்ந்துள்ள, பாங்கு எலாம்- நீர்நிலையிடங்களி லெல்லாம், செம் கயல் இனம் நிரை - செந்நிறமுள்ள கயல்மீன்களின் ஒழுங்கான கூட்டங்கள், திளைக்கும் - இடைவிடாது பொருந்திய, செல்வமும் - சிறப்பும், மங்கையர் முகத்தன - பெண்களது முகங்களிலுள்ளனவான, மதர்த்த - செழிப்புள்ள, வாள் - ஒளியையும், அரி - செந்நிறத்தையும் உடைய, அம் கயல் - அழகிய கயல்மீன்கள்போன்றகண்களினது, பிறழ்ச்சியும் - பிறழ்தலும், அறாத நீர - (எப்பொழுதும்) நீங்காத தன்மையுடையன; (எ - று.)

இதனால், தாமரை முதலிய சிறந்தமலர்கள் நிறைந்திருத்தற்கும் கயல் முதலிய மீன்கள் இடைவிடாது பயிலுதற்கும் இடமான நீர்வளத்தின் சிறப்பும், அந்நாட்டிலுள்ள மகளிரது முகம் கண் என்னும் அவயவங்களின் அழகும் கூறப்பட்டன. இங்கே நாட்டின் நீர்வளம் பிரதானமும்,

மகளிரழகு அப்பிரதானமு மாதலால், முன்னிரண்டடியை உபமேயமும் பின்னிரண்டடியை உபமானமு மாகக் கருதுக. பங்கயத்துக்கு முகம் - குளிர்ச்சி மென்மை அழகுகளாலும், கயலுக்குக் கண் - வடிவப்பிறழ்ச்சியாலும் உவமை. பங்கயம் - பங்கஜம்: வடசொற்றிரிபு; சேற்றிற்பிறப்பது என்றுபொருள்: தாமரைக்குக் காரணவிடுகுறிப்பெயர்; மலருக்கு முதலாகு பெயர். 'செங்கயல்' என்றதற்கு ஏற்ப,கண்களுக்கு அரிகூறினார். அரி - சிவந்த இரேகை. 'கயலின்னிரை' என்றும் பாடம். வாள் - உரிச்சொல்; "வாளொளி யாகும்" என்பது தொல்காப்பியம். மதர்த்தல் - களிப்புவெளித்தோன்றல். வாளரி - (கூர்மையில்) வாளாயுதத்தையும் (கருநிறத்தில்) வண்டையும் போன்ற தென்றுமாம். அம் - உரிச்சொல். கயல் - உவமவாகுபெயர். பிறழ்ச்சி - இடைமாறி ஒளிசெய்தல்; தொழிற்பெயர்: சி-விகுதி. நீர - நீர்மையென்னும் பண்படியாப் பிறந்த பலவின்பாற் குறிப்புமுற்று. திளைத்தல் - இடைவிடாதுபயிலுத லாதலை "திளைத்தவர் பருகிய தேறல்" எனச் சிந்தாமணியிலும், "திளையாவருமருவி" எனத் திருக்கோவையாரிலுங் காண்க. (௨)

௩.—(இ - ள்.) ஆங்கு - அந்நாட்டிலே, தண் பணை - (நீர்வளத்தாற்) குளிர்ந்துள்ளனவான கழனிகள், அவர் - அம்மகளிரது, அணி நடை - அழகிய நடையை யொத்த நடையையுடைய, அன்னம் - அன்னப்பறவைகளின், தோட்டன - கூட்டத்தினுடையனவான, தீம் குரல் மழலையால் - (குழந்தைகளின்) குதலைச்சொல்லையொத்த இனிப்பான ஓசையினால், சிலம்பும் - ஒலிக்கும்; ஊர்கள் - (அந்நாட்டிலுள்ள) பதிகள், மா குயில் அனையவர் - மாமரத்தில்வாழ்கின்ற குயிலை (இன்குரலில்) ஒத்த அம்மகளிர், வனசம் சீறு அடி - தாமரைமலர்போன்ற சிறிய பாதங்களி லணிந்த, ஒங்கு இரு சிலம்பினால் - சிறந்த பெரிய சிலம்பென்னும் அணிகளால், சிலம்பும் - ஒலிக்கும்; (எ - று.)

இதுவும், நீர்வளமும் மகளிர் சிறப்புங் கூறியதேயாம். இக்கவியிலுங் கீழ்க்கவியிற்போலவே முன்னிரண்டடி உபமேயமும் பின்னிரண்டடி உபமானமு மாகக் கொள்ளலாம். அன்னத்தின்குரலுக்கு மகளிர்சிலம்பொலி உவமை; இதனை "மின்னேர் சிலம்பிற் சிலம்புங் குரலன்னம்" எனச் சிந்தாமணியிலுங் காண்க. ஆங்கு - அங்கு என்பதன் நீட்டல். 'அவர்' என்றது, கீழ்க்கவியில் 'மங்கையர்' என்பதைநோக்கிய சுட்டு. இப்பாகையில் உபமேயமாகச்சொல்லப்படுகிற மகளிர்நடையை உபமானமாகவும் உபமானமாகச் சொல்லப்படுகிற அன்னநடையை உபமேயமாகவும் இங்குமாறிக்கூறியது, எதிர்நிலையுவமையணி; வடநூலார் பிரதீபாலங்காரமென்பர். அணி நடை - அழகாகிய நடை; பண்புத்தொகை. நடை - தொழிற்பெயர்; நட - பகுதி, ஐ - விகுதி, பகுதியீற்று அகரம் - தொகுத்தல்: [இதில் நடு - பகுதி என்பார்க்குப் பொருள்பொருந்தாமைகாண்க.] அன்னம் - ஹம்ஸமென்னும் வடமொழித்திரிபு. தோட்டன - தோடென்பதனடியாப்பிறந்த பலவின்பாற் குறிப்புவினையாலணையும்பெயர்; அன் - சாரியை. குரல் என்பது பால்பகாவஃறிணைப்பெயராதலால், தோட்டனவென்னும் பன்மையடைமொழி கொடுத்துக்கூறினார். தீம் - இனிமை; உரிச்சொல்: கொடுமையுணர்த்துந் தீமையென்னும்பண்புப்பெயர்ப் புணர்ச்சியாயின் 'தீக்குரல்' என வலிமிகும்; இவ்வேறுபாட்டையுணர்க. குரல் - கண்டத்தொனி. மழலை - நிரம்பாமென்சொல்; அவியக்தமதுரவொலி. மாங்குயில் - மரப்பெயர் முன்னர் இனமெல்லெழுத்து வரப்பெற்றது; [நன் - உயிர் - ௬௬.] அனையவர் என்பதில், ஐ - சாரியை. வனசம் - வநஜம்; வடசொற்றிரிபு: நீரிற்பிறப்பது. 'சீறடி' என்றார், மகளிர்க்குத் தாள்சிறந்திருத்தல் உத்தமவிலக்கணமாதலின்; "நுத

லடி நுசுப்பென மூவழிச் சிறுகி" என்றார் கலித்தொகையிலும். 'சீரடி' என்ற பாடத்துக்கு, அழகுடைய பாத மென்க. இருமையென்னும் பண்புப் பெயர், ஈறுபோய் இனமெலிமிக்கது. 'வீங்கிள மூலையவர் மெல்லென் சீரடி' என்றது, மூன்றும் அடியின் பழம்பாடம் (௯)

௪.—(இ - ள்.) நிழல் அகம் தவழ்ந்து - (மரங்களின்) நிழல்கள் இடந்தோறும் பரவி, தேன் நிரந்து - (மலர்களின்) மது நிரம்பப்பெற்று, தாது சேர் - பூந்தாதுகள் பொருந்திய, பொழில் அகம் - (அந்நாட்டுச்) சோலைகளின் இடங்களிலெல்லாம், பூவையும் - நாகணவாய்ப்பறவைகளும், கிளியும் - கிளிகளும், பாடும் - பாட்டுப்பாடுவன; மாடம் - (அந்நாட்டு) வீடுகளில், குழல் அகம் குடைந்து வண்டு உறங்கும் கோதையர் - கூந்தலினிடத்து (மலர்களை) உட்குடைந்து வண்டுகள் தங்கப்பெற்ற பூமாலைபோல்மெல்லிய மகளிரது, மழலையும் - மழலைச்சொற்போலினியகண்டத்தொனியும், யாழுமே - வீணைப்பாட்டுமே, மலிந்த - நிறைந்துள்ளன; (எ - று.)

இதிலும் முதலிரண்டடிகளிற்கூறிய பூவைகளின்பாட்டுக்கு மற்றையிரண்டடிகளிற் கூறிய மகளிர்பாட்டை உவமையாகக்கொள்ளலாம். இச்செய்யுளிற் சோலைவளங் கூறப்பட்டது. தேன் நிரந்து - வண்டுகள் நிரம்பியென்றுமாம். தாது - மகரந்தப்பொடி. மூன்றுமடிக்கு - வண்டுகுடைந்துறங்கும்மாலையைக் கூந்தலிடத்திலுடையவ ரென்றும் உரைக்கலாம். தமது சாரீரவோசையும் வீணைமுதலியகருவியொலியும் வேறுபாடு தோன்றாவண்ணம் பாடுதல் உத்தமகீதவிலக்கண மாதலின், 'மழலையும் யாழுமே மலிந்த' என உடன்வைத்துக்கூறினார். அதிலும் மழலையைமுற்கூறியது, மகளிர் கண்டத்தொனி யாழொலியினும்மிகஇனிமையுடைய தென்னுங் கருத்து விளங்குதற்கு. யாழ் - அதன்ஒலிக்கு முதலாகுபெயர்; அல்லது, காரணவாகுபெயர்: "குழலினிது யாழினி தென்ப" என்றவிடத்துப்போல. 'மழலையுமியாழும்' என்ற பாடத்துக்கு - "தன்னொழி மெய்ம்முன் யவ்வரி னிகரங் துன்னிற்று".என்க; [நன் - மெய் - ௩.] மலிந்த - அன்சாரியைபெறாத அஃறிணைப்பன்மைத்தெரிநிலைமுற்று. பொழிலகம், அகம் - ஏழனுருபு. பூவை பாடுதல் - கோதையர்மழலைக்கும், கிளிபாடுதல்-யாழொலிக்கும் நிரனிறையுவமையாகவுங்கொள்ளலாம். பூவை-கிளிபோலப் பேசவும் பாடவும் வல்லதொரு பறவை. (௪)

௫.—(இ - ள்.) காவியும் - கருங்குவளையரும்புகளும், குவளையும் - செங்குவளையரும்புகளும், நெகிழ்ந்து - மலர்ந்து, கள் உமிழ்-தேனைப் பெருகவிடுதற்கிடமான, ஆவி - (அந்நாட்டு) நீர்நிலைகளின் மதுவை, உண்டு-குடித்து, தேன் - வண்டுகள், அடர்த்த - (களிப்புக்கொண்டு பொருதற்குப் பிறவற்றை) நெருக்கின; அகத்து - அந்நாட்டினிடத்திலுள்ள, மாதர் - பெண்களது, பால் தாவி - பக்கங்களிலே ஓடிச்சென்று, ஒள் குழை அயல் தடவும் - ஒளியமைந்த குழையென்னுங்காதணிகளின் அருகிடத்தைத் தடவுகின்ற, கண் - கண்கள், தவம் மேவி நின்றவரையும் - தவவொழுக்கத்திற் பொருந்தி நின்ற முனிவர்களையும், மெலிய நோக்கும் - (அவர்கள் காமநோயால்) வருந்தும்படி பார்க்கும்; (எ-று.)

இது, அந்நாட்டிலுள்ள குளங்களின் சிறப்புக் கூறிற்று. இதிலும் முந்தினவாக்கியத்திலுள்ள வண்டுகளடர்த்தலுக்குப் பிந்தின வாக்கியத்திலுள்ள கண்கள்நோக்குதலை உபமானமாகக் கொள்ளலாம். காவி, குவளை - முதலாகுபெயர்கள்; இதுபோல்வனவற்றை முதனுக்குஞ் சினைக்கும் பொதுவென்பாருமுளர். உமிழ் ஆவி - காலங்கரந்தபெயரெச்சம் [வினைத்தொகை] இடப்பெயர்கொண்டது. ஆவி - தடாகம்; வாபீ என்னும் வடமொழிச் சிதைவு. உண்பன, தின்பன, பருகுவன, நக்குவன எனப் பிரித்துக்கூறு

யிடத்து உண்ணலெனபது சிறப்புவினையும், அங்ஙனங்கூறாதவிடத்துப் பசிப்பிணிதீரநுகரப்படும்பொருளெல்லாம் உணவெனப்படு மாகலின் அது பொதுவினையு மாகுமாதலால், இங்கே தேனைப்பருகியென்றது 'உண்டு' என்றார். அடர்த்த- பலவின்பால்முற்று. தேன்-வண்டின் ஓர்சாதி; "வண்டுகாள் மகிழ்தேனினங்காள் மது, வுண்டுதேக்கிடுமொண்மயிஞிமிறீட்டங்காள்" எனச் சிந்தாமணியிலுங் காண்க: இது கல்லமனைத்தேசெலலும். "மாதர்காதல்" என்ற தொல்காப்பியத்தின்படி விருப்பமுணர்த்தும் மாதரென்னும் உரிச்சொல், விரும்பப்படும் அழகையுடைய பெண்ணுக்கு இருமடியாகுபெயர். உத்தம இலக்கணப்படி காதளவும் நீண்ட கண்ணென்பார், 'பால்தாவியொண்குழையயல் தடவுங் கண்' என்றார். தவம்லைது - மனம்பொறிவழிபோகாதுநிற்றற்பொருட்டு விரதங்களால் உண்டிசுருக்கல் முதலாயின; தபஸ்என்னும் வடமொழித் திரிபு. 'நின்றவரையும்' என்ற உயர்வுசிறப்பும்மை, அவர்களது பொறியடக்கும் மனவுறுதியைப் புலப்படுத்தும். "முனிவரையும், மாலுறப்ப மகிழ்செய்வ மாண்பினஞ்சு மமிர்தமுமே,போல்குணைத்த பொருகயற்கண் செவியுறப்போந் தகன்றனவே" எனச் சிந்தாமணியிற்கூறிஞற்போலக் கூறினார். வண்டுங் கண்ணும் - கருநிறத்தா லுவமை. மாதர் கண் என இயையும். மாதர்பால் என எடுத்து, மாதரிடத்து என்றுமாம். 'மங்கையர், நாவியுங் குழம்புமுண் டெழுந்த கொங்கைமேன், மேவி நின்றவரையு மெலியவிம்முமே' என்பது பழமையான பாடம். (ரு)

௬.—(இ - ள்.) நாடு அது-அந்தத்தேசமானது, வான் இலங்கு அருவிய வரையும் - ஆகாயத்தை யளாவி யுயர்ந்து விளங்குகிற நீரருவிகளையுடைய மலையிடமாகிய குறிஞ்சிநிலமும், முல்லைவாய் தேன் இலங்கு அருவிய இணையும் - முல்லைமலர்களினின்று தேன் நீரருவியையொத்துப் பெருகிவிளங்குகிற காட்டிடமாகிய முல்லைநிலமும், தேறல் சேர் பானல் அம் கழனியும் - தேன்பொருந்தின நீலோற்பலமலரையுடைய அழகிய கழனிகளாகிய மருதநிலமும், கடலும் - கடலிடமாகிய நெய்தல்நிலமும் ஆக, பாங்கு அணி - பக்கங்களிற் பொருந்திய, நால் நிலம் - நால்வகை நிலங்களும், கலந்து - தன்னிடத்திற் கூடி, பொன் நாலும் - இலக்குமி (எங்கும்) ஆரவாரஞ் செய்யப் பெறும்; (எ - று.)

இதனால், நான்குநிலங்களும் அந்நாட்டில் அமைந்திருத்தல் கூறினார். தொல்காப்பியத்தில் "முல்லை குறிஞ்சி மருத நெய்தலெனச், சொல்லிய முறையாற் சொல்லவும் படுமே" என்றவிடத்துச் சொல்லாத முறையாற் சொல்லவும்படு மென்று பொருள்படுதல்பற்றி,குறிஞ்சி முல்லை மருதம் நெய்தலென முறைப்படவைத்தார்; கலித்தொகையிலும், ஐங்குறுநூற்றிலும், பிறவற்றிலும் வேறுபடக்கோத்தவாறுங் காண்க. நெடுந்தூரத்தும் விளங்குதலின் மலையாகிய குறிஞ்சிநிலத்தை முன்னும், மலையைக் காடும் காட்டை நாடும் நாட்டைக் கடலும் அடுத்துள்ளமையால் அவற்றை அதனதன் பின்னும் வைத்தன ரென்க. வானிலங்கு வரை யென்க. அருவிய-குறிப்புப்பெயரெச்சம். முல்லைவாய், வாய் - ஏழனுருபு; "கண் கால் கடை யிடை தலை வாய் திசை வயின்" என்பர் நன்னூலார். நீர் நிழ லில்லாத பாலைநிலம், மனிதசஞ்சாரத்துக்கு இடமன்றாதலின், நீக்கப்பட்டது; பாலைக்கு நிலமில்லையென்றும் மற்றைநிலங்கள் தந்நிலைதிரியின் அதுவே பாலையா மென்றுஞ் சிலஆசிரியர்கொள்கை. பொன் - செல்வத்துக்குரிய மகள். நாடது - நாடாகிய அது. நாடது பொன்நாலும்- இடத்து நிகழ்பொருளின் தொழில் இடத்தின்மேல் நின்றது. (௬)

௭.—(இ - ள்.) (அந்நாட்டில்), ஒரு பால் எலாம் - ஒருபக்கம் முழுவதி[illegible]ந்தில் எங்கும் - முன்னிடங்களெல்லாவற்றிலும், முருகு அயர் - மு

ருகக்கடவுளின் சம்பந்தமாக ஆவேசமாடுதலைச் செய்கின்ற, பாணியும் - ஓசையும், சென்று வீழ் - போய் விழுகிற, அருவி திரள் - திரண்டவடிவமான நீரருவிகளின் தொகுதியினது, ஓசையும் - ஆரவாரமும், வென்றி வேழம் முழக்கொடு - (போரில்) வெற்றியையடையவல்ல யானைகளின் கர்ச்சனையுடனே, கூடி - சேர்ந்து, வான் ஒன்றி நின்று அதிரும் - ஆகாயத்தை யளாவி நிலைத்துநின்று ஒலிக்கும்; (எ - று.)

ஒவ்வொரு இடத்தையும் வருணிக்கும்பொழுது அங்கங்குப் பற்பல வோசைகள் உள்ளனவாக வருணித்தல் கவிகளியல்பு. இச்செய்யுளில், ஒரு பாலெலாமென்றது, குறிஞ்சிநிலத்தை. "சேயோன் மேய மைவரை யுலகமும்" என்ற தொல்காப்பியத்தால், அந்நிலத்துக்குரிய தெய்வம் சுப்பிரமணியக்கடவுளாதலின், 'முருகயர்பாணி' என்றார். இல்முன் என்றது முன்றிலென மாறி வழங்கியது - இலக்கணப்போலி; இதற்கு - வீட்டின் முன்னிடமென்று பொருள் : இங்கே, சுவாமி சந்நிதானத்தையும், ஊர்களின் முன்னிடத்தையும் உணர்த்தும். வென்றி - தொழிற்பெயர்; வெல் - பகுதி, றி - விகுதி, லகரம் னகரமானது - சந்தி, லகரம் றகரமாய், அது மெலிந்த தென்னின், விகாரம்: இது-வினைப்பகுதியடியாப் பிறந்ததாதலின், இதனைப் பண்புப்பெயரென்றல் பொருந்தாது. முழக்கு- முழங்கு என்னும் முதனிலை திரிந்த தொழிற்பெயர். அதிரும்மொரு, மகரமெய் - விரித்தல்.

இதுமுத லிருபது கவிகள்-பெரும்பாலும் முதற்சீரொன்று மாச்சீரும் மற்றைமூன்றும் விளச்சீர்களு மாகிய அளவடி நான்கு கொண்ட கலிவிருத்தங்கள். (எ)

அ.—(இ - ள்.) ஏறு கொண்டு - மிகுதியைக் கொண்டு, எறியும் - அடிக்கப்படுகிற, பணை - மருதநிலத்துப்பறைகளும், கோவலர் - இடையர்களது, கூறு கொண்டு எழு - பலசுரங்களின் வகைகளைக் கொண்டு வெளியெழுகின்ற, கொன்றை அம் தீம் குழல் - கொன்றைப்பழத்தாலாகிய அழகிய இசைஇனிய குழலென்னும் வாச்சியங்களும், காறு கொண்டவர் கம்பலை - உழவுத்தொழிலின்பொருட்டு (க்கலப்பைகளை)க்கொண்டவர்களது ஆரவாரமும், என்ற இவை - என்கிறஇவைகள், ஓர் மாடு எலாம்-(அந்நாட்டின்) ஒருபக்கத்திலெல்லாம், மாறு கொண்டு சிலம்பும்-(ஒன்றோடொன்று) மாறுபடுதலைக்கொண்டு ஒலிக்கும்; (எ - று.)

கீழ் "வானிலங்கருவி" என்றபாட்டிற் கூறிநிறுத்திய முறைமைப்படி அதற்கடுத்த நான்குபாடல்களில் நான்குநிலங்களையும் வருணிக்கின்றனராதலின், இவ்விரண்டாவதுசெய்யுள் முல்லைநிலத்தைப்பற்றியதாதல் வேண்டும். ஆயினும், இதில், 'கோவலர் கூறு கொண்டெழு கொன்றையந் தீங்குழல்' என முல்லைநிலத்துக்குரியபொருளை முக்கியமாக இடையிலே நிறுத்தி, 'ஏறுகொண்டெறியும்பணை', 'காறுகொண்டவர்கம்பலை' என மருதநிலத்துக்குரியபொருள்களை முன்னும்பின்னுங் கூறியது, அந்நாட்டில் நால்வகைநிலங்களும் நெருங்கிக்கலந்துள்ளன வென்ற திணைமயக்கத்தை யுணர்த்தும் பொருட்டென்க. ஏறு, மாறு - விகுதி புணர்ந்துகெட்டுப் பகுதிமாத்திரமாய்நின்ற தொழிற்பெயர்கள். ஏறுதல் - அதிகப்படுதல். இனி, முல்லைநிலத்திற்கேற்ப, ஏறுகொண்டெறியும் பணை யென்பதற்கு எருதுகளை யோட்டிக்கொண்டு அடிக்கின்ற முல்லைநிலத்துவாச்சியங்க ளென்றும், காறுகொண்டவர் - முல்லைநிலத்துப் புன்செய்நிலமுழுபவ ரென்றும் உரைக்கலாம். கோவலர் - கோ வலர் எனப்பிரிந்து, பசுக்களைக் காத்தலில் வல்லவரெனக் காரணக்குறி; இதனைக் கோபாலர் என்னும் வடமொழித் திரிபென்றுங் கொள்ளலாம். "ஒழுகிய கொன்றைத் தீங்குழல் முரற்சியர்" என்ற கலித்தொகையையும், 'நீளவளர்ந்த கொன்றைக்காயைத் திறந்து சமைத்த இனி

யகுழலி லுண்டான ஓசையர்' என்ற அதன் உரையையும், "கொன்றையந் தீங்குழல் கேளாமோ தோழீ" என்ற சிலப்பதிகாரத்தையும், 'கொன்றைப்பழத்தைத் துருவித் துளைத்து ஊதலிற் கொன்றைக்குழலாயிற்று' என்ற அதன் உரையையும், "கொன்றைப்பழக் குழற்கோவலர்" என்றவளையாபதியையும் இங்கேயுணர்க. எனவே, கொன்றை- அதன்முதிர்ந்தகாய்க்கு முதலாகுபெயர். குழல் - உள் துளையுள்ள ஊதும்வாத்தியம். காறு என்னுங் கலப்பைக் கொழுவின்பெயர், இங்கே கலப்பைக்குச் சினையாகுபெயர். கம்பலை - ஓசையுணர்த்து முரிச்சொல்; "கம்பலை சும்மை கலியே யழுங்கல், என்றிவை நான்கு மரவப் பொருள" என்பது தொல்காப்பியம். என்றிவை - பெயரெச்சவீறு தொகுத்தல். இனி, என்று என்பதை எண்ணிடைச்சொல்லெனக்கொண்டு, பணையென்று குழலென்று என நின்றவிடத்துப் பிரிந்து பிறவிடத்தினுஞ் சென்று பொருந்திற்றென்றலுமொன்று. பணைக் கோவலர் என்று - பறைகளையுடைய இடையரென அடைமொழியாக்கியு முரைப்பர். கொன்றையந் தீங்குழல், அம் சாரியையெனினு மாம். (அ)

௯.—(இ - ள்.) அணங்கு அனார் - தெய்வப்பெண்களையொத்த அழகிற்சிறந்த மகளிர், அணவு ஆடல்-(ஒருவரொடொருவர்) பொருந்தி விளையாடும் பொழுது அடிக்கப்படுகிற, முழவமும் - மருதநிலத்துவாத்தியத்தினோசையும், கணம் கொள் வாரணம் கம்பலை செல்வமும் - திரட்சியைக்கொண்ட சங்கவாத்தியங்களினது ஓசையின் மிகுதியும், மணம் கொள் வார் முரசம் - கலியாணங்களில் அடிக்கப்படுகிற நீண்ட [பெரிய] பேரிகைகளினொலியும், வயல் ஓதையும் - கழனிகளிலுண்டாகிற ஓசையும், எங்கும் இணங்கி - எவ்விடத்திலும் பொருந்தி, ஓர் பால் எலாம் -(அந்நாட்டின்)ஒருபக்கம் முழுவதிலும், இரக்கும் - நிலைத்து நிற்கும்; (எ - று.)

இது-மருதநிலத்தன்மை. அணங்கு - திருமகளுமாம். அணவு ஆடல் - மகளிர் ஒருவரோடொருவர் கைகோத்தாடுகிற குரவைக்கூத்து முதலியன. ஆடல் - தொழிற்பெயர்; அல் - விகுதி. முழா என்னுங் குறியதன் கீழ் ஆக்குறுகி உகரமேற்று அம்சாரியை பெற்று முழவமென நின்றது; [நன் - உயிர் - ௨௨; உருபுபுணரியல்-௫.] முழா என்னும் மத்தளத்தின்பெயர், இங்கு வாச்சியப்பொதுவாய் நின்றது. கணம் - திரட்சியாதலை 'கணங்குழை' என்பதிலுங் காண்க. இனி, கணங்கொள் - கூட்டமாக விருத்தலைக் கொண்ட என்று முரைக்கலாம். வாரணக்கம்பலை-கோழிகளை அல்லது யானைகளை ஒன்றோடொன்று போர்செய்யவிடு மோசையுமாம்; சங்கினோசையைச் செல்வமென்றது, காத்தற்றொழிற் கடவுளான திருமாலினது ஐம்படைகளிலொன்றாகிற சங்கத்தினுடைய தொனி மங்களகரமாதலின்: கோழியானைகளின் போர்முழக்கத்தைச் செல்வமென்பது, அவற்றையுடையார் அவ்வெற்றியையே முக்கியமாகக்கொள்வாராதலின். வார் முரசு - தோற்கயிற்றாற் கட்டப்பட்ட முரசு எனினுமாம். முரசு - முரஜமென்னும்வடமொழித்திரிபு. வயல் ஓதை - கழனிகளிற் கலப்பைசெலுத்தல், நாற்றுவிடுதல், நடுதல், களைபறித்தல் முதலியன செய்யும்பொழுது உழவரும் உழத்தியரும் பாடும் பாடல்களினொலியாகுவன. முழவம், முரசு - அவற்றினொலிக்கு ஆகுபெயர். அணவுதல்-கிட்டுதல், பொருந்துதல். (௯)

௧௰.—(இ - ள்.) கலவர் - மரக்கலத்தைச் செலுத்துகின்ற நெய்தனிலத்துமாக்களது, இன் இயமும் - இனிமையான வாத்தியகோஷமும், அசிறார் - அந்நெய்தனிலத்துமாக்களின் சிறுபிள்ளைகள், கடல் புலவு நீர் - சமுத்திரத்தினது புலால்நாற்றத்தோடுகூடிய ஜலத்திலே, பொரு - விளையாடுகையிலுண்டாகிற, பூசல் எதிர்பூசலும் - வரம்பைக்கடந்த ஆரவாரமும், நிலவு வெள் மணல் - சந்திரகாந்தியோடொத்து விளங்குகிற வெண்ணிறமா

ன மணல்களையுடைய, நீள் இரு கானல் வாய் - நீண்ட பெரிய கடற்கரைச் சோலைகளிலே, உலவும் - சென்று மீண்டுவருகின்ற, ஓதமும் - அக்கடலின் அலைகளினோசையும், ஓர் பால் எலாம் - (அந்நாட்டின்) ஒருபக்கத்திலெங்கும், ஓங்கும் - மிக்குவிளங்கும்; (எ - று.)

இயம், ஓதம் - ஆகுபெயர்கள். சிறார், சிறு - பண்படி, பகுதி; ஆர் - பலர்பால்விகுதி. புலவு - மீன்நாற்றம். பூண் - கட்டு; எனவே வரம்பாயிற்று. இரண்டாமடிக்கு, தாக்குகின்ற தங்களாபரணங்களை நீரிலெறிந்து விளையாடுமோசையென்று உரைப்பாருமுளர். இது நெய்தல் நிலத்தன்மை.

இதுமுதல் நான்குநான்காகவரும் பதினாறுபாடல்கள் கீழ்வந்த நான்குபாடல்கள்போலவே முறையே குறிஞ்சி முல்லை மருதம் நெய்தல் நிலங்களை வருணிப்பன.

கக.—(இ - ள்.) கை விரிந்து அன - அகங்கைகள் விரிந்தாற்போல மலர்ந்தனவாகிய, காந்தளும் - செங்காந்தள்மலர்களும், பூ சுனை - அழகிய சுனைகளிலே, மை விரிந்து அன - அஞ்சனம்பரவினாற்போல மலர்ந்தனவான, நீலமும் - நீலோற்பலமலர்களும், வான் செய் நாள் - ஆகாயத்தில் ஒளியைச்செய்கின்ற நக்ஷத்திரங்கள்போல, மெய் விரிந்தன - தனதுவடிவம் மலர்ந்தனவான, வேங்கையும் - வேங்கைமரத்து மலர்களும், சோர்ந்த - பெருகவிட்ட, தேன் - தேன்கள், நீள் இரு குன்று எலாம் - நீண்டபெரிய மலையிடத்திலெல்லாம், நெய் விரிந்து அன - நெய் பரவினாற்போன்றன; (எ - று.)—இது - குறிஞ்சி நில வருணனை.

செங்காந்தள்மலர் உள்ளங்கையைப்போலுதலை "காந்த ளிரவலர் போற் கையேற" எனப் பிறர்கூறியதனாலு முணர்க. பூஞ்சுனை - அழகாகிய சுனை; பண்புத்தொகை: அழகையுடைய சுனை என்றால் இரண்டனுருபும்பயனுந் தொக்கதாம். பூப்பெயர்முன் இன மென்மை தோன்றிற்று; [நன் - உயிர்-௫௰]. மை - மேகமுமாம். நீலமென்னும் நிறக்குணப்பெயர், அதனையுடைய மலருக்குப் பண்பாகுபெயர். நாள் என்னுந் தினத்தின்பெயர், ஆகுபெயராய், அத்தினத்தைக்குறிக்கின்ற நக்ஷத்திரத்தை யுணர்த்திற்று. மூன்றாமடியில், விரிந்தன - பலவின்பாற்பெயர். அங்கும், விரிந்து அன எனப்பிரித்து, நக்ஷத்திரங்களின்வடிவம் விளங்கினாற்போல வென்றுரைக்கலாம். உவமையணி. 'வான்செய்' என்றவிடத்து, 'பொன்செய்' என்றும் பாடம். (கக)

கஉ.—(இ-ள்.) மருங்கின் - (அந்நாட்டின் ஓர்)பக்கத்து, கொன்றையும் - கொன்றைமரங்களிலும், குருந்தும் - குருந்தமரங்களிலும், குலை கோடலும் - பூங்கொத்துக்களையுடைய வெண்காந்தட்பெருஞ்செடிகளிலும், முன்றில் ஏறிய முல்லை அம் பந்தரும் - வீட்டின்முன்னிடங்களிலே ஏறிப்படர்ந்த முல்லைக்கொடிகளினாலாகிய அழகியபந்தல்களிலும், தேன் - வண்டுகள், திரந்து - கூட்டமாகக்கூடி, நின்று - (அவற்றின் பேரரும்புகளின்மேல்) மொய்த்து நின்று, ஊத - (அவற்றை) ஊதுதலால், விரிந்து - (அவை பூக்களாய்) மலர்ந்து, மன்று எலாம் - வெளியிடங்களிலெல்லாம், மணம் நாறும் - பரிமளம்வீசும்; (எ - று.)—இது - முல்லைநிலவருணனை.

பந்தல் - பந்தரென ஈற்றுப்போலி. அரோ - ஈற்றசை; செய்யுளிறுதியில் நிற்பதுமாத்திரமேயன்றி அடியிறுதியிலும் வாக்கியத்திறுதியிலும் நிற்பனவும் ஈற்றசையெனப்படும். 'குலைக்கோடல்' என்ற பாடத்துக்கு - சிறந்த சாதிக்காந்தளென்க. (கஉ)

கங.—(இ - ள்.) ஒரு பால் எலாம் - (அந்நாட்டின்) ஒருபக்கத்திலெங்கும், காவி விண்டன நெய்தலும் - பரிமளம்வீச மலர்ந்தனவான கருநெய்

நற்பூக்களிலும், நாள் மது - புதுமையான தேனையுடைய, சேறு விண்ட செந்தாமரை கானமும் - சேற்றிலுண்டாகி மலர்ந்த செந்நிறமுள்ள தாமரைமலர்களின் தொகுதியிலும், வண்டு இனம் ஏறி ஊன்ற - வண்டுகளின் கூட்டம் மேலேறி மொய்த்திருந்து அழுத்துதலால், இழிந்த -(அவற்றினின்று) வழிந்த, தேன் - தேன்கள், ஊறி வந்து ஒழுகும் - ஊற்றெடுத்துவந்து பெருகும்; (எ - று.)—இது-மருதநிலவருணனை.

விண்டன, விள் - பகுதி. சேறு விண்ட செந்தாமரை-பங்கஜம். செந்தாமரையென்பதிற் செம்மை - இனம் விலக்கும் அடைமொழி; வெண்டாமரை வேறுண்மையின். தாமரை - தாமரஸம்; கானம் - காநநம்; வடசொற்றிரிபுகள். (கங)

கச.—(இ - ள்.) கோடு உடைந்து அன - சங்குகள் உடைபட்டாற்போன்ற, தாழையும் - வெண்டாழைமலர்களும், கோழ் இருள் மோடு உடைந்து அன - செழிப்பான இருளின் திரள் உடைந்து பரவினாற்போன்ற, மூரி குவளையும் - செழிப்பையுடைய கருங்குவளைமலர்களும், தோடு உடைந்தன - இதழ்கள் முறுக்கு விரிந்தனவான, சூகமும்-(மற்றை) நீர்ப்பூக்களும், (என்னுமிவற்றோடு கூடி), கானல் - கடற்கரைச்சோலைகள், கற்பகம் காடு உடைந்தன போன்று உள -(தேவலோகத்திலுள்ள) கற்பகச்சோலை மலர்ந்தன போன்று உள்ளன; (எ - று.)—இது-நெய்தனிலவருணனை.

கோடுடைந்தன வென்ற உபமானத்தால் தாழை வெண்டாழையும், கோழிருள்மோடுடைந்தன வென்ற உபமானத்தால் குவளை கருங்குவளையுமாயிற்று. கொழுமையென்னும் பண்புப்பெயர், ஈறுபோய் ஆதிநீண்டு இடையுகரமுங்கெட்டுக் கோழெனநின்றது; போரசை, மூதூர் என்பன போல. கற்பகம் - கல்பகமென்னும் வடமொழித் திரிபு; (தம்மிடம்வந்து வேண்டுவோர் வேண்டுவனவற்றைக்) கல்பிப்பது என்றுபொருள்: கல்பித்தல்-உண்டாக்குதல். சந்தானம், மந்தாரம், பாரிசாதம், கற்பகம், அரிசந்தனம் எனத் தேவதரு ஐந்தாதலால், கற்பகக்காடு உடைந்தன என்றது. இனி,கற்பகக்காடு உடைந்தன போன்று என்பதற்கு -கற்பகச்சோலை அங்கிருந்து தவறி இங்குவந்து விழுந்தாலொத்து என்று உரைக்கலாம்; "வெற்றவின்பம் விளைவிப்பான் விண்ணுவந்து வீழ்ந்தென" என்றார் சிந்தாமணியாரும். இனி, இச்சோலைகளுக்குமுன் கற்பகச்சோலையுந் தோற்றனவென்று சொல்லும்படியெனக் கருத்துக் கொள்ளினுமொன்று. உள - உண்மையென்னும்பண்பினடியாப்பிறந்த பலவின்பாற் குறிப்பு முற்று. (கச)

கரு.—(இ - ள்.) ஓர் பால் எலாம் - (அந்நாட்டின்) ஒருபக்கத்திலெங்கும், கோடு உயர் குன்றின் மேல் - சிகரம் உயர்ந்த மலையின்மேல், ஆலும் மா மழை - ஒலிக்கின்ற மிகுந்த மழைப்பெருக்கையுடைய, நீள் முகில் - நீண்ட மேகங்கள், ஆர்த்தொறும் - (இடிமுழக்கத்தால்) ஆரவாரஞ்செய்யும் பொழுதுதோறும், மாலும் மா மயில் - (மிக்ககளிப்பால்) மயக்கங்கொள்ளுகின்ற பெரிய மயில்கள், நீலம் ஆலவட்டத்தின் நிறம் கொள கோலும் பீலிய - நீலநிறமுள்ள பெருவிசிறியினது தன்மையை யொக்கும்படி வளையவிரித்த தோகையுடையனவாய், ஆலும் - கூத்தாடும்; (எ- று.)—இது - குறிஞ்சிநிலச்சிறப்பு.

ஆலவட்டம்-கால்செய்வட்டம். கொள - உவமஉருபு; (தன்னிடத்தே) கொள்ளும்படி யென்று உரைக்கலாம். பீலிய - குறிப்புமுற்றெச்சம்; [நன் - வினை-கஉ.] தொறுவென்னும் இடைச்சொல், தன்னையேற்றசொற்பொருளெங்கும் அச்சொற்பொருளோடியையும்பொருளிருத்தலுணர்த்தும். மா, மயில்-மஞ்ஞை, மயூரம் என்னும் வடமொழிகளின் சிதைவென்பர். மேகம் வரக் கண்டு களித்து ஆடுதல், மயில்களது இயல்பு. (கரு)

க௬.—(இ - ள்.) ஓர் பால் எலாம் - (அந்நாட்டின்) ஒருபக்கத்திலெங்கும், நக்க முல்லையும் - மலர்ந்து விளங்கிய முல்லைமலர்களினின்றும், நாகு இள கொன்றையும் - மிகவும் இளமையான கொன்றைமரங்களின் மலர்களினின்றும், உக்க - கீழே சிந்தின, தாது - மகரந்தப்பொடிகள், அடர் - தம்மிடம் மிக்கிருத்தலை, கொண்டு - பெற்று, ஒலி வண்டு அறா - (அதனால்) ஒலித்தலையுடைய வண்டுகள் நீங்காது மொய்க்கப்பெற்ற, எக்கர் ஈர் மணல் - மேடுபட்டுக்கிடக்கிற குளிர்ச்சியுள்ள மணல்களை, பறவை - சேவற்பட்சிகள், கிண்டி - கிளறி, இள பெடை பக்கம் நோக்கும் - தமதுபக்கத்திலுள்ள இளமையான தமது பெண்பறவையைப் பார்க்கும்; (எ - று.)—இது - முல்லைநிலச்சிறப்பு.

பெடையைப்பார்த்தல் இங்ஙனமே தம்முடன் அதுவும் விளையாடவருதற்பொருட்டென்க; அன்றி, தமது செய்தொழிற்றிறமையைப் பார்த்துப் பேடைஅடையும் ஆனந்தத்தைக் காணுதற்கென்றுங் கொள்ளலாம்: மலர்களின் தாதுகளும் நொய்ம்மணல்களும் மேற்படிதலால் நிறம்வேறுபட்ட தம்மை வேற்றுப்பறவையென்று கருதி அப்பேடை தம்மினின்று நீங்கிப் போகாதிருக்கும்பொருட்டு அதனை அடிக்கடி நோக்குமென்றுங் கருத்துக் கொள்ளலாம்; இவ்வுரைக்கு, "புன்காஞ்சித் தாதுதன் புறம்புதையக் கிளியெனக்கண்ட, டன்பாறு மடப்பெடை யலமந்தாங் ககல்வதனை, யேன் புருகு குரலழைஇ யிருஞ்சிறகர் குலைத்துதிர்த்துத், தன்பெடையைக் குயில்தழுவத் தலைவந்த திளவேனில்" என்னுஞ்சிந்தாமணிப்பாட்டின் பொருளை அறிக. நக்க, உக்க—நகு, உகு - பகுதிகள். நாகிள - ஒருபொருட்பன்மொழி. அடர் - முதனிலைத்தொழிற்பெயர். எக்கர் - எக்கல் என்பதன் போலி. தொல்காப்பியத்துமரபியலில் "புள்ளு மூரிய வப்பெயர்க் கென்ப" என்ற சூத்திரத்தின் பின் "பேடையும் பெடையு நாடி னொன்றும்" என்றதனால், எல்லாப்பறவைக்கும் பெடையென்னும் பெண்மைப்பெயர் கொள்ளப்படும். பக்கம் - பக்ஷம் என்னும் வடசொற் றிரிபு. பறப்பது, பறவை: காரணப்பெயர்: ஐ - கருத்தாப்பொருள்விகுதி. (க௬)

க௭.—(இ - ள்.) (அந்நாட்டில்), பொய்கை - தடாகங்களில், சுரும்பொடு கள் அறாத - வண்டுகளுந் தேனும் நீங்காத, செம் தாமரை கானகத்து உள் - செந்தாமரைமலர்த்தொகுதியினிடையிலே, புள் - பறவைகள், துள்ளல் தாக்க உட்கொண்டு - (மீன்களின்) துள்ளுதல் தம்மேற்படவும் அதனைப்பொறுத்து மனத்திலே ஆலோசனைசெய்துகொண்டு, அறா - (அவ்விடத்தைவிட்டு) நீங்காதனவாய், துதைந்து - (அங்கே) நெருங்கி, உவகை இரட்டு உற - மகிழ்ச்சி முன்னினு மிரண்டுமடங்கு அதிகப்பட, அறாது புலம்பின - இடைவிடாது ஒலித்துநின்றன; (எ - று.)—இது - மருதநிலச்சிறப்பு.

"ஓடுமீ னோடி யுறுமீன் வருமளவும், வாடி யிருக்குமாங் கொக்கு," "கொக்கொக்க கூம்பும் பருவத்து" என்றபடி தமக்குத் தக்க இரையாதற்கேற்ற பெருமீன்கள் வருமளவும் விரையாமல் சிறுமீன்களின் துள்ளுதலைப் பொருள்செய்யாது பொறுத்து ஒடுங்கியிருக்கும் பறவைகளின் இயல்பை வருணித்தது இது. துள்ளல் - தொழிற்பெயர்; அல் - விகுதி. சுரும்பு - வண்டின் சாதிபேதங்களு ளொன்று; இது, எல்லாமணத்திலுஞ் செல்லும். அறா - எதிர்மறைப் பலவின்பால் முற்றெச்சம். உவகை - உவகையென்பதன்மரூஉ. இரட்டுறுதல் - இரண்டாதல், இரட்டித்தல். அறாது - எதிர்மறைவினையெச்சம். 'பொய்கை - மானிடராக்காத நீர்நிலை' என்றார் நச்சினார்க்கினியர்.

க௮.—(இ - ள்.) வெள் முளை - வெண்மையான முளையையுடைய, பசு தாமரை - பசுநிறமான தாமரைக்கொடிகள், மெல் சுருள் - மென்மையான இலைச்சுருள்களுடனும், முள் முளை இரளொடு - முள்ளரையாகிய இர

ண்டவடிவுயான நாளத்துடனும், முனிந்து கொண்டு - (மற்றைநீர்ப்பூங்கொடிகளைப்பார்த்துக்) கோபித்துக்கொண்டு [அவற்றினுஞ் செழிப்பாகத் தாம் வளரவேண்டுமென ஆவேசங்கொண்டு என்றபடி], உள் முளைத்து - நடுவிடங்களிலே முளைத்து வளர்ந்து, இள அன்னம் உழக்கலால் - இளமையான அன்னப்பறவைகள் (தம்மலர்களின் மீது மிதித்து) அலைக்கப்பெறுதலால், கழி எலாம் - (அந்நாட்டிலுள்ள) கழிகள் யாவும், கண் முளைத்த தடத்த - கண்கள்தோன்றி மலர்ந்தாற்போன்ற இடத்தையுடையன; (எ - று.)—இது - செய்தல்நிலச்சிறப்பு.

முகத்திற்குக் கண் சிறந்த உறுப்பாய் அழகுசெய்வதுபோலக் கழிக்குத் தாமரை அழகு செய்தன வென்பதாம். கள் முளைத்த எனப்பிரித்து, தேன் சுரந்த இடமுடையன வென்று முரைக்கலாம். வெண் முளைப் பசுந்தாமரை யென ஓரடியில் வெண்மை பசுமைகளாகிய நிறவேறுபாட்டை புணர்த்தும் மாறுபட்டசொற்கள் அடுத்துவந்தது, முரண்தொடையென்னும் யாப்புறுப்பு. முளைப்பகு, முளை : அங்குரம்; கருத்தாப்பொருள்விகுதி புணர்ந்துகெட்ட பெயர். சுருள் - சுருண்டவடிவாகவுள்ளது. விருக்ஷவகைகளுக்குள்ள கோழரை, பொரியரை, பொகுட்டரை, முள்ளரை என்னும் நால்வகையுள் தாமரை முள்ளரையாதலால், 'முண்முளைத்திரளோடு' என்றார். முனிந்துகொண்டு, கொண்டு - அசையாகவுமாம்; "என்றுகொண்டினைய கூறி" என்னுமிடத்திற்போல. உழக்கல் என்னுந் தொழிற்பெயரில், உழக்கு-பகுதி. தடத்த - பலவின்பால் முற்று. கழி - உப்புக்கழி. 'செஞ்சுருள்' என்ற பாடத்திற்கு, முற்றுமுரணும். (க௭)

கஅ.—(இ - ள்.) வரை மாடு எலாம் - (அந்நாட்டு) மலையிடங்களிலெல்லாம், ஏந்து சந்தனம் சாரல் - உயர்ந்த சந்தனமரங்களையுடைய மலைப்பக்கங்களிலே, கூந்து இள பிடி - பிடரிமயிரையுடைய இளமையான பெண்யானைகள், வண்டு இனம் - (தேனின்மேல் அடர்ந்து மொய்த்திருக்கின்ற) வண்டுகளின் கூட்டத்தை, காந்தள் அம் குலையால் - அழகிய காந்தட்பூங்கொத்தினால், வீச - வீசியோட்ட, இரு கை மா - பெரிய துதிக்கையையுடைய ஆண்யானைகள், குழாங்களோடு - தமது இனமான கூட்டங்களுடனே, களி - மதுவை, மாந்தி - குடித்து, நின்று - சிறிதுபொழுது மயங்கிநின்று, உறங்கும் - (பின்பு மயக்க மிகுதியால்) தூங்கும்; (எ - று.)—இது - குறிஞ்சிநிலத்தியல்பு.

வண்டினம் மதுவை விடாது மொய்த்தலின், காந்தளங்குலையால் வீசியோட்ட வேண்டியதாயிற்று. களி யென்னும் முதனிலைத்தொழிற்பெயர், களிப்புக்குக்காரணமான மதுவுக்கு ஆகுபெயர். கூந்து - கூந்தலென்பதன் விகாரம்; இச்சொல் பெண்மயிரையுணர்த்துவதேயன்றி யானைக்கழுத்தடிமயிர்க்கும் பெயராம். 'கூந்தலம்பிடி' என எமக்குக்கிடைத்தவேட்டின்பாடம். பிடி - யானையின் பெண்மைப்பெயர்; "பிடியென் பெண்பெயர் யானை மேற்றே" என்னுந் தொல்காப்பியத்தா லறிக: இதன் ஆண்பாற்பெயர், களிறு. சந்தநம் - வடசொல். சாரல் - சாருதல்; மலையைச்சார்ந்த இடத்துக்குத் தொழிலாகுபெயர். துதிக்கை நீண்டு பருத்து வளர்ந்திருத்தல் உத்தமயானையிலக்கணமாதலால், 'இருங்கைம்மா' என்றார். இருமை - கருமையும் வலிமையுமாகவுமாம். யானைக்குக் காந்தளினிடம் விருப்பமாதலை "பாயல்கொண்டு, கைக்ராகக் துஞ்சுங் கமழ்காந்தளஞ் சாரல்" என்ற சிந்தாமணியாலு முணர்க; மேல் சுயம்வரச்சருக்கத்தும் "காந்தளங்கட்கமழ்குலையாற் களிவண்டு களிறகற்றுங் கலிங்க நாடன்" என்பர். (கக)

உ௦.—(இ - ள்.) (அந்நாட்டில்), பூ தண் புறணி - அழகிய குளிர்ச்சியான முல்லைநிலத்திடங்களில், கார் செய் காலை - மேகம் மழைபெய்யுங்கா

லத்தில், ஆ இனம் - பசுக்கூட்டங்கள், தார் செய் கொன்றை தனித்த - மாலைபோலத் தோன்றுகின்ற கொன்றைமலர்கள் சொரிந்த, தண் தேறல் - குளிர்ச்சியான தேனை, உண்டு - குடித்து, (அதனாற்களித்து), ஏர் செய்கின்ற இள புல் - அழகுசெய்கின்ற இளமையான பசும்புற்களையும், இரு குழை - (மற்றைச்) சிறந்த தழைகளையும், கறித்தொறும் - கடித்துத் தின்னும்பொழுதெல்லாம், மெல்ல - மெதுவாக, போர் செய்யும் - (ஒன்றோ டொன்று விளையாட்டாகப்)போரைச் செய்யும்; (எ - று.)—இது - முல்லை நிலத்தியல்பு.

தார்செய் என்பதில், செய் - உவமவுருபாகவுமாம்; "வரைசெய் கோல மணங்கமழ் மார்பினன்" எனச் சிந்தாமணியிற் போல. கருமையென்னும் பண்புப்பெயர், ஈறுபோய் ஆதிநீண்டு இடையுகரமுங்கெட்டு'கார்'எனநின்று ஆகுபெயராய்க் கருநிறமுடைய மேகத்தை யுணர்த்திற்று. இதனால், முல்லைநிலத்திற்குரிய கார்காலங் கூறினார்; இந்நிலத்துக்குஉரியகாலம்இதுவாதலை "காரு மாலையு முல்லை" என்ற தொல்காப்பியத்தா லறிக. போர் - பொரு என்னும் முதனிலை திரிந்த தொழிற்பெயர். செய்யும் - செய்யுமென் முற்றின் ஈற்றுயிர்மெய் கெட்டது;"முடிம்"என்பதுபோல:[நன்-வினை-உஉ]. காலம் - காலை யென ஈறுதிரிந்தது; சரிதம் - சரிதை, வதம்-வதை, சாமரம் - சாமரை, கோசலம்-கோசலை என்பனபோல. (உ0)

உக.—(இ - ள்.) தடம் - தடாகங்களிலுள்ள, அள் இலை குவளை - நெருக்கமான இலைகளையுடைய கருங்குவளையரும்புகளை, மேய்ந்து - தின்று, அசைஇ - அசைபோட்டு மெல்லுதலால், கள் அலைத்த-(அவ்வரும்புகளின்) தேன் நிறையப்பெருகிய, கவுள் - கன்னங்களையுடைய, கரு மேதி - கரு நிறமுள்ள எருமைகள், பால் ஒழுக -(நிலவளப்பத்தால் தானாகவே) தமது பால் பெருகும்படி, உள் அலைத்து - அத்தடாகங்களி னுள்ளிடத்தை அலையச் செய்து,குடைந்து - (அவற்றில்) மூழ்கிவிளையாடி,உண்டலால் - (அவற்றின்) நீரைப்பருகுதலால்,புலங்கள்-(அருகிலுள்ள)அந்நாட்டுக்கழனிகள்,புள் அலைத்த புனல - பறவைகள்(அஞ்சிக்)கலக்குதற்கிடமான நீரையுடையன;(எ-று.)—இது - மருதநிலத்தியல்பு.

அசைத்து என்னும் இறந்தகாலவினையெச்சம்,'அசைஇ'எனவிகாரப்பட்டு அளபெடுத்தது; இது, சொல்லிசையளபெடையின்பாற்படும்: மாத்திரை மூன்று. எருமைகள் தாமாகவே பால்சுரத்தல், செழிப்புமிகுதியால். புனலை-குறிப்புமுற்று. எருமைகள் கலக்கிநீர்விளையாடுகிற அதிர்ச்சியால் நீர்ப்பறவைகள் அஞ்சியெழுந்து நீரையலைத்தன வென்க. (உக)

உஉ.—(இ - ள்.) கழி எலாம் - (அந்நாட்டு) நீர்க்கழிகளிலெல்லாம், கெண்டை அம் சினை மேய்ந்து - அழகிய கெண்டைமீன்களின் முட்டைகளைத் தின்று, களித்து போய் - களித்துச் சென்று,முண்டகம் துறை சேர்ந்த - தாமரைமலர்களையுடைய நீர்த்துறைகளை யடைந்த, முதலை மா - முதலைகளாகிய விலங்குகள், வண்டல் வார் கரை - வண்டல்படிந்துள்ள நீண்ட கடற்கரைகளி லுள்ள, மா மகரம் குழாம் - பெரிய சுறாமீன்களின் கூட்டத்தை, கண்டு - பார்த்து, நின்று - அஞ்சாது எதிர்நின்று, கனலும் - கோபிக்கும்; (எ - று.)—இது - நெய்தல்நிலத்தியல்பு.

மீன்முதலிய நீர்வாழுயிர்களில் சிறியவற்றைப் பெரியது நலிவது இயல்பாகவும், நீர்வளத்தாலும் இரைவளத்தாலும் அதற்குமாறாகச் சிறிய முதலைகள் பெரியசுறாமீன்களை யெதிர்த்தற்குச் சினங்கொள்வன என்றார். முண்டகத்துறை - தாழைகளையுடையதுறை யென்றும், கடலின் இறங்குதுறை யென்றுமாம். முண்டகம் - தாழை, தாமரை, கடல் முதலிய பலபொருள்குறிக்கும் ஒருபெயர்த்திரிசொல். தேவர், மனிதர், விலங்கு, புள், ஊர்வன, நீர்

வாழ்வன, தாவரம் என்னும் ஏழுபிறப்பினுள், புன்முதலியன- தேவர்மக்கள் விலங்குநரகர்என்னும்நால்வகைக்கதிகளுள்விலங்குகதியில் அடங்குதலால், 'முதலைமா' என்றார்; "சோவொன்றை யொன்றுமுன் தொடர்ந்துசீறிடங் கர்மா"என்பர் கம்பரும்.மா-டெரிய என, கரைக்குஅடைமொழியாகவுமாம்.

உ௩.—(இ - ள்.)* கண் நிலாம் - கணுக்கள் விளங்குகின்ற, கழையின் - மூங்கில்களின், கதிர் - நெற்கதிர்களின், கற்றையும் - தொகுதியும், மண்ணில் ஆம் குரல் -(முதிர்ந்தபாரத்தால்) நிலத்திற் சாய்ந்த கதிர்களையுடைய,வார் தினை வாரியும்-நீண்ட தினைப்பயிர்களின் மிகுதியும், எண் இல் - அளவில்லாதனவாய், விளைவன - விளைவனவான, ஈட்டமும் -(சோளம் சாமை முதலிய பிறமலைப்பயிர்களின்)கூட்டமும், உண்ணில் உலவாமை-(யாவரும் பிறர்க்குக்கொடுத்துத் தாம்) உண்டாலும் ஒழியாதபடி, ஆங்கு - அந்நாட்டுமலையிடங்களில், உயர்ந்த - செழித்துள்ளன; (எ - று.)—இது - குறிஞ்சிமாட்சி.

இன் கதிர் என எடுத்து - இனிய கதிர்கள் என்றுமாம். நிலாம்- நிலவும், ஆம் - ஆகும்; செய்யுமெனெச்சத்து ஈற்றுயிர்மெய் சென்றன. குரல் - பயிர்க்கதிர். மூன்றாமடியில், ஆங்க - அசை; "ஆங்கவுரையசை" என்பது தொல்காப்பியம். ஈட்டம் - தொழிற்பெயர்; ஈண்டு - பகுதி, அம் - விகுதி, வலித்தல் — விகாரம். உயர்ந்த-முற்று. உலவாமை-எதிர்மறைவினையெச்சம்.

உ௪.—(இ - ள்.) பேழ்த்த காயின - முற்றிப்பிளவுபட்ட காய்களையுடையனவான, பேர் எள் - பெரிய எள்ளுச்செடிகளும், பிறங்கு இணர்-விளங்குகிறபூக்களையும், தாழ்த்த காயன - தொங்குகிற காய்களையுமுடையனவான, தண் - குளிர்ச்சியாகிய, அவரை கொடி - அவரைக்கொடிகளும், சூழ்த்த காய் - நாற்புறத்தும்நிறைந்த காய்களையுடைய, துவரை - துவரைச்செடிகளும், வரகு - வரகுபயிர்களும், என்ற இவை - என்கிற இவைகள், முல்லை நிலங்கள் -(அந்நாட்டு) முல்லை நிலங்களில், மூழ்த்த போன்று உள-(எங்கும்) மொய்த்தனபோலநெருங்கியுள்ளன; (எ-று.)—இது-முல்லைமாட்சி.

காயின, காயன என்னும் வினையாலணையும்பெயர்களில், இன், அன் - சாரியைகள். பேரெள் - எள்ளின் ஓர்சாதி. பிறங்கு இணர் - வினைத்தொகை. அவரைக்கொடிக்குத் தண்மை-அடர்ந்து நிழல் தருதலும், பசுமையும், கண்ணுக்கினிமையுமாம். மூழ்த்த - பெயர். (உ௪)

உ௫.—(இ - ள்.) கண் அகல் நாடு எலாம் - இடம்விசாலமான அந்நாட்டின் மருதநிலமெல்லாம், மோடு கொண்டு எழு - உயர்ச்சியைக்கொண்டு வளர்கின்ற, மூரி கரும்பு கழை - வலிய கருப்பங்கழிகளை, ஊடு கொண்ட-தம்மிடத்திலேகொண்ட, பொதும்பரொடு - சோலைகளுடனே, உள் விராய்-இடையிடையே கலந்து, தோடு கொண்ட பை காய் துவள் செம் நெலின் காடு கொண்டு உள - தொகுதியைப் பொருந்தின பசுமையான நெற்கதிர்கள் (மிக்கபாரத்தால்) தலைசாயப்பெற்ற செந்நெற்பயிர்களின் மிகுதியைத் தம்மிடத்தே கொண்டுள்ளன; (எ - று.)—இது-மருதமாட்சி.

கரும்புக்கழை - இருபெயரொட்டுப் பண்புத்தொகை. பொதும்பர்-மரச்செறிவு; பொதும்பு என்னும் மென்றொடர்க்குற்றியலுகரத்துக்கு அர் - போலி. விராய் என்னும் இறந்தகாலவினையெச்சத்தில், விரா-பகுதி, ஆ-காரம், ய்-கால்ங்காட்டும் விகுதி. செந்நெல் - மிக்கநீர்வளமுள்ளஇடத்திலே விளையும் நெற்பயிரின் ஓர்சிறந்தசாதி. (உ௫)

உ௬.—(இ - ள்.) தண் கடல் நாடு எலாம் - குளிர்ந்தகடலும்கடலையடுத்தஇடமுமாகிய அந்நாட்டுநெய்தல்நிலமெல்லாம், சங்கும் - சங்குகளும், நித்திலமும் - முத்துக்களும், தவழ் இப்பியும் - தவழுந்தன்மையனவான சிப்பியென்னும் பிராணிகளும், தெங்கு அம் தீம் குலை ஊறிய தேறலும் -

தென்னைமரங்களின் அழகிய இனிய பாளைகளினின்று துளிக்கின்ற தெளிவான கள்ளும், வங்கம் வாரியும் - மரக்கலங்களின் கூட்டமும், வார் அலை வாரியும் - நீண்ட அலைகளினொழுங்கும், தங்கு வாரிய - தங்குதற்கிடமான நீரையுடையன; (எ - று.)

இப்பி - பரிசமும் சுவையு மறியும் ஈரறிவுயிர்; "முரணொடு நாவினா வறி வொடு ரறிவுயிர்" என்பர் நன்னூலார். தேறல் - தொழிலாகுபெயர். வாரிநீரையுணர்த்தும்பொழுது, வடசொல். (உசு)

கீழ்வந்த இருபதுபாடல்களுள் முதல்நான்கில் அந்தந்நிலத்துக்குரிய வாத்தியகோஷத்தோடு பிறவோசைகளும் செய்தொழில்களும், இரண்டாவது நான்கில் அவ்வந்நிலத்துக்குரிய விருக்கவகைகளும், மூன்றாவதுநான்கில் அவ்வந்நிலத்துப்பறவைவருக்கமும், நாலாவதுநான்கில் அவ்வந்நிலத்து விலங்கினமும், ஐந்தாவதுநான்கில் அவ்வந்நிலத்துக்கேற்ற உணவும் பிறவும் ஒழுங்குபடக்கூறியவாறு காண்க; "தெய்வ முணவே மாமரம் புட்பறை, செய்தி யாழின் பகுதியொடு தொகைஇ,அவ்வகை பிறவுங் கருவென மொழிப" என்னுந் தொல்காப்பியத்தால், இவை நிலத்துக்கருப்பொருளாதலறிக: "எந்நில மருங்கிற் பூவும் புள்ளும், அந்நிலம் பொழுதொடு வாரா வாயினும், வந்த நிலத்தின் பயத்த வாகும்" என்ற புறனடைச்சூத்திரத்தால்,கருப்பொருள்கள் மயங்கிவருவனவாயின் அமைத்துக்கொள்ளப்படும்.

இதுவும், மேற்கவியும், திணைமயக்கங் கூறுகின்றன.

உஎ.—(இ - ள்.) கொடிச்சியர் - குறிஞ்சிநிலப்பெண்களது, புனத்து அயல் - நிலத்தினிடத்திலுள்ள, குறிஞ்சி - குறிஞ்சிமரத்தின் மலர்கள், நெய்பகர் இடைச்சியர் - நெய்யை விற்கின்ற முல்லைநிலத்துப்பெண்களின், கதுப்பு அயல் - கூந்தலினிடத்தில், கமழும் - மணம்வீசும்; ஏழை அம் கடைச்சியர் - பேதைமைக்குணத்தையுடைய அழகிய மருதநிலத்துமகளிர், களை எறி - களைபறித்து எறிந்த, குவளை - குவளைமலர்கள், கானல்வாய் - கடற்கரைச்சோலைகளிலுள்ள,தொடுத்து அலர் பிணையலார் - தொடுக்கப்பட்டு மலர்ந்தபூமாலைகளையுடைய நெய்தனிலத்துமகளிருடைய, குழலுள் - கூந்தலில், தோன்றும் - விளங்கும்; (எ - று.)

இதில், குறிஞ்சிநிலத்தோடு முல்லைநிலத்துக்கும், மருதநிலத்தோடு நெய்தல்நிலத்துக்குங் கலப்புக்கூறியவாறு காண்க. இது "பெயரும் வினையுமென் றாயிரு வகைய, திணைதொறு மரீஇய திணைநிலைப் பெயரே" என்ற தொல்காப்பியத்தின்படி நால்வகைநிலத்துப்பெண்களுக்கு உரிய பெயரை முறையே கூறிற்று. நெய்தல்நிலத்துமகளிர்பெயர் - நுளைச்சியர். இடைச்சியர், கடைச்சியர் என்பன - இடையர், கடையர் என்பவற்றின் பெண்பால். மலையும் மலைசார்ந்தஇடமு மாகிய குறிஞ்சிநிலத்துக்கும் நாடும் நாடுசார்ந்த இடமுமாகிய மருதநிலத்துக்கும் இடையிலுள்ள காடும் காடுசார்ந்தஇடமுமாகிய முல்லைநிலத்தில் வாழ்பவ ராதலால், இடையரென்றும் இடைச்சியரென்றுங் காரணப்பெயர். புனத்தயல், கதுப்பயல்—அயல் - ஏழனுருபு. நிலங்களின்பெயர் அவற்றிலுள்ள விருக்கவகைகளாலு மமைந்தனவென்று அறிக. ஏழைமை - இளமையுமாம். களை - கட்டற்குரியது; கட்டல் - பறித்தெறிதல்: கள் - பகுதி, ஐ - செயப்படுபொருள்விகுதி. பிணையல் - தொடுத்தல்: இத்தொழிற்பெயர், மாலைக்கு ஆகுபெயர். ஆர்குழல் - வினைத்தொகை. பிணையல்-மார்பின்மாலை என்றார் நச்சினார்க்கினியர்.

இதுமுதல்மூன்றுகவிகள் - இச்சருக்கத்தின் முதற்கவி போன்ற கலிவிருத்தங்கள். (உஎ)

உ௮.—(இ - ள்.) கலவர் தம் - (நெய்தனிலத்து) மரக்கலமோட்டும் மக்களது, சிறு பறை இசையின் - சிறிய பேரிகைவாத்தியத்தின் ஓசையால், கை வினை புலவர் - (உழுதுபயிர்செய்தலாகிய) கைத்தொழிலில் தேர்ச்சியையுடைய மருதநிலத்துமக்களது, தேம் பிழி மகிழ் குரவை - இனியகள்ளையுண்டதனாற் களித்தாடுகிற குரவைக்கூத்து, பொங்கும் - மிகும்; குலவு கால் கோவலர் - (குழலூதுங்காலத்து) வளையவைக்கின்ற ஒற்றைக்காலையுடைய (முல்லைநிலத்து) இடையர்களது, கொன்றை தீம் குழல் - முதிர்ந்தகொன்றைக்காயாலாகிய இனிய குழலென்னும் வாச்சியத்தினது இசையினால், உலவு நீள் அசுணம் மா உறங்கும் - (குறிஞ்சிநிலத்துச்)சஞ்சரிக்கின்ற பெரிய அசுணமாகிய பறவைகள் துயில்கொள்ளும்; (எ - று.)— என்ப - அசை.

இது, நெய்தலோடு மருதத்துக்கும் முல்லையோடு குறிஞ்சிக்கும் மயக்கங் கூறியது. புலம் என்பது கழனியாதலின், புலவர் என்பது-உழவர்க்குக் காரணப்பெயராகலாம். குரவை - கைகோத்தாடுங் கூத்து; "குரவைக் கூத்தே கைகோத் தாடல்" என்பது, திவாகரம். கலவர், புலவர், கோவலர் - அந்தந்த நிலத்து ஆண்மக்களின் பெயர். அசுணம் - இசையினிமையறியுமியற்கையுடைய தொருவகைப் பறவை. அசுணமா - அசுணமாகிய மா என இருபெயரொட்டுப்பண்புத்தொகை;பறவையாகிய இதனை 'மா' என்றது, நால்வகைக்கதிகளுள் விலங்குகதியிலே பறப்பன அடங்குதலால்: "யாழ், கறையடுத்தவசுணநன்மா" "இன்னளிக்குரல் கேட்ட வசுணமா "பறைபடவாழாவசுணமா" என்றார்பிறரும். இது,மலையில்வாழ்வது. கலவர் தம், தம் - சாரியை; ஆதலின், கலவர் - ஆறும்வேற்றுமைத்தொகை: இனி, தம் - ஆறனுருபென்பாருமுளர். சிறு பறை-பண்புத்தொகை. பறையோசைக்கேற்ப ஆட்டமாடுபவராயின ரென்க. பிழிதலுடையது, பிழி; உடைமைப்பொருள்விகுதி புணர்ந்துகெட்ட பெயர்: பிழிதல்-சாரம் இறங்குதல். தம்தொழில்மிகுதியா லுண்டான இளைப்புத் தீரும்பொருட்டு மதுபானஞ் செய்து அம்மதுமயக்கத்தால் நடனமாடுதல் உழவரியல்பென்பார், 'கை வினைப்புலவர்தேம்பிழிமகிழ்குரவை' என்றார். (உ௮)

உகூ.—(இ - ள்.) மா கொடியால் நையும் - (மிக அதிகமாக நெருங்கி மொய்க்கின்ற) வண்டுகளின் ஒழுங்கால் வலிமைகுறைகிற, மௌவல் பந்தரும் - காட்டுமல்லிகைக்கொடிகளின் அடர்த்தியும், கார் கொடி முல்லையும் - கார்காலத்துமலர்கிற முல்லைக்கொடிகளும், மல்லிகை பூ கொடி பொதும்பரும் - மல்லிகைப்பூங்கொடிகளின் தொகுதியும், கானம் ஞாழலும்-காட்டிலுள்ள குங்குமமரங்களும்,தூ கொடி-(மற்றும்) பரிசுத்தமான [சிறந்த] பூங்கொடிகளும், கலந்து கமழ்ந்து - தன்னிடத்தேபொருந்தி மலர்மணம் வீசப்பெற்று, (அதனால் அந்நாடு), துறக்கம் ஒக்கும் - (கற்பகச்சோலைமலர் மணம் வீசுகிற) சுவர்க்க நாட்டை ஒக்கும்; (எ - று.)

முல்லை கார்காலத்துப் பூத்தலை "முல்லை காரெனப் பூப்ப" என்னுஞ் சிந்தாமணியாலும், கம்பராமாயணத்துக் கார்காலப்படலத்து "மூரன் மென்குறு முறுவலொத் தரும்பின முல்லை" என்பதாலுங் காண்க. மல்லிகை- மல்லிகா என்னும் வடமொழி ஈறு திரிந்தது. தாம்-அசை. 'தான்'என ஒருமையானபாடம் சிறந்தது. இவ்வுலகசம்பத்தைத் துறந்து அடையுமிடமாதலின், துறக்கமென்பது - காரணப்பெயர். (உகூ)

நாட்டுச்சருக்கம் முற்றிற்று.

---

# நகரச்சருக்கம்.

சுரமைநாட்டுத் தலைமைநகரமான போதனமென்னும் இராஜதானியினது சிறப்புக்களைச் சொல்லும்பாக மென்று பொருள். இச்சருக்கத்தில் முதற்பதினைந்துபாடல்களில் நகரவருணனையும், மற்றைய பத்தொன்பதுபாடல்களில் நகரத்தரசனது செய்தியுங் கூறப்படும்.

௧.—(இ - ள்.) சொன்ன - கீழ்க்கூறின, நீர் - தன்மையையுடைய, வளமைத்து ஆய - நிலவளநீர்வளப்பங்களை யுடையதான, சுரமை நாடு - சுரமையென்னும் நாட்டினது, அகணி - நடுவிடத்தை, சார்ந்து - தனக்குஇடமாகப்பெற்று, மன்னன் வீற்றிருந்து வைக - அந்நாட்டரசன் வேறொருவர்க்கில்லாதசிறப்போடுஅரசாண்டிருந்து வாழ்தற்கு இடமாக, நூலவர் வகுக்கப்பட்ட - சிற்பநூல்வல்லவர்களால் நிருமித்து அமைக்கப்பட்ட, பொன் அவிர் புரிசை வேலி - பொன்னினாலாகி விளங்குகிற மதிலினாற் சூழப்பட்டதான, போதனம் என்பது - போதனமென்று சிறப்பித்துப்பெயர்கூறப்படுவதாகிய, நாக லோகம் நகுவது ஒத்து இனியது ஒன்று - தேவலோகத்து அமராவதிபட்டணத்தை யிகழ்ந்து சிரிப்பதுபோன்று பலவகை யினிமைகளையுமுடைய ஒப்பற்றதான, ஓர் நல் நகர் - ஒரு சிறந்தநகரம், உண்டு - இவ்வுலகத்தி லுள்ளது; (எ - று.)

சொன்ன என்னும் பெயரெச்சத்தில், இன் என்னும் இறந்தகாலவிடைநிலை முதல்தொக்கது. நீர் - நீர்மையென்னும் பண்படி; இனி, நீர்வளமைத்து - நிலவளத்துக்குக் காரணமான நீர்வளத்தையுடையது என்று முரைக்கலாம். வளமைத்து என்னும் ஒன்றன்பாற்குறிப்பு வினையாலணையும்பெயரில், பகுதியான வளமையென்பதில், மை -பகுதிப்பொருளுணர்த்தும் விகுதி; இதனை, வடநூலார் ஸ்வார்த்தபாவதத்திதப்பிரத்தியயமென்பர்: தன்மைப்பொருள்விகுதியென்றலும் ஒன்று. ஆய என்னுந் தெரிநிலைப்பெயரெச்சத்தில், ய்-இறந்தகாலவிடைநிலை. மன் - பெருமை; உரிச்சொல்: அதனை உடையவன்-மன்னன். இராஜதானியென்னும் பெயரின் பொருள் தோன்ற, 'மன்னன்வீற்றிருந்துவைக' என்றார். இங்கே மன்னனென்றது, பயாபதியையாகலாம். வீறு - வேறொருவர்க்கில்லாத சிறப்பு. வேலி - காவலாகச் சூழ்ந்துள்ளபொருள். நாகலோகம்-பாதாளலோகத்து ராஜதானியான போகவதி யெனினுமாம். இங்கே நகுதல், பிறபொருளையிகழ்தல்காரணமாகப்பிறந்தது. "ஊரெனப்படுவதுறையூர்" என்பதுபோல, 'போதனமென்பது' என்றது-சிறப்புத்தோன்றநின்றது. என்பது எனச்செயப்படுபொருள் வினைமுதல்போலக்கூறப்பட்டது; அகரச்சாரியையுஞ் செயப்பாட்டுவினைப்பொருளுணர்த்தும் படுவிகுதியுந் தொக்க தென்னலாம்: "இல்வாழ்வா னென்பான்" என்பதிற்போல. உண்டு - இருதிணையைம்பால் மூவிடத்துக்கும் பொதுவான (உடன்பாட்டுக்) குறிப்புமுற்று; வேறு, இல்லை என்பனவு மிவ்வாறே: [நன்-வினை-௨0]. இங்கே, இதற்கு, நகர்என்னும் ஒருமைச்சொல் எழுவாயாதலால், உள் என்னும்பண்படி டுஎன்னும்ஒன்றன்பால்விகுதி பெற்ற தென்றுங் கொள்ளலாம். வைக, வைகு - பகுதி.

இதுமுத லைந்துகவிகள் - பெரும்பாலும் முதற்சீரும் நான்காஞ்சீரும் விளச்சீர்களும் மற்றைநான்கும் மாச்சீர்களு மாகிய கழிநெடிலடி நான்கு கொண்ட அறுசீராசிரியவிருத்தங்கள்; இவற்றில், மூன்றாறுஞ்சீர்கள் தேமாச்சீர்களாகவே நிற்கும். (௧)

௨.—(இ - ள்.) சங்கம் எய் - சங்குகள்பொருந்தின, தரங்கம் - அலைகளாகிய, வேலி - கரையெல்லையையுடைய, தட கடல் - பெரிய கடலாகிய, பொய்கை - தடாகத்தினிடையிலே, பூத்த - மலர்ந்த, அம் கண் மா ஞாலம் என்னும் - அழகியஇடத்தையுடைய பெரியபூலோகமென்கிற, தாமரை அலரின் - செந்தாமரைப்பூவினிடத்திலுள்ள, அம் கேழ் - அழகியஒளியை

யுடைய, செம் கண் மால் சுரமை என்னும் - சிவந்தகண்களையுடைய திவிட்டன் பிறக்குமிடமான சுரமைநாடென்கிற, தேம் பொகுட்டு அகத்து - இனியகொட்டையினிடத்திலே, வைகும் - வாழ்கின்ற, நங்கையார் - பெண்களிற்சிறந்த திருமகள், படிவம் கொண்ட - (ஒருபட்டணத்தின்) வடிவத்தையெடுத்துத்தோன்றினா லொத்த, நலத்தது - நல்லதன்மையையுடையது: நகரம் - அந்தப்போதனமாநகரம்; (எ - று.)—அன்றே - ஈற்றசை; தேற்றமெனினுமாம்.

இச்செய்யுளில், அலையைக் கரையாகவும், கடலைப் பொய்கையாகவும், பூமியைத் தாமரைப்பூவாகவும், நாட்டை அதன்பொகுட்டாகவும், நகரத்தை அதிலெழுந்தருளியிருக்குந் திருமகள்வடிவமாகவும்,இங்ஙனம் எல்லா உறுப்புக்களையும் உருவகப்படுத்தினமையின்,முற்றுருவகவணி; உருவகப்படுத்தலாவது-உபமானஉபமேயங்களுள் ஒருபொருளினிடத்து மற்றொருபொருளின் தன்மையைப் பேதமில்லாமல் ஏற்றிக்கூறுதல்: இதனை வடநூலார் ரூபகமென்பர். இமவானில் மாகதப்பாறையில் பதுமையென்னுங்கயத்தில் தோற்றிய பொற்றாமரையில் திருமகள் அவதரித்தனள் என்பது ஒருகதை; "அருமணி மரகதத் தங்க ளூறிய, எரிநிறப் பொன்னித ழேந்து தாமரைத், திருமகள்" என்றார் சிந்தாமணியிலும். சங்கம் - பங்க்கம்; வடசொற்றிரிபு: இது, கடைக்குறைவிகாரமாய்ச் சங்கெனவும்நிற்கும். தரங்கம் - வடசொல் சங்கம் மேய என்றும் பிரித்துரைக்கலாம். தட - பெருமையுணர்த்துமுரிச்சொல்; "தடவுங் கயவு நளியும் பெருமை" என்பது தொல்காப்பியம். தடங் கடல் - உரிச்சொற்புணர்ச்சியாதலின், இனமெலி மிக்கது;[நன்-மெய் - ௩௬]. தடம்என மகரவீறாகப்பிரித்தல், முன்னூல்களோடு முரண்படும். அலர்வது - அலர்; வினைமுதற்பொருள்விகுதி புணர்ந்துகெட்டது. செங்கண்மால் - பயாபதியரச னெனினுமாம். நங்கை - பெண்பாற்சிறப்புப் பெயர்; [நன்-பெயர்-௨௦]. இதனை, நமக்கு இன்னள் என்னும் பொருள்பட வருவதோர் உயர்ச்சிச்சொல் லாகக் கொள்ளலாம்; கை - முறைப்பெயர் விகுதி. இதன்மேல், ஆர் என்னும் பலர்பால்விகுதி, சிறப்புப்பொருளுணர்த்திற்று. நலம் - பண்புப்பெயர்; அம் - விகுதி. நகரத்துக்குத் திருமகளுவமை - யாவராலும் விரும்பப்படு மழகுக்கும், இயற்கையில்மிக்க செல்வச் சிறப்புக்கு மென்க. ஏய்தரங்கம் - வினைத்தொகை. (௨)

௩.—(இ - ள்.) செம் சுடர் கடவுள் - சிவந்த கிரணங்களையுடைய சூரியபகவானுடைய, திண் தேர் - வலியதேரிற்பூட்டிய, இவுளி - குதிரை, கால் தவள - தனதுகால் மெலிய, ஊன்றும் - ஊன்றுதற்கிடமான, மஞ்சு உடை மதர்வை நெற்றி - (வானத்தேசெல்லுகின்ற) மேகங்களை இடையிலே உடைக்கின்ற செழித்துவளர் தலையுடைய மேலிடத்தையுடைய, வான் உழு வாயில் மாடத்து - (தனதுசிகரத்தால்) ஆகாயத்தைக் கீறுகின்ற நகரவாசல்களின் மேலிடத்துள்ள கோபுரத்தையுடைய, அம் சுடர் இஞ்சி - அழகிய ஒளியையுடைய மதிலானது, ஆங்கு - அந்நகரத்தின் சுற்றிடத்தில், ஓர் அகழ் அணிந்து - ஒப்பற்ற அகழியாற் சூழப்பட்டு, அலர்ந்த - விளங்குகிற, தோற்றம் - காட்சி, முந்நீர் - கடலையொத்து, வெம் சுடர் விரியும் வேதிகை - வெப்பமான ஒளிகள் பரவுதற்கிடமானதொரு பெருமேடையை, மீது இட்டன்று - மேலாக அமைத்துவைத்தது (போன்றது); (எ - று.)

உவமவுருபில்லாமற் கூறினமையால், இது உருவகவணி. அகழிக்குக் கடலும், மதிலுக்கு மேடையும் உவமை. சந்திரன் என வெண்சுடர்க் கடவுளொன்று உள்ளதனால், செம்மையென்பது- இனம்விலக்கவந்த அடைமொழி. கடவுள்-தேவன்; (இவ்வுலகசம்பந்தத்தைக்) கடத்தலையுடையவன்: காரணக்குறி; தொழிலாகுபெயர்: உள் - தொழிற்பெயர்விகுதி; விக்குள்,

செய்யுள், பாய்த்துள், விளையுள் என்பவற்றிற்போல. இண்டேர் என்றது, படைப்புக்காலந்தொடங்கி நாள்தோறுமிடைவிடாதுபயன்பட்டும் வலிமையழியாத தேரென்றபடி. சூரியனுக்குத் தேரென்பது மண்டலத்தையென்பர். சூரியன்றேர்க்குதிரை ஒன்றெனவும், ஏழெனவு மிருவகையாகக் கூறுவர். இவுளி கால்இவளா வூன்றும் என்பதற்கு- சூரியன்றேர்க்குதிரையின் கால் இம்மதிலின்மூகட்டின்மேற்பட்டு இடறுதலால் நோவடைந்து நேர்படநடவாமல் ஊன்றியூன்றி நடக்குமென்றவாறு, இவ்வளவுகாலமாய் இடைவிடாது நிராதாரமாக ஆகாயமார்க்கத்தில் ஓடிச்செல்லுகின்ற சூரியன் தேர்க்குதிரை தனதுகால் நோகுதலால் அந்நோவையாற்றும்பொருட்டுச் சிறிதுபொழுது இம்மதிலாகிய ஆதாரத்தின்மீது காலையூன்றிச் செல்லுமென்றவாறு கருத்துக்கொள்க. இவளா என்னுஞ் செயவெனெச்சம்-இரண்டுகருத்திற்கும் காரணப்பொருளது; முந்தினகருத்திற்குக் காரணப்பொருளுமாம். சூரியன்குதிரைக்கும் மதிலுக்குஞ் சம்பந்தமில்லாதிருக்கவும் சம்பந்தத்தைக் கற்பித்துக்கூறியதனால், தொடர்புயர்வுநவிற்சியணி; இதனை வடநூலார் அத்யந்தாதிசயோக்தி யென்பர். இது - இச்செய்யுளில் உருவகவணிக்கு அங்கமாகாது நின்றது; இங்ஙனம் பலவணிகள் ஒருசெய்யுளிற் கலந்துவருவது ஸங்கீர்ண மெனப்படும். உடைநெற்றி - பிறவினை வினைத்தொகை; 'உரைகல்' என்பதுபோல. இனி, உடை என்பதை உடையவென்னுங் குறிப்புப்பெயரெச்சத்து அகரவீறு தொகுத்த லெனக்கொண்டால், மஞ்சுடைநெற்றி - மேகங்களைத் தம்மீதுடைய சிகரமென்றும், அழகையுடைய சிகரமென்று முரைக்கலாம். மஞ்சு - அழகென்னும்பொருளில், வடசொல். மதர்வை - செருக்குமாம். இல் வாய் - வாயில் என முன்பின்னாக மாறியது-இலக்கணப்போலி; வீட்டின்முன்னிடம் என்றுபொருள்: இங்கே, இலக்கணையாய் நகரத்துமுன்னிடத்திற்கு வந்தது. அகழப்படுதலின் அகழெனக் காரணப்பெயர்; அகழ்தல் - தோண்டுதல்: இ என்னுஞ் செயப்படுபொருள்விகுதி புணர்ந்துகெட்டது. தோன்றுவது, தோற்றம்; தோன்று - பகுதி, அம் - கருத்தாப்பொருள்விகுதி, வலித்தல் - விகாரம். வெஞ்சுடர் - விரும்பப்படுமொளி யென்றுமாம். வெம்மையென்பது பண்புப்பெயராம்பொழுது கொடுமையையுணர்த்துவதேயன்றி உரிச்சொல்லாம்பொழுது விருப்பமுணர்த்துவதாதலை "வெம்மைவேண்டல்" என்னுந் தொல்காப்பியத்தால் அறிக. முந்நீர் - மூன்றுதன்மையையுடையதெனப் பண்புத்தொகையன்மொழிக் காரணப்பெயர்; மூன்று, ஈறுகெட்டு முதல்குறுகி னகரமெய் திரிந்தது: நீர்மையென்னும் பண்புப்பெயர் ஈறுபோயின்றது; மூன்றுதன்மைகள் - பூமியைப் படைத்தல், காத்தல், அழித்தல் என்பன: நீரினின்று நிலம்பிறந்ததென வேதமோதுதலாற் படைத்தலும், நீரின்றிஉலகம்பிழையாதாதலாற்காத்தலும், இறுதியில் நீரினால்மூடப்பட்டு உலகம்அழிதலால் அழித்தலும் ஆக முத்தொழில்களுங் கடலுக்கு உரியன வாயின; இனி, ஆற்றுநீர் ஊற்றுநீர், வேற்றுநீர் [மழைநீர்] என்னும் மூவகைநீரையுடைய தென்பாருமுளர்: ஆற்றுநீர்-மழைநீராதலாலும், இவ்விரண்டுமில்லாதவிடத்து ஊற்றுநீருமில்லையாமாதலாலும், அது பொருந்தாது; இனி, முதிய நீர்என்றும்பொருள்கொள்ளலாம்: ஆதியிற் கடவுள் நீரையே படைத்தார் என்று புராணங்கூறுதலின்; இனி, முன்னீர் என்று, நகரத்தை மாற்றிப் பாடங்கொள்ளுதலுமொன்று. வேதிகை-ஆவீறு ஐயான வடசொல். இட்டன்று - இடு என்னும்பகுதி தன்னொற்றிரட்டி இறந்தகாலங்காட்டி அன்சாரியையையும் றுஎன்னும் விகுதியையும் பெற்றுவந்த தெரிநிலையொன்றன்பால்முற்று. யாகமேடையையுணர்த்தும் வேதிகையென்பது, இலக்கணையாய்ப் பின்பு எல்லாமேடைகளையு முணர்த்தும். (௯.)

௪.—(இ - ள்.) இரும்பு இடு தொடரின் - இரும்பினாலமைக்கப்பட்ட சங்கிலிகளால், மாவின் - மாமரங்களிலே, எழு முதல் பிணித்த - கால்களைக்கட்டப்பட்டுள்ள, யானை - யானைகளுக்கு, கரும்பு - கரும்புகளையும், இடு கவளம்-(மற்றும்) கொடுத்தற்குரிய (வேறுவகை) உணவுத்திரள்களையும், ஊட்டும்-(பாகர்கள்) உண்பிப்பதனாலாகிற, கம்பலை-ஓசை, கலந்த- எங்கும் நிறைந்துள்ள, காவின் - சோலைகளிலே, அரும்பு இடை அவிழ்ந்த போதின்- அரும்புகளின் இடையிடையே மலர்ந்துள்ள பூக்களின், அல்லி - நடுவிடத்திலுள்ள தேனை, உண்டு - குடித்து, அரற்றுகின்ற- ஆரவாரஞ்செய்கின்ற, சுரும்பொடு -வண்டுகளுடனே, அடைந்து - நெருங்கி, சூழ் மதில் இருக்கை எல்லாம் - அந்நகரத்தைச் சூழ்ந்த மதில்களின் இடமெல்லாம், தோன்றும் - விளங்கும்; (எ - று.)

"மணிநீரு மண்ணு மலையு மணிநிழற், காடு முடைய தரண்" என்னுந் திருக்குறளின்படி நகரத்துக்குக் காவலாகக் கூறப்படுகிற நீரரண், நிலவரண், மலையரண், காட்டரண் என்னும் நால்வகையரண்களுள் நீரரணைக் கீழ்க்கவியில் 'அகழணிந்து' என்பதனாலும், பொதுப்படச் சிறப்பித்துக் கூறப்படுகிற மதிலாகிய அரணைக் கீழ்க்கவியில் 'அஞ்சுடரிஞ்சி' என்றதனாலுங் கூறி, இக்கவியால், செறிந்தகாடாகிய அரண் அந்நகரத்தைச் சுற்றிலும் நெருங்கியமைந்திருத்தலைக் கூறினார்; கம்பராமாயணத்திலும் நகரப்படலத்தில் "அன்னமா நகரைச் சூழ்கிடந்த வாழியைத், துன்னிவேறு சூழ்கிடந்த தூங்குவீங் கிருட்பிழம், பென்னலா யிறும்புசூழ்கிடந்த சோலை" என அகழியைச் சுற்றிலுஞ் சோலைகூறியவாறு காண்க. தொடர் - ஒன்றோடொன்றுதொடர்தலையுடைய தெனக் காரணப்பெயர். மா - மரப்பொதுப்பெயராகவுமாம். எழு முதல் -எழுதற்குக்காரணமான உறுப்பு; எனவே, காலாயிற்று. கவளம் - சோற்றுத்திரளை, வாயளவுகொண்ட உணவு; கபளமென்னும் வடமொழித் திரிபு. இனி, கரும்பிடுகவளமென்பதற்கு - கரும்பாகிய இடுதற்குரிய உணவென்றும் உரைக்கலாம். ஊட்டும்,ஊட்டு-பகுதி; பிறவினை: இதன் தன்வினை - உண்; அது முதல் நீண்டது - விகாரம், டு - பிறவினை விகுதி. ஊட்டுங்கம்பலை - பெயரெச்சம், காரணப்பொருளது. யானைகளுக்குக் கவள மூண்பிப்பவர் அவற்றை அதட்டி எழுப்பிக் குறிப்புமொழிகளை இரைந்துகூறும் ஒலியை 'கவள மூட்டுங் கம்பலை' என்றது. கா-சோலை; காக்கப்படுவதுபற்றிவந்த காரணக்குறி: இங்கே, காவலாகவுள்ளதென்றும் பொருள்கொள்ளலாம். அல்லி - அகவிதழ். இச்செய்யுளில், இரண்டாமடியில், மூன்றுஞ்சீரொன்றொழிந்த சீரெல்லாம் - முற்றுமோனை; [யானைக்கு அரும்பிடெனப் பதம்பிரித்து உரைத்தல் மோனைத் தொடைக்கு முழுவதும் வழுவாதல் காண்க.] (௪)

௫.—(இ - ள்.) மான் அனாம் - மான்பார்வைபொருந்திய, மதர்வை நோக்கின் - களிப்போடுகூடிய பார்வையையுடைய, மை - அஞ்சனமிட்ட, அரி- (உத்தமவிலக்கணமாகிய சிவந்த சில) இரேகைகளையுடைய, மழை- குளிர்ச்சியையுடைய, கணும்-கண்களையுடைய மகளிரும், தேன் அனாம்- தேன்நிறைந்த, உருவம் கண்ணி - அழகியபூமாலைகளை யணிந்த, செல்வரும்- செல்வமுடையவரான ஆடவர்களும், திகழும்-(தம்மில் ஒருவரோடொருவர் கூடி) விளங்குதற்கிடமான, மாடம் - (அந்நகரத்து) உப்பரிகை வீடுகள், கண்ணுள் -இடந்தோறும், கான் அனாம்-வாசனைபொருந்தின, காமவல்லி- காமவல்லி யென்னுங் கொடியும், கற்பகம் - கற்பகவிருட்சமும், கலந்த - (தம்மில் ஒன்றோடொன்று கூடிப்) பொருந்தப்பெற்ற, வான் அனாய் மலர்ந்து தோன்றும் மணி வரை ஒன்று - ஆகாயத்தையளாவி உயர்ந்துவிள

ங்கிக் காணப்படுவதொரு அழகியமலை உண்டாயின் அதனை, அனையது - (தனித்தனி) ஒக்கும்; (எ - று.)

உவமையணி. மகளிர்க்குக் காமவல்லியும், மைந்தர்க்குக் கற்பகமும், உயர்ந்த பெரிய வலிய மாடங்களுக்கு மலையும் உவமை. மான் - அதன்பார்வைக்கு முதலாகுபெயர். அளாம்என்பதை உவமவுருபாக்கொண்டு, மான்பார்வையொத்தபார்வை யென்றுமாம். அளாம் - அளாவும்; செய்யுமெனெச்சவிகாரம்: அளாவு - பகுதி. உருவம் - ரூபமென்னும் வடமொழித் திரிபு; இது - உரு, உருவு என்றும் விகாரப்பட்டு வழங்கும். 'செல்வர்' என்றதனாலும், கற்பகத்தை உவமைகூறியதனாலும், அந்நகரத்து ஆண்மக்கள் தமது செல்வங்களை வேண்டியார் வேண்டியபடி வரையாது தானஞ்செய்பவரென்க. காமவல்லி - கற்பகத்திற் படர்கொடி; காமம் - விருப்பம், வல்லி - கொடி: வடசொல்; அதுவும் விரும்புவார் விரும்பும் பொருள்களை யெல்லாங் கொடுப்பதாதலின் இப்பெயரதாயிற்று. செல்வம்என்பதற்கு - போவோம் என்று பொருளுரைத்து, திரவியத்துக்கு நிலையாமைபற்றிவந்த காரணக்குறி யென்பர். தேன் அளாம் - வண்டுகள்நெருங்கிய வென்றும், மணி வரை - இரத்தினங்களைப்பதித்த மாளிகை யென்றுங் கொள்ளலாம். 'கண்ணன்' என்பதில் 'ஆன்' என்னும் மூன்றுமுருபு, தொறுப்பொருளது; 'ஊரானொரு தேவகுலம்' என்பதிற்போல: இவ்வுதாரணத்துக்கு - ஊர்தோறும் ஒரு தேவாலயமென்று பொருள். மாடம் - சாதியொருமை; ஆதலால், அனையதென்னும் ஒருமைமுற்றைக் கொண்டது. அளாய்என்னும் இறந்தகால வினையெச்சத்தில், பகுதியீறு விகாரப்பட்டது. மை - கரிய என்றுமாம். 'மழைக்கணார்தம்' என்றும், 'செல்வர்தோடினைக்கும்' என்றும் பழையபாடம்.

௯.—(இ - ள்.) அகில் - (புகைக்கப்படுகிற) அகிற்கட்டைகளினின்றும், எழு - உண்டாகி மேலெழுகிற, கொழு - மிகுதியான, புகை - புகையானது, மஞ்சின் - (கரிய) மேகங்கள்போல, ஆடவும் - அசைந்து தோன்றுதலாலும், முழா - மத்தளங்கள், முகில் இசை என - மேககர்ச்சனைபோல, முரான்று விம்மவும் - ஒலித்து மிகுதலாலும், துகிலிகை கொடி அனார் - சித்திரத்திலெழுதிய பூங்கொடியை யொத்த மகளிர், மின்னின் - மின்னல்போல, தோன்றவும் - விளங்கிக் காணப்படுதலாலும், மாடம் (அந்நகரத்து) உபரிகை மாளிகைகள், மலையொடு - மலைகளோடு, இகலின - மாறுபட்டன [ஒத்தனவென்றபடி]; (எ - று.)

அகில் - சந்தனம்போல நறுமணமுடையதொரு மரம்; இது, முற்றின கள்ளிச்செடியினிடையிலே உண்டாவதும் உண்டு. இது - பஞ்சவிரையின் ஒன்றும்; பஞ்சவிரை - ஐந்துவாசனைப்பொருள்: அவை - கோட்டம், துருக்கம், தகரம், அகில், சந்தனம்என்பன. இதன்புகை, மாடத்தினிடத்துக்கும் மகளிர்கூந்தலுக்கும் ஆடைக்கும் பரிமளமுண்டாக்குதற்பொருட்டு இடப்படுவது. முரன்று, முரல் - பகுதி. விம்ம, விம்மு - பகுதி. மேன்மேற் சேர்திருத்தக்கூடியசித்திரத்தி லெழுதுங்கொடி இயற்கையாகவுள்ள கொடிகளினும் அழகியதாக இருக்குமாதலின், துகிலிகைக்கொடியைச் சுந்தரமாதர்க்கு உவமைகூறினார்; இனி, சித்திரப்பாவையையும் பூங்கொடியையும் ஒத்தவரென்றும் உரைக்கலாம். மின் - மகளிர்க்கு, ஒளியாலும் மெல்லியவடிவத்தாலும் உவமை. இகலின, இகல் - பகுதி. மலை - மலையப்படுவதெனக் காரணப்பெயர்; மலைதல் - அஞ்சுதல்: செயப்படுபொருள்விகுதி புணர்ந்துகெட்டது. என்ப - அசை. காரணங்காட்டி உவமைகூறினமையின், இது ஏதுவுவமையணி.

இதுமுதல்இருபத்திரண்டுகவிகள் - இச்சருக்கத்தின் முதற்கவி போன்ற கலிவிருத்தங்கள். (௯)

எ.—(இ - ள்.) கண் எலாம் - (பார்ப்பவர்களுடைய) கண்களெல்லாவற்றையும், கவர்வன - (வேறுபொருளினிடத்திற் செல்லவொட்டாமல் தம்மழகால் தம்மிடம்) இழுப்பனவான, கனக கூடமும் - பொன்னினாலாகிய கூடங்களும், வெள் நிலா சொரிவன - வெண்மையான சந்திரகாந்தி போன்ற ஒளியை வீசுவனவான, வெள்ளி வேலியும் - வெள்ளியினாலாகிய சுற்றுச்சுவர்களும், தண் நிலா தவழ் - குளிர்ந்த சந்திரகாந்திக் கொப்பான வெண்ணிறக்காந்தி பொருந்திய, மணி - (ஸ்படிகக்)கற்களினால் அமைக்கப்பட்ட, தலமும் - அடியிடங்களும், சார்ந்து - பொருந்தி, மதலை மாடம் - பெருந்தூண்களையுடைய (அந்நகரத்து) மாளிகைகள் மண்ணினால் இயன்றில - (சாதாரணமாக) மண்ணினாற் சிறிதும் அமைக்கப்பட்டனவில்லை; (எ - று.)

இது - செல்வமிகுதிச் சிறப்பைக் கூறுதலால், வீறுகோளணி; இதனை வடநூலார் உதாத்தாலங்காரமென்பர். கண்ணெலாம் - ஒருமைப் பன்மை மயக்கம்; [நன் - பொது - உக:] கண் - ஒருமைச்சொல்லும், எலாம் - பன்மைச்சொல்லுமாம். கநகம்- வடசொல். கூடம் - மாளிகையின் உள்ளிடங்களுள் ஒன்று. வெண்ணிறமுடையதாதலின், வெள்ளியெனக் காரணப்பெயர்; வெள் - பண்படி, பகுதி: இ - பெயர்விகுதி. தலம் - கற்படுத்தவிடம். தண் நிலாத் தவழ் மணி யென்பதற்கு - குளிர்ந்த சந்திரகாந்தி படுதலால் நீருமிழுஞ் சந்திரகாந்தக்கல் லென்று உரைப்பாருமுளர். அரோ- ஈற்றசை; தேற்றமெனினுமாம்: 'இடைச்சொற்களுக்கெல்லாம் இடத்திற்கேற்பப் பலபொருளுங் கொள்ளலாம்' என்பது, வடமொழிநியாயம். 'மண்ணினால்' என்பதில், உபலக்ஷணத்தால், செங்கல் கருங்கல் சுண்ணாம்பு முதலிய கருவிகளையுங் கொள்க; [உபலட்சணமாவது - ஒருமொழி, ஒழிந்த தன் இனங்களையுங் குறிப்பது: நன் - பொது - எ.] தலம் - ஸ்தலமென்னும் வடசொல் விகாரம். இயன்றில - எதிர்மறை யிறந்தகாலப்பலவின்பால்முற்று; இயல் - பகுதி, ற் - காலவிடைநிலை, இல் - எதிர்மறையிடைநிலை, அ - பாலுணர்த்தும்விகுதி. மதலையென்னுஞ்சொல் தூணென்னும் பொருளதாதலை "மதலையாய் மற்றதன் வீழூன்றி யாங்கு" என நாலடியாரிலுங் காண்க. வேலி - காவற்சுற்றுமதில். (எ)

அ.—(இ - ள்.) மாடம்வாய் - மாளிகைகளிலே, மணி முழா - அழகிய மத்தளங்களின், இசையும் - ஓசையும், மங்கையர் ஆடுவார் - நர்த்தனஞ் செய்பவரான மகளிரது, சிலம்பு இணை - இரண்டு (கால்களிலுமணிந்துள்ள) சிலம்பென்னும் அணிகள், அதிரும் - மிக அசைதலாலாகிய, ஓசையும் - ஒலியும், பாடுவார் - பாடுகின்ற ஆடவர்மகளிர்களது, பாணியும் - சங்கீத வோசையும், பயின்று - எங்கும் இடைவிடாதுபொருந்தி, (அதனால்),மாண் நகர் அது - மாட்சிமையுடைய அந்தப்போதனநகரமானது, பல் கலம் மூடி ஆர்வது ஒக்கும் - பலவகையாபரணங்களையும் மேலணிந்து (அவற்றின் அசைவால்) ஒலிப்பதை ஒக்கும்; (எ - று.)

முழவொலி, சிலம்பொலி, பாட்டொலி என்பன ஆபரணங்களின் ஒலி போலக் காதுக்கு இனியனவாயிருந்தன வென்பதாம். உவமையணி. பன்னிரண்டுபிராயமடைந்த இளமகளிரே நடனத்திற்குச்சிறந்தவ ரென்பது நூல்மரபாதலால்,'மங்கையராடுவார்'என்றார்;"நடநவின் மங்கை மாதவி"எனவும், "ஆடலும் பாடலு மழகு மென்றிக், கூறிய மூன்றி னொன்றுகுறைபடாமல்,ஏழாண் டியற்றியோ ரீரா றாண்டிற், சூழ்கழன் மன்னற்குக் காட்டல் வேண்டி" எனவுஞ் சிலப்பதிகாரத்து இளங்கோவடிகளும், "பன்னிரண்டாண், டெய்த்ததற்பி னுடனுடன் பாடலுழ கிம்மூன்றும், வாய்த்தவரங் கேற்றல் வழக்கு" எனப் பாதசேனாபதியாருங் கூறியவாறு காண்க: மங்

லைப்பருவத்துக்கு வயதெல்லை, பன்னிரண்டுமுதற் பதின்மூன்றளவும். பாண் - பாட்டு; இ - சாரியை. பாணி - தாளவொத்தெனினுமாம்; இவ்வுரைக்கு, கையையுணர்த்தும் பாணியென்னும் வடசொல், அதனால் இடுந் தாளத்திற்கு ஆகுபெயரென்க. பயின்று, பயில் - பகுதி. (அ)

௯.—(இ-ள்.) (அந்நகரத்தில்), ஏழை வாய் - பேதைமையைத் தம்மிடத்தேயுடைய, சுரும்பு இனம் - வண்டுகளின் கூட்டம், தாழிவாய் - நீர்நிலைகளிலேயுள்ள, குவளையும் - கருங்குவளைமலர்களினிடத்தும், தண் என் ஓதியர் - (சூடினபூக்களின் தேன்மிகுதியால்) குளிர்ந்த கூந்தலையுடைய மகளிரது, மாவழை வாள் - (வடிவத்தில்) மாவடுவையும் (கூர்மையில்) வாளாயுதத்தையும் போன்ற, நெடு கணும் - நீண்ட கண்களினிடத்தும், மயங்கி - (தேனுண்ட களிப்புமிகுதியாலும் ஒப்புமைச்சிறப்பாலும் ஒன்றை ஒன்றாக) மாறுபடக்கருதி, வந்து சென்று - வந்துகொண்டும் போய்க்கொண்டும், ஆழி - கடலொலிபோலவும், வார் மின் - நீண்ட இடியோசைபோலவும், குரல் - தமது கண்டத்தொனியால், ஆலித்து - ஒலித்து, ஆர்த்து - ஆரவாரஞ்செய்து, இளைக்கும் - வலிமைகுறையும்; (எ - று.)

என்பவே - ஈற்றசை; என்று (புலவர்) வருணிப்பர் என்றதும் ஒன்று. வண்டுகள் கருங்குவளைமலர்களை அடைந்து அவற்றை மகளிர்கண்ணெனக் கருதி அவற்றில் மொய்க்காமல் மீண்டுவந்து மகளிர்கண்களைக் கருங்குவளைமலரெனக் கருதி மொய்த்தற்பொருட்டு அருகில் விரைந்துசென்று சேர்கையில் அவை மகளிர்கண்களெனத் தெரிதலால் அங்கும் மொய்க்க இடம்பெறாமல் மீண்டு இங்ஙனம் பற்பலகால் மயக்கவுணர்ச்சியுடனே திரிந்து தமதுவிருப்பம்நிறைவேறாமல் அலறி வருந்துமென்பதாம். இதில் ஒன்றை ஒன்றாக மயங்கியதாகக் கூறினமையின், மயக்கவணி; வடநூலார் பிராந்திமதலங்காரமென்பர். இதனால், சிறந்த பூக்களோடு கூடிய நீர்நிலைகளின் வளமும், சிறந்த உறுப்பான மகளிர்கண்களின் அழகும் கூறப்பட்டன. தாழியென்பது நீர்நிலையாதலை "தாழிவாய் மறைக்குந் தண்ணென் தடம்பெருங் குவளைக் கண்ணார்" எனச் சிந்தாமணியிலுங் காண்க; இச்சொல்லுக்குச் சமமாகக் குண்டமென்று நீர்நிலைக்கு ஒருபெயருங் காண்க: இனி, தாழிவாய்க்குவளை என்பதற்கு குடம்போலும்வாயையுடையகுவளைமலரென்றுஉரைப்பாருமுளர்;சிந்தாமணிச்செய்யுளில் அங்ஙனம்பொருள்சொல்லக்கூடாமை அறிக. தண்ணெனல் - குளிர்ச்சிக்குறிப்பு. ஓதிக்குத் தண்மை - கண்ணுக்கினிமையுமாம். ஓதி-பெண்மயிரின்பெயர்; ஐம்பால், கூந்தல், கோதை என்பனவும் இவ்வாறே: குஞ்சி,குடுமி,சிகை,பங்கி என்பன - ஆண்மயிர்ப் பெயராம்; குழல், கேசம், பித்தை முதலியன-மயிர்ப்பொதுவாக வழங்கும். மாவழையென்னும் மாமரத்தின்பெயர், அதன் இளங்காய்க்கு இங்கே முதலாகுபெயர். இது, கண்ணுக்கு வடிவத்தாலுவமை; "வடுப்பிளவனைய கண்ணாள்" என்றார் சிந்தாமணியாரும். கண்ணுக்கு வாள் உவமை - கூர்மைக்கும்,ஆடவரை(க்காம) நோய்விளைத்து வருத்துதற்குமென்க. நெடுங்கண் - காதளவும்நீண்ட கண். மயங்குதல் - விபரீதஞானம்; திரிபுணர்வு. ஆழ்ந்துள்ளது, ஆழி; இ - கருத்தாப்பொருள் விகுதி: இனி, அழிப்பது ஆழியென்றும், வட்டவடிவமாகவுண்மையின் ஆழியென்றும் பொருளுரைப்பர். இக்கடலின்பெயர், அதன்ஒலிக்குஆகுபெயர். மின்னுவது மின் எனக்காரணக்குறி; கருத்தாப்பொருள்விகுதி புணர்ந்து கெட்ட பெயர். இம்மின்னலின் பெயர், இலக்கணையாய் இடியின்ஓசையை உணர்த்திற்று. ஆழிவார்மின் - உம்மைத்தொகை. மின் குரல் - உவமைத்தொகை. ஆலித்து -வெறுப்புற்று என்றுமாம். கள்ளுண்ட மயக்கத்தாலும் இயற்கைப்பேதைமையாலும்

இவ்வனம் அலைத்ததென்ற இரக்கந் தோன்ற, 'ஏழைவாய்ச்சுரும்பினம்' எனப்பட்டது. (௯)

௧௦.—(இ - ள்.) பளிங்கு-படிகக்கற்களை, போழ்ந்து-ஒழுங்குபட அறுத்து, இயற்றிய - செய்த, பலகை - மரப்பலகைகள்போன்ற சிறு துண்டுகளைக் கீழ்ப்பரப்பியுள்ள, வேதிகை - மேடைகளின், விளிம்பு - ஓரங்களிலே, தோய் - பொருந்தியுள்ள, நெடு - பெரிய, கடை - கடைகளின், வீதிவாய் எலாம் - வரிசைகளி லெல்லாம், துளங்கு பூ மாலையும் - (அழகுக்கும் வாசனைக்குமாகத் தொங்கவிடப்பட்டுள்ள) அசைகின்ற பூமாலைகளும், சுரும்பும் - வண்டுகளும், தோன்றலால் - காணப்படுதலால், (அந்நகரம்), வளம் கொள் பூ கற்பக வனமும் போலும் - பலசெல்வவளங்களையுங்கொண்ட அழகிய கற்பகச்சோலையையும் ஒக்கும்; (எ - று.)

தெய்வத்தன்மையுள்ள கற்பகமரங்களில் ஒழுங்காகத்தோன்றின மலர்மாலைகள் தொங்குவன வென்பது மரபு. தேவர்கள்அணியும்பொழுது அவர்கள்மாலையில் வண்டு மொய்க்கா தென்பதேயன்றித் தேவலோகத்துப்பூக்களில் வண்டுமொய்க்கா தென்னும் நியதி இல்லையென உணர்க. பளிங்கு - ஸ்படிகமென்னும் வடசொல் விகாரம். பலகை - பலகம்; வடசொற்றிரிபு. வீதி - வடசொல். பூங்கற்பகம் - பூக்களையுடைய கற்பகமுமாம். கடைகளிற் பலவளங்களும் நிறைந்திருத்தலால், 'வளங்கொள் கற்பகம்' என உவமைகூறப்பட்டது. கற்பகவனமும், உம்மை - உயர்வுசிறப்பு; முன்னும் பின்னு முள்ள பிற உபமானங்களை நோக்கின எச்சப்பொருளதென்றுங் கொள்ளலாம். கற்பகவனத்தைச் சேர்ந்தவர் வேண்டியபொருளை வேண்டியவாறு பெறுவதுபோல இக்கடைவீதியைச் சேர்ந்தவரும் வேண்டியவற்றை வேண்டியபடி அடைவரென்க. இக்கவி - ஏதுவுவமையணி. (௧௦)

௧௧.—(இ - ள்.) காவி - நீலோற்பலமலரின் தன்மை, வாய் - தம்மிடம்பொருந்துதலையுடைய, கரு கணார் - கரியகண்களையுடைய மகளிரது, காமர் பூ சிலம்பு - அழகிய பொலிவினையுடைய சிலம்பென்னுங்காலணிகள், ஆவி வாய் மாளிகை - அகிற்புகை யூட்டப்பெற்ற (அந்நகரத்து) வீடுகளிலே, அதிர - ஒலிக்க, கேள் தொறும் - (அவ்வொலியைக்) கேட்கும்பொழுதெல்லாம், 'தூவி வான் பெடை - சிறகையுடைய சிறந்த தமதுபேடையாகிய அன்னங்களும், துணை - அவற்றின் துணையான இளமையாகிய அன்னப்பேடைகளும், துறந்த கொல் - (தம்மை) விட்டு (மாளிகையினுள்ளே)போயினவோ?' என - என்று, வாவிவாய் இள அனம் - தடாகங்களிலேயுள்ள இளமையான ஆண்அன்னப்பறவைகள், மயங்கும் - மனந்திகைப்படையும்; (எ - று.)—என்பவே - ஈற்றசை.

மகளிர்சிலம்பொலியை அன்னங்கள் தமதுபேடையி னொலியென மயங்கினவாகக் கூறலின், மயக்கவணி; "இன்னகை யவர்சிலம் பேங்க வேங்குவ, கன்னியர் குடைதுறைக் கயல வன்னமே" என்றார் கம்பராமாயணத்தும். காவி - அதன்தன்மைக்கு ஆகுபெயர். வாய் - முதனிலைத்தொழிற்பெயர்; இரண்டனுருபும்பயனுந் தொக்க தொகை. கண்ணுக்குக் காவி-கருநிறத்தாலும், மென்மையாலு முவமம். விருப்பமுணர்த்தும் காமமென்னும்வடமொழி, காமர்என ஈறுதிரிந்து ஆகுபெயராய், விரும்பப்படும்அழகை உணர்த்திற்று; இனி, காமம்ருவு என்பது விகாரப்பட்டது எனினும் அமையும். பொலிவு - விளக்கம். இனி, காமர் பூ - ஒருபொருட்பன்மொழி யென்பாருமுளர். தூவி - அன்னச்சிறகு. பெடை துணை துறந்த கொல் - பேடைகள் துணையாகிய தம்மை விட்டுநீங்கினவோ என்றும், பேடைகள் தமக்குத்துணையா யுடனிருக்குந்தன்மையை விட்டொழிந்தனவோ என்று முரைக்கலாம். இனி, துணையை இளவனமென்பதனோடு கூட்டுதலு மொன்று. துறந்த -

முற்று. கொல் - இடைச்சொல்; வினுப்பொருளது. முன்னே 'பெடை' எனவந்ததனால், பின்னே 'இளவனம்' ஆணையிற்று. (௧௧)

௧௨.—(இ - ள்.) விலம் - நீர்நிலைகளிலுண்டாகிற, தகை - அழகை யுடைய, பூ துணர் - பூங்கொத்துக்கள், விரிந்த - ஆடப்பட்டுமலர்ந்த, கோதையர் - கூந்தலையுடைய மகளிரது, கலம் தகை சிலம்பு அடி - சிறப்பான அழகையுடைய சிலம்பென்னுமாபரணத்தையணிந்த பாதங்களில், நவில-பொருந்தும்படி, ஊட்டிய - ஊட்டப்பட்ட, அலத்தகம் குழம்பு - செம்பஞ்சுக்குழம்பு, தோய்ந்து - கீழே பொருந்திப் படிதலால், அரச வீதிகள் - (அந்நகரத்து) இராஜவீதிகள், புலத்துஇடை தாமரை பூத்த போலும் - கழனிகளினிடங்கள் செந்தாமரைமலர்கள்மலரப்பெற்றவற்றையொக்கும்.

ஏதுவுவமையணி. விலம் - பிலமென்னும் வடமொழித் திரிபு; உள்ளாழமுள்ள இட மென்றபொருள். தகுந்துள்ளது - தகை; தகு - பகுதி, ஐ - கருத்தாப்பொருள்விகுதி. துணர்என்பதே பூங்கொத்தின் பெயராதலால், பூ- இனமில்லாத இயற்கையடைமொழி. விரிந்த கோதை - பெயரெச்சம் இடப்பெயர்கொண்டது. கோதை - மாலையுமாம். தகை - பெருமையுமாம். அலத்தகம் = அலக்தகம்; வடசொல். காரணப்பொருளதாகிய தோயவென்னும் செயவெனெச்சம், தோய்ந்து எனத்திரிந்தது;"வானின் றுலகம் வழங்கி வருதலால்" என்பதில் நின்று என்பதுபோல: [நன் - வினை - உ௭]. அரசர் வீதி - அரசவீதி; உயர்திணையீறு, விகாரம்: [நன் - உயிர் - ௯]. அரசர் - ராஜரென்னும்வடசொற்றிரிபு. பூத்த - பெயர்; பூத்ததுஎன்பதன் விகாரமாக வுங் கொள்ளலாம். (௧௨)

௧௩.—(இ - ள்.) கண்ணில் ஆம் - (பெண்களது)கண்கள்போலப் பொருந்திய, கடி மலர் குவளை கற்றையும் - வாசனையையுடைய கருங்குவளை மலர்களின் தொகுதியாலாகிய மாலைகளும், வெள் நிலா திரள் என - வெண்மையான சந்திரகாந்தியின் கூட்டம்போல, விளங்கும் - பிரகாசிக்கிற, ஆரமும் - முத்துமாலைகளும், வண்ணம் வால் மல்லிகை - அழகிய வெண்ணிறத்தையுடைய மல்லிகைமலர்கள், வளாய - கலந்த, மாலையும் - மாலைகளும், அண்ணல் மா நகர் கவைக்கு - பெருமையையுடைய சிறந்த அந்தப்பட்டணத்தின் குறுக்குவழிகளிலே, அரிய அல்ல - அருமையையுடையனவல்ல; (எ - று.)

எளியனவா யெங்குங்கிடப்பன வென்று கருத்து. இவை, அந்நகரத்து மைந்தராலும், மகளிராலும், பழையவையென்று வெறுத்தெறியப்பட்டவை. ஊடியமகளிராற் கழற்றி வீசப்பட்டவை யென்றுங் கொள்ளலாம். நகர்வளச்சிறப்பால், இவற்றை யெவரும் விரும்பியெடுப்பாரில்லை யென்க. இங்ஙனஞ் செல்வமிகுதியைச் சொல்லுதலால், வீறுகோளணி. கண்ணில், இல் - ஐந்தனுருபு, ஒப்புப்பொருள். இனி, கள் நிலாம் எனப்பிரித்து, தேன் பொருந்திய என்றுமாம். கடி - பலபொருள் குறிக்கு முரிச்சொல்; [நன் - உரி - ௧௬]. வண்ணம் வான் மல்லிகை எனப்பிரித்து, நிறமமைந்த சிறந்த மல்லிகை யென்றுமாம். வண்ணம் - வர்ணம் என்னும் வடமொழித் திரிபு. வளாய என்பதில், வளாவு என்னும் பகுதி ஈறுதொக்கது. அண்ணல் - பெருமையிற் சிறந்த அரசனது, மாநகர மென்றுங் கொள்ளலாம். கவை - பலகிளைகளாய்ப் பிரிந்துபோகும் வழி. கவைக்கு - நான்கனுருபு கோடற்பொருளாகாமல் இடப்பொருளாய் நிற்கையால், உருபுமயக்கம்; "இந்நகர்க்கே வாழ்கின்றோம்" என்பதிற்போல: [நன் - பெயர் - ௬0]. (௧௩)

௧௪.—(இ - ள்.) தேம் பழுத்து - வாசனை மிகுந்து, இனிய - (தேக சவுக்கியத்திற்கு)இனியனவாயுள்ள, நீர் மூன்றும்-மூன்றுவகைநீர்களும், தீம்- இனிய, பலா - பலாமரங்களின், மேம் - மேன்மையான, பழுத்து அளிந்தன-

கனிந்துமுதிர்ந்தனவான; சுளையும் - சுளைகளும், தேரியும் - தேனும், மா பழம் கனிகளும் - கனிந்துமுதிர்ந்த மாம்பழங்களும், மது தண்டு ஈட்டமும்- தேன்போலினிய சாற்றையுடைய கருப்பங்கழிகளின் கூட்டமும், இல தவளம் மாடம் - (சுண்ணம்பூசப்பட்டு) வெண்ணிறமான (அந்தகாரத்துச்) சிலமாளிகைகளில், பழுத்து உள - மிகுந்துள்ளன; (எ - று.)

இனியநீர்மூன்று என்றது- திரிபலையெனப்படுகிற கடுக்காய், நெல்லிக்காய், தான்றிக்காய் என்பவற்றைத் தனித்தனி ஊறவைத்துள்ள ஆரோக்கியகரமான நீர்களை; சிந்தாமணியில் "வெப்பின்றுப் பழச்சுளைத், தலைத் தணிர்"என்றவிடத்து'சோயறத்தற்குக் கடு, நெல்லி,தான்றி சூழ வளர்ப்பார்கள்' என்ற நச்சினார்க்கினியருரையை அறிக. இனி, நீர்மூன்றும் என்பதற்கு - மூன்றுபகுதியாகவடிவமைந்த இளநீர்களுமென்று முரைக்கலாம்; தேங்காய்க்கு 'முப்புடைக்காய்' என ஒருபெயர் வழங்குதல் காண்க. இனி, நீர்மூன்று - நீர், மோர், பானகம் என்பாருமுளர். தேம்பழுத்து இனிய - வாசனை மிகுந்து சுவைஇனியனவான என்றுமாம். மேன்மையென்னும் பண்புப்பெயர், ஈறுபோய் இடைநிரிந்து 'மேம்' என நின்றது. பழுத்து அளிந்தன, பழக்கனி - ஒருபொருட்பன்மொழிகள். கனிந்தது, கனி. மதுத் தண்டு- ரசத்தையுடைய தண்டம்; எனவே, கரும்பாயிற்று. முக்கனிகளுள் சிறந்த மாவும் பலாவுங் கூறியதில் வாழையையும் அடக்குக. இனி, மதுத்தண்டு - வாழை யென்று உரைப்பாருமுளர். தவளம் - வடசொல். இக்கவி, இன்சுவைப்பண்டங்களின் மிகுதி கூறிற்று. (௧௪)

௧௫.—(இ - ள்.) மைந்தரும் - ஆடவர்களும், மகளிரும் - பெண்களும், அவர் - ஆகிய அந்நகரத்திச்சனங்கள், மாலை காலை என்று- இராவென்றும் பகலென்றும், அந்தரப்படுத்து - பேதப்படுத்தி, அறிவது இன்மையால்- அறிவதில்லாதபடி எப்பொழுதுங் காமவின்பம்நுகர்தலால், சுந்தரம் பொன் துகள் துதைந்த பொன் நகர் - அழகிய பொற்பொடிகள் எங்கும் நிறைந்துள்ள அழகிய அந்நகரமானது, இந்திர உலகம் வந்து இழிந்தது ஒக்கும் - இந்திரனது தேவலோகம் (இந்நிலவுலகத்து) வந்து இறங்கியதைப் போலும்; (எ - று.)

"தாமமே கமழுந் துகிற்சேக்கைமேற், காமமே நுகர்வார் தமகாதலால், யாமமும் பகலும் மறியாமையாற், பூமிமாநகர் பொன்னுலகொத்ததே" என்னுஞ் சிந்தாமணிப்பாட்டிற்கு ஏற்ப இங்ஙனங்கருத்துக்கொள்ளப்பட்டது. இனி, இரவுபகலறியாமைக்குக்காரணம் மிக்கவொளியையுடைய பொற்றுகள் பரவிய தென்றுங் கொள்ளலாம்;நைடதத்திலும்இப்படிப்பட்ட வருணனை வருகின்றது. "விண்ணுவந்து வீழ்ந்ததென, மற்றைநாடு வட்டமாக வைகுமற்ற நாடரோ" என்னுஞ் சிந்தாமணியையும் இங்கே உணர்க. மைந்தர் - மைந்தையுடையவர்; மைந்து - இளமை, வலிமை, அழகு. மகளிர் - இளமையையுடையவர் ; மக - இளமை, உரிச்சொல், பகுதி: ள் - பெண்பால்விகுதி; இர் - பலர்பாலீறு. அந்தரம் - வேறுபாடு; வடசொல். சுந்தரம் - வடசொல. (௧௫)

௧௬.—(இ - ள்.) அ மா நகர் உடை - அந்தப் பெரிய பட்டணத்தைத் தன்னதாகவுடைய, மன்னன் - அரசன், தன் உயர் ஒற்றை வெண்குடை நிழல் - தனது உயர்ந்த ஒன்றான [ஒப்பற்ற] வெண்கொற்றக்குடையின் நிழலிலே வாழ்கிற, உலகிற்கு - உலகத்து உயிர்களுக்கெல்லாம், ஓர் உயிர் பெற்றியான்- ஒரு உயிரையொத்த தன்மையையுடையவனாகிய, பயாபதி என்னும் பேர் உடை - பிரஜாபதியென்னும் பெயரையுடைய, வெற்றி வேல் மணி முடி வேந்தர் வேந்தன் - ஜயத்தைத்தருகிற வேலாயுதத்தையும் இரத்தினங்களிழைத்தகிரீடத்தையு முடைய அரசர்களுக்கரசன்.

மற்று - அசை. அம்மாநகர் - அமாநகா எனத் தொகுத்தல். தனக்குடை என்க. ஒன்று என்னும் மென்றொடர்க்குற்றியலுகரம், வன்றொடராய் ஐகாரச்சாரியைபெற்று 'ஒற்றை' எனநின்றது; [நன் - உயிர் - கஎ, கரு.] வெண்குடை என்பதில், வெண்மை - இயைபின்மைமாத்திரைநீக்கிய விசேடண மென்பர் நச்சினார்க்கினியர். வெண்குடை என்றது - புகழோடுகூடிய ஆளுகையை. கீர்த்தியை வெண்ணிறமுடைய தென்றல், கவிமரபு. உலகு என்னும் பலபொருளொருசொல் சீவான்மாக்களையுணர்த்துதலை "உலக முவப்ப வலனேர்பு திரிதரு" என்னுந் திருமுருகாற்றுப்படையினுங் காண்க. இச்சொல் இடத்தையுணர்த்தும்பொழுதிற்போல உயிர்களையுணர்த்தும் பொழுதும் ஆகுபெயரன் றென அறிக; வடநூலார்கொள்கையு மிதுவே. உலகிற்கு ஒருயிர்ப்பெற்றியான்-எல்லாமன்னுயிர்களையுந் தன்னுயிர்போலக்கருதிக்காத்தருளுபவன்,எல்லாவுயிர்களுடையஅன்புமுழுவதுக்கும்விஷயமானவன். பயாபதி - வடசொற்றிரிபு. பிரஜாபதியென்பதற்கு - ஜனங்களுக்குத்தலைவனென்பது பொருள். பேர்-பெயரென்பதன்மரூஉ. வேந்தர் வேந்தன்- இராசாதிராசன்; சக்கரவர்த்தி. நகருடைமன்னன் - நகரினுடைய மன்னவன் என்றுமாம்; உடை - ஆறாம்வேற்றுமைச்சொல்லுருபு விகாரம்.(௧௬)

௧எ.—(இ - ள்.) அம் தானை மன்னன் - அழகிய சேனையையுடைய அவ்வரசன், எண்ணினர் எண் அகப்படாத செய்கையான் - ஆலோசிப்பவர்களது ஆலோசனைக்குப் புலப்படாத தனது காரியங்களை யுடையவன்; அண்ணியர் அகன்றவர் திறத்தும் ஆணையான் - தன்னையடுத்துள்ளவரிடத்திலும் விலகியுள்ளவரிடத்திலும் (சமமாகப் பக்ஷபாதமின்றி அவரவர்குற்றத்திற்கேற்ப நடுவுநிலைமையோடு செலுத்துகிற) ஆஜ்ஞையையுடையவன்; நண்ணுநர் பகைவர் என்ற இவர்க்கு - விரும்புதலுடைய நண்பரும் பகைவரும் என்ற இவர்களுக்கு, நாளினும்- எல்லாநாட்களிலும், தண்ணியன் வெய்யன்- (முறையே) குளிர்ந்த அன்பையுடையவன் கொடுந்தன்மையுடையவன்.

'அண்ணிய ரகன்றவர்' என்ற பாடத்துக்கு இவ்வுரை.

"ஆற்றுந் துணையு மறிவினை யுள்ளடக்கி, யூக்க முரையா ருணர்வுடையார் - ஊக்க,முறுப்பினா லாராயு மொண்மை யுடையார், குறிப்பின்கீழ்ப் பட்ட துலகு" என நாலடியாரிற்கூறியபடி காரியமுடியுமளவும் தமதுகருத்தைத் தமதுகுறிப்பாற்பிறரறியவொண்ணாதபடி அடக்கிவைத்துப் பிறர்கருத்தைமாத்திரம் அவர்களுறுப்பின்குறிப்பா லறிந்துகொள்வது உலகமுழுவதையும்அடக்கியாளவல்லவரது திற மாதலின், 'எண்ணினரெண்ணகப் படாதசெய்கையான்' என்றார். எண்- முதனிலைத்தொழிற்பெயர். செய்கை- கை விகுதி பெற்ற தொழிற்பெயர். அண்ணியர் - அண் என்னும் பகுதியடியாப் பிறந்த இறந்தகால வினையாலணையும்பெயர். திறத்தும் என்பதை அண்ணியரென்பதோடுங் கூட்டுக. ஆஜ்ஞா என்னும் வடமொழி, பிராகிருத பாஷைமூலமாய் ஆணையெனத் தமிழில் திரிந்துவந்தது. 'அண்ணியன்' என்ற பாடத்திற்கு, அகன்றவர்திறத்தும் அண்ணியன் - தன்னைநீங்கிநெடுந்தூரத்துள்ளவரிடத்தும் தான் மனத்தால் நெருங்கியுள்ளவன், ஆணையான் - செங்கோலையுடையவன் என்று உரைக்க. நண்ணுநர் என்னும் பெயர்ப்பகுபதத்தில், உ - சாரியை: ந் பெயரிடைநிலை; [நன்-பத - ௧௭]. நாளினும், உம்மை- தொறப்பொருளது. பின்னிரண்டடியில், நண்ணுநர்க்குத்தண்ணியன் பகைவர்க்குவெய்யன் எனப் பெயர்களும் வினைப்பயனிலைகளுமாய் வரிசைப்படஇயைந்துபொருள்படுதலால்,முறைநிரனிறைப்பொருள்கோள்;[நன்-பொது-௬௬]. இது ஒரு அணியாகவும் வழங்கும்; வடநூலார் கிரமாலங்காரமென்பர். தண்ணியன், தண்-பண்படி, பகுதி; இ - சாரியை. வெய்யன்- வெம்மை ஈறுபோய் இடைநின்றமெய்திரிந்த வெய்-பகுதி. இவனுக்குப் பகைவரெவ

றும் எங்குமின்மையின் போர்த்தொழிலில்லாமைபற்றி இவனதுசேனை அழகுக்கே யமைந்ததென்னுங் கருத்துத்தோன்ற, 'அந்தானை மன்னன்' என்றார். நந்து ஆனை எனப் பிரித்து - வளர்கிற யானைச்சேனையையுடைய வெனினுமாம். (௧எ)

௧அ.—(இ - ள்.) நாமம் - அச்சத்தைத்தருகின்ற, வேல் - வேலாயுதத்தையுடைய, நர பதி - மனிதர்களுக்குத் தலைவனான அவ்வரசன், உலகம் - நிலவுலகத்தை, காத்த - அரசாண்ட, நாள் - காலத்தில், காமவேள் - மன்மதகுமாரனது, கவர் கணை - (எல்லாவுயிர்களையுந்) தன்வசப்படுத்துகிற புஷ்பபாணங்கள், கலந்தது அல்லது - (எங்கும்) பொருந்தியதேயல்லாமல், தாமம் வேல் வயவர்தம் - வெற்றிமாலையைச்சூடிய வேலாயுதத்தையுடைய வலிமையையுடைய வீரர்களது, தழல் அம் கொல் படை - நெருப்புப்போன்ற அழகிய கொல்லுந்தன்மையுள்ள ஆயுதங்கள், நாமம் நீர் வரைப்பு அகம் - பிரசித்தமான கடல்நீரை எல்லையாகவுடைய பூமியினிடத்தை, நலிவது இல்லை - வருத்துவதில்லை; (எ - று.)

இதனால், பகைபச்சமின்றி உயிர்கள் போகமேநுகரும்படியான அரசாட்சிச்சிறப்புக் கூறப்பட்டது. நரபதி - திரியாதுநின்ற வடமொழி. காத்தற்றொழிலன்றி அழித்தற்றொழில்பூண்டமுக்கட்கடவுட்கும் கூற்றுவற்குஞ் சூலவேல் படையாதலானும், முருகற்கு வேல் படையாதலானும், சான்றோர் வேற்படையையே சிறப்பப் பெரும்பான்மைகூறி,வாள் வில் முதலிய மற்றையவற்றை'மொழிந்தபொருளோடொன்றஅவ்வயின்மொழியாததனையுமுட்டின்றுமுடித்தல்' என்னும் உத்தியாற் பெறவைப்பர். குமாரவேளை விலக்குதற்கு 'காமவேள்' என்றார். காமவேள்-காமனாகிய வேள் என இருபெயரொட்டுப்பண்புத்தொகை. காமனென்னும் வடசொல்லுக்கு - (ஆண்பாற்கும் பெண்பாற்கும் ஒன்றோடொன்று) விருப்பத்தை விளைப்பவனென்றும், (யாவராலும்) விரும்பப்படும் அழகுடையவனென்றும் பொருள்.வேள் என்னுந் தமிழ்ச்சொல்லும் இவ்விருபொருளுடையதாம்; வேட்டல் - விரும்புதல். வேள் - ஆண்பாற்சிறப்புப்பெயர்; [நன் - பெயர் - ௧௧]. இது உயர்திணைப்பெயராதலின், ஈறு இயல்பாயிற்று; [நன் - உயிர் - ௯]. கவர்கணை-வினைத்தொகை. பிரமன்முதல் எறும்பீறாகவுள்ள பிராணிவருக்கமனைத்தையுங் காமன் தன்வசப்படுத்துதலால், அவனதுகணை 'கவர்கணை' எனப்பட்டது; கவர்தல் - மனத்தையிழுத்தல். அல்லது எதிர்மறைக் குறிப்புவினையெச்சம்; அல் - பகுதி, அ - சாரியை, து - விகுதி. தாமம் - வடசொல்; ஒளியுமாம். "வயவலியாகும்" என்ற தொல்காப்பியத்தால், வயவென்பது வலிமையுணர்த்தும்உரிச்சொல்லாம். வயம் என எடுத்தால், வெற்றியென்று பொருள். படை - படுத்தற்குக்கருவியானது; படுத்தல் - அழித்தல், ஐ - கருவிப்பொருள்விகுதி. ஆயுதத்திற்கு அழகு - குறித்தஇலக்கில் தவறாதுபட்டு அழித்தல். கொல்படை - கொன்ற கொல்கிற கொல்லும் என மூக்காலமுங்கருதும் வினைத்தொகை. நீர் - கடலுக்கு ஆகுபெயர். தழல் - நெருப்பிலவைத்துவடிக்கப்பட்ட, படையென்றுமாம். (௧அ)

௧௯.—(இ - ள்.) ஆறில் ஒன்று - (தந்தமக்குவரும்பொருளில்) ஆறிலொருபாகத்தை, அறம் என-(இதனைஅரசனுக்குக்கொடுப்பது) தருமமெனக்கருதி, அருளின் அல்லது - (தன்காட்டுச்சனங்களை மிக்கஅன்புடன் கொணர்ந்துவந்து)கொடுத்தாலல்லாமல்,(இவ்வரசன்),ஒன்று ஊறுசெய்து-(குடிகளுக்குச்) சிறிதேனுந் துன்பஞ்செய்து, உலகினின் -தன்உலகத்திலே, உவப்பது - (வரிப்பொருளை) விரும்பிப்பெறுவது, இல்லை - இல்லையாம்; மாறின்றவரையும் - (தன்னொடுமனம்)வேறுபட்டுப் பகைமைகொண்டவர்களையும்,வணக்கின் அல்லது - தன்னைவணங்கச்செய்தாற் செய்வதேயல்லாமல்,

எவரையும் - எத்தன்மையவரையும், சீறி நின்று செகுப்பது - (அவ்வரசன்) கோபித்துநின்று கொல்வது, இல்லை—; (எ - று.)

இல்லையென்பதன்மேல் நின்ற ஏகாரமிரண்டும் - தேற்றம். "தென்புலத்தார் தெய்வம் விருந்தொக்கல் தானென்றாங், கைம்புலத்தா றோம்பல் தலை" என்னுந் திருக்குறளிற் கூறியபடி பிதிருக்கள், தேவர்கள், விருந்தினிகள், சுற்றத்தார், தான் என்றுசொல்லப்பட்ட ஐவர்க்குஞ் செய்யத்தக்க கடமைகளைச் செய்வதற்கு ஐந்துபாகம் வேண்டுதலால், குடிகளாலுவருவாய்ப்பொருளுள் ஆறிலொருபாகமே அரசனுக்கு இறைப்பொருளாயிற்று. "கொடையளி செங்கோல் குடியோம்பல் நான்கும்" என்ற திருக்குறளில் 'குடியோம்பல்' என்றவிடத்துப் பரிமேலழகர் கூறிய 'அஃதாவது - ஆறில்ஒன்றாயபொருள் தன்னையும்வறுமைநீங்கியவழிக்கொள்ளல்வேண்டின் அவ்வாறுகோடலும், இழத்தல்வேண்டின் இழத்தலுமாம்' என்ற வாக்கியத்தில் இச்செய்யுளின் முன்னிரண்டடிகளின் கருத்து விளங்குதல் காண்க. "வீறின்மையின் விலங்காமென மதவேழமு மெறியான், ஏறுண்டவர் நிகராயினும் பிறர்மிச்சிலென் றெறியான், மாறன்மையின் மறம்வாடுமென் றினியாரையு மெறியா, னூறன்மையின் முனியாரையு மெறியானயி லுழவன்" என்னுஞ் சிந்தாமணிச்செய்யுளின் பொருளுக்கு ஏற்ப, 'எவரையுஞ்செகுப்பதில்லை' என்றார். எல்லாவறங்களினுஞ் சிறப்புடையது கொல்லாமையொழிய வேறில்லை யாதலாலும், அருகசமயத்தவர்க்குக் கொல்லாமையே முக்கியமான விரதமாதலாலும், இங்ஙனங் கூறப்பட்டது. "தன்னுயிர் நீப்பினுஞ் செய்யற்க தான்பிறி, தின்னுயிர் நீக்கும் வினை" என்பராதலால், மாறிநின்றவரையுஞ் செகுப்பதில்லை. 'மாறிநின்றவரையும்' என்றஉம்மை - இழிவுசிறப்பு; அது - அவர் கொல்லத்தக்ககொடுமையுடையா ரென்பதை விளக்கும். ஆறு, ஒன்றுஎன்னும் எண்ணுப்பெயர்கள்-அவ்வளவைக்கொண்ட பொருளை உணர்த்தலால், எண்ணலளவையாகுபெயர்; இவற்றை எண்ணுக்கும் எண்ணுடைப்பொருளுக்கும் பொதுப்பெய ரென்பாரு முளர். 'ஒன்றும்'என்னும் இழிவுசிறப்பும்மை,விகாரத்தால் தொக்கது. இனி,ஒன்று ஊறு என்பதற்கு-வினைத்தொகையாய்ப், தகுந்த தண்டனையை யென்றும் உரைக்கலாம். உறுவது, ஊறு;கருத்தாப்பொருள்விகுதி புணர்ந்துகெட்டு முதல்நீண்ட பெயர்: உறுதல் - (இடையிலே) சேர்தல். வணக்குதல் - சாமதானபேதமென்னும் முதல்மூன்றுஉபாயங்களில் ஏற்றதொன்றினாலாவது அச்சமுறுத்தியாவது கீழ்ப்படியச்செய்தல். (௧௯)

௨௦.—(இ - ள்.) அடி நிழல் - (அவ்வரசனது) பாதங்களின் சாயை, அரசரை அளிக்கும் - (பிறதேசத்து) அரசர்பலரைக் காப்பாற்றும்; ஆய் கதிர் முடி நிழல் - ஆராய்ந்துசெய்யப்பட்ட ஒளியையுடைய கிரீடத்தினது சாயை, முனிவரர் சரணம் மூழ்குமே- சிறந்த இருடிகளது திருவடிகளிலே படியும்; வடி - நெருப்பில்வைத்துக் காய்ச்சியடித்து அமைக்கப்பட்ட, நிழல் வனை -ஒளியைச் செய்கிற, கதிர் - கூர்மையையுடைய, எஃகின் - வேலாயுதத்தையுடைய, மன்னவன் - அவ்வரசனது, குடை நிழல் - ஒற்றை வெண்கொற்றக்குடையின் சாயையானது, உலகு எலாம் குளிர நின்றது - உலகமுழுவதும் உலகத்திலுள்ள உயிர்களெல்லாமும் குளிர்ச்சியடையும்படி நிலைபெற்றது; (எ - று.)

'உலகு' என்பதற்கு-இரட்டுறமொழிதலால் இங்ஙனம் பொருள்கொள்ளப்பட்டது; "ஆதி, பகவன் முதற்றே யுலகு" என்றதிருக்குறளிலும் இவ்வாறே கொள்ளலாம். இவனதுபாதங்களைச் சரணமடைந்த அரசர்கள் இவனால் எல்லாத்துன்பத்தினின்றும் பாதுகாக்கப்படுவ ரென்பது, 'அடிநிழல் அரசரையளிக்கும்' என்பதன்கருத்து. இரண்டாவது வாக்கியத்தின் கரு

த்து - இவன் முற்றத்துறந்த முனிச்சிரேஷ்டர்களிடம் மிக்க பக்திப்பேரன்புடையா னென்பது. முனிவரர் - வடசொற்றொடர். முனிஎன்னும் வடசொல்லுக்கு - (கடவுளைத்) தியானஞ்செய்பவன், அல்லது (முக்காலத்து) ஞானமுடையவ னென்று பொருள்; இதற்கு - (எல்லாப்பற்றுக்களையும்) முனிந்து [வெறுத்து] விட்டவன் ஆதலால் முனிஎன்று பெயர்ப்பொருள் கூறலாகாது, வடசொல்லாதலின். வரர் - சிறந்தவர். சரணம் - வடசொல். இரண்டாம் அடி - தனது முடி முனிவர்களடியிற்படும்படி சாஷ்டாங்கமாகவிழுந்து அவர்களை நமஸ்கரிப்பா னென்றவாறு. குடை நிழல் - ஆளுகையமைதி. குளிர்தல் - யாதொருதுன்பமும் இல்லாதாதல். (உ0)

உக.—(இ - ள்.) மன்னிய - (தனதுஉடம்பிலே) நிலைபெற்ற, பகை குழாம் ஆறும் - உட்பகைவருக்கம் ஆறும், வையகம் துன்னிய - பூமியினிடத்திலே பொருந்திய, அரு பகை தொகையும் - (அழித்தற்கு) அருமையான பகைவர்களின் கூட்டமும், இன்மையால் - இல்லாமையால், (அவன் முறையே), தன்னையும் தரையையும் காக்கும் - தனது உயிரையும் பூலோகத்துயிர்களையுங் காப்பான், என்ப - என்று (நூலோர்) கூறுவர்: (என்றால்), மன்னவன் திறத்து - அவ்வரசனது சிறந்தகுணங்களின் விஷயத்தில், இனி - இன்னமும், மருள வேண்டுமோ - (தெளியாமல் ஐயமுற்று) மயங்க வேண்டுவதுண்டோ? [இல்லையென்றபடி]; (எ - று.) — ஈற்று ஓகாரம் - எதிர்மறை.

உட்பகை ஆறு - காமம், கோபம், லோபம், மோகம், மதம், மாற்சரியம் என்பன. வையகம் - (எல்லாப்பொருள்களையும்) வைக்குமிடமெனக் காரணப்பெயர். வரும் எனப் பதம்பிரித்து - மேன்மேல் வளர்கிற வென்றுங் கொள்ளலாம். துன்னிய என்பதைச் செய்யியவென்னும் வாய்பாட்டு வினையெச்சமாகக்கொண்டு, நெருங்கவரும் என்றுமாம். பகைமையென்னும் பண்புப்பெயரின் விகாரமாகிய பகைஎன்பது, ஆகுபெயராய்ப் பகைவரையுணர்த்தும்; இதனைப் பகு ஐ எனப்பிரித்துத் தொழிற்பெயராகக்கொண்டு மனம் வேறுபடுதலென்றும் உரைக்கலாம். பகைவர் என்றதில், அவர்க்கு இனமாய கள்வர், கொடிய சுற்றத்தார், தீக்குணமுடைய தொழில்செய்வார் முதலாயினாரையும் அடக்குக. பகை என அஃறிணைச்சொல்லாற் கூறியதில், மிக்கமழை, மழையின்மை, எலி, விட்டில், கிளி, அரசண்மை என்றிவற்றால் வரும் அறுவகை ஈதிபாதைகளும் அடங்கும். உட்பகையில்லாமையால் தன்னுயிரை நற்கதிபெறுமாறு பாதுகாப்ப னெனவும், பகைவர்கூட்டமில்லாமையால் நிலத்துயிர்களை வருந்தாதபடி இனிது காத்தருளுவா னென்றும் முறையே சென்று இயைதலால், முறைநிரனிறைப்பொருள்கோள். தொகை - தொகுதி; தொழிற்பெயர்: தொகு - பகுதி, ஐ - விகுதி. தரா என்னும்வடசொல், தரையெனத்திரிந்தது; (எல்லாப்பொருள்களையுந்) தரிக்குமிடமென்றுபொருள்: தரித்தல் - தாங்கல். தம் - அசை. என்பது அம்மன்னவன் எனப்பிரித்து, என்கிறவிஷயத்தில் அவ்வரசனிடத்து என்றும் உரையிடலாம். இனி - எதிர்காலங் குறிப்பதோ ரிடைச்சொல். வேண்டும் - இன்றியமையாமைப் பொருளது. (உக)

உஉ.—(இ - ள்.) மெய் பொருள் விரிக்கும் - உண்மையானபொருள்களை விளக்கிக்கூறுகிற, வீறு சால் - சிறப்புமிக்க, நூலினால் - சாஸ்திரங்களை அறிதலால், பெரியவர் - சிறந்தவரான, மேலவர் - இயற்கையில் மேன்மைக்குணமுடைய மந்திரிகள், நுழைந்த சுற்றம் ஆ - தன்னை நெருங்கியடுத்த உறவினராக, (அம்மந்திரிகளுடனே அவ்வரசன்), ஆலும் சீர் அன்னமொடு அரச அன்னமே போல நின்று - களித்தொலிக்கிற நீரில்வாழ்கிற பல அன்னப்பறவைகளுடனே ராஜஹம்ஸம் கூடிவிளங்கிநிற்பதுபோல நின்று,

உலகினை பொதுமை நீக்கினான் - இவ்வுலகத்தைப் (பலஅரசர்களுக்கும்)பொதுவாயிருக்குந்தன்மையை ஒழித்திட்டான்; (எ - று.)

தானொருவனே தனியே நிலமுழுவதையும் அரசாண்டானென்பதாம். மேலவர் - உயர்குடிப்பிறந்தவரென்றலுமாம்;"பிறப்பின் மேன்மைப் பெரியவரரிய நூலுங், கற்றவர்" என்பர் மந்திரிகளைக் கம்பராமாயணத்தில். 'மேலவாம்' என்றபாடத்துக்கு - மேன்மையையுடையனவான என்று உரைத்து, மெய்ப்பொருளுக்கு அடைமொழியாக்குக. சால் - உரிச்சொல். 'நாற்பெரியவர்' எனப்பிரித்து உரைத்தலிற் கருத்துச்சிறவாமை காண்க. நுழைந்த சுற்றம் - இரகசியமானகாரியங்களுக்கும் ஆலோசனைக்காகக் கூடவிருக்கும் பரிவாரம். சுற்றம் - சுற்றி நிற்பவரெனக் காரணக்குறி; அம் - வினைமுதற்பொருள்விகுதி. ஆ - ஆகவென்பதன் தொகுத்தல் விகாரம். நீர் - தன்மையுடைய என்றுமாம் மூக்குங் காலுஞ் சிவந்து மற்றை உடம்புமுழுவதும் வெளுத்திருப்பது இராசவன்னமெனப்படும். இவர்களுக்கு அன்னத்தை உவமைகூறினது - அன்னப்பறவை பாலையும் நீரையும் வேறுபிரித்துப் பாலைமாத்திரம் உட்கொண்டு நீரை நீக்கிவிடுதல்போல இவர் சாரத்தையும் அசாரத்தையும் வேறுபிரித்துச் சாரத்தையே உட்கொண்டு அசாரத்தை விலக்கிவிடுதலால். அன்னங்கள் - மந்திரிமார்க்கும், அரசவன்னம் - அரசனுக்கும் உவமை. (௨௨)

௨௩.—(இ - ள்.) கொதி நுனை பகழியான் - காய்ச்சிவடிக்கப்பட்ட கூர்நுனியையுடைய அம்புகளையுடைய அவ்வரசன், குறிப்பின் அல்லது - (தனது முகம் கண் என்னுஞ் சிறந்த உறுப்புக்களின்)குறிப்பினாலல்லாமல், ஒன்று இது நமக்கு இசைக்க என - இந்த ஒருகாரியத்தை நமக்குச்செய்கவென்று வெளிப்படையாக வாயாற்கூறி ஏவுதற்கு, எண்ணும் - கருதுகிற, எண் - கருத்து, இலான் - இல்லாதவன்; அவன் பகுதிகள் அமைதி வண்ணம் - அவனது மந்திரிமார்முதலிய அங்கங்களின் நடத்தைவிதம், நொதுமலர் வெருவுறு நுவற்சி ஆன பின்னது - அயலவர் அஞ்சவேண்டாத (அரசனது) கட்டளை (குறிப்பினாலாவது வெளிப்படையினாலாவது) நிகழ்ந்த பின்பே நிகழ்வது; (எ - று.)

இது - 'எண்ணிலான்' என்றபாடத்துக்கு உரை. அரசன் எல்லாவிஷயங்களையுந் தனது குறிப்பினாலே தெரிவிப்பவன்; அவன்பரிவாரங்களும் அங்ஙனங் குறிப்பினால் அரசன்கட்டளையை அறிந்தே தொழில்செய்யும் என்பது கருத்து: அவன் எந்தக்காரியத்திலும்அலட்சியமாயிருக்கமாட்டானென்றும்,அமைச்சர், நண்பர், படைத்தலைவர், தூதர், ஒற்றர் முதலியோர் அரசன்குறிப்பின்படியன்றித் தாமாக ஒன்றையுந் துணிந்து செய்யாரென்றுந் தாற்பரியம். கொதித்தல் - பகைவரைக் கோபித்தலுமாம். இசைக்கென - வியங்கோள் ஈறுதொகுத்தல். நுவற்சி - தொழிற்பெயர்; சொல்லுதலென்று பொருள்: நுவல் - பகுதி, சி - விகுதி. பிரசாபதியென்பது பயாபதியென்றும் பிரயாணமென்பது பயணமென்றுந் திரிதல்போல, பிரகிருதியென்னும் வடமொழி பகுதியெனத் திரிந்தது; இத்திரிபை இலக்கணத்திலுங் காணலாம். அமைதி - தொழிற்பெயர்; அமைதல்: தி- விகுதி. நொதுமலர் - பகைவரும் நண்பரும் அல்லாத அயலார். அவனதுகட்டளையைக் கேட்டுப் பகைவர் அஞ்சுவரேயொழியப் பிறர் அஞ்சவேண்டுவதில்லையென்னுங்கருத்தால், 'நொதுமலர் வெருவுறு நுவற்சி' என்றார். அயலவரே அஞ்சாரெனவே, நண்பர் அஞ்சாரென்பது கூறவேண்டாதாயிற்று. நமக்கு- தனித்தன்மைப்பன்மை; உயர்வுப்பன்மையுமாம். பின்னது - இடைச்சொல்லடியாப்பிறந்த ஒன்றன்பாற் குறிப்புமுற்று. 'எண்ணிலா' என்றபாடத்துக்கு உரைவருமாறு:— அரசன் குறிப்பினால் தெரிவிப்பதேயல்லாமல் நமக்கு ஒரு கட்டளையை வெ

வியப்படையாற் கூறவேண்டுமென்ற எண்ணமில்லாத அயலார் அஞ்சுதற்குக் காரணமில்லாத கட்டளை பிறந்தபின்பே அவன்பரிவாரங்கள்தொழில் செய்யும்விதம் நிகழ்வது என்பதாம். (உங)

உச.—(இ - ள்.) அவன் - மேற்கூறிய அத்தப் பிரசாபதியென்னும்அரசனது, தேவியர் - சிறந்தமனைவிமார், மகரம் வார் குழை - (வாய்திறந்த) சுறாமீன்வடிவமாக அமைந்த தொங்குகின்ற குழையென்னுங் காதணிகளையுடைய, கொற்றவர் - வெற்றியையுடைய சிறந்தஅரசரது, குலங்கள் - வமிசங்கள், விளங்க - (புகழால்) ஒளிபெறும்படி, தோன்றினார் -(அக்குலங்களிற்) பிறந்தவர்; இ மருங்குல் இற்றது என்று -இந்தஇடையானது இனி ஒடிந்ததென்று எண்ணியுஞ் சொல்லியும், இரங்கும் - மனமிரங்கத்தக்க, சீர்மையார் - (மேலுங்கீழுமுள்ள பாரமான கொங்கை, கூந்தல், அல்குல்,தொடை என்னுமுறுப்புக்களின்) தன்மையுடையவர் ; கற்றவர் ஓது பல் கலையின் - படித்தறிந்தவர்களாற் சொல்லப்பட்ட பலவகை நூல்களினால், முற்றியார் - முழுவதும் நிறைந்தவர்; (எ - று.)

மற்று - அசை. மகரக்குழை - மகரகுண்டலம். 'குலங்களைவிளங்க' என்பதில், ஐ - சாரியை; "யாவ ராயினு நால்வரைப் பின்னிடில், தேவ ரென்பது தேறுமில் வையகம்." என்னுஞ் சிந்தாமணியில் 'நால்வரை' என்பதிற்போல. இனி, விளங்கஎன்பதைப் பிறவினைப்பொருளில்வந்த தன்வினையெனக்கொண்டு, அரசர்குலங்களை விளக்கமடையச் செய்யுமாறு தோன்றினவ ரென்று முடைக்கலாம். இற்றது - இறுமெனஎதிர்காலமாச் சொல்லவேண்டுமிடத்துத் தெளிவும்விரைவுபற்றி இறந்தகாலம்வந்த காலவழுவமைதி; [நன் - பொது-கூக.] இம்மருங்குல் என்பதில், இ என்னும் அண்மைச்சுட்டு, இடையினதுசிறுமையை விளக்கும். இரங்கும் சீர்மை - பெயரெச்சம் காரியப்பொருளது; 'நோய்தீருமருந்து" என்பதிற்போல. "பெருந் தடங்கட் பிறைநுத லார்க்கெலாம், பொருந்து செல்வமுங் கல்வியும் பூத்தலால், வருந்தி வந்தவர்க் கீதலும் வைகலும், விருந்து மன்றி விளைவன யாவையே" எனக் கம்பராமாயணத்துக் கூறியதனாலும் பெண்களுக்குக் கல்வியுடைமை சிறப்பாதலறிக. முற்றியார் - இறந்தகாலவினையாலணையும்பெயர்: இன் இடைநிலை ஈறுதொக்கது; இனி, கலையின் முற்றியார் - (ஆலிங்கனம்) முதலிய சிற்றின்பக்கலவிநூல்வகைகளில் தேர்ந்தவ ரென்றும், மேகலாபரணங்களினால் சூழப்பட்டவ ரென்றும் உரைகொள்ளலாம். நற்குணநற்செய்கையுடைய பெண்கள் பிறத்தலாற் குலஞ் சிறப்படையுமாதலின், 'குலங்களைவிளங்கத்தோன்றினார்' என்றது. 'இரங்க வீங்கிய, முற்றாரு முலையினார்' என இது பழையபாடம். (உச)

உரு.—(இ - ள்.) (அவர்கள்), பஞ்சு அனுங்கு அடியினார் - செம்பஞ்சுக்குழம்பூட்டுதலாலும் வருந்துகிற [மிகமென்மையான] பாதங்களையுடையவர்; பவளம் வாயினார் - பவழம்போற்சிவந்த அதரத்தையுடையவர்; கஞ்சம் மெல் சுமனசம் கடிந்த தாளினார் - தாமரையாகிய மென்மையான சிறந்தமலரை (தமக்கு ஒப்பாகாதென்று) வெறுத்த பாதங்களையுடையவர்; அம் - அழகிய, குழை தலை - தளிர்களைத் தன்னிடத்தேயுடைய, மதர்வை - செழிப்புள்ள, வஞ்சி கொம்பு - வஞ்சிக்கொடி, தம் அம் சுடர் இணர்க்கு - தமது (உடம்பிலுள்ள) அழகிய ஒளியின்தொகுதிக்கு, ஒசிந்து அனைய - தோற்றுப்போன்ற,நுண்மையார் - மென்மையானதன்மையையுடையவர்.

மேற் பாயிரத்தும் "பஞ்சிக் கனுக்குஞ் சிலம்பாரடி" என்றார். இனி, பஞ்சு அனுங்கு அடி - பஞ்சின்மேற்படுதலாலும் வருந்துகிற பாதமென்னலாம். பஞ்சு என்பதில், சிறப்புப்பொருளும்மை தொக்கது. பவளம் - பிரவாளமென்னும் வடமொழித் திரிபு. ஸுமனஸம் - மலர்; வடசொல். 'கஞ்ச

மென் மலரினைக் கடிந்த' எனத் தமிழ்மொழிபுணர்த்துப் பாடத்தைத் திருத்தலாம். கஞ்சம் - நீரிற்பிறப்பது; காரணவிடுகுறி: வடசொல். கஞ்சம் என் எனப்பிரித்து, தாமரையெனப்படுகிற என்றுமாம். முதலடியில் 'பஞ்சனுங்கடியினார்' எனவந்ததனால், இரண்டாமடியில் கூறியதுகூறலாகாதபடி கடிந்தகண்ணினாரென்றாவது கடிந்தகையினாரென்றாவது பாடங்கொள்ளுதல் சிறப்பாம். இணர் - பூங்கொத்து. இங்கே, இரன் என்ற மாத்திரமாய் நின்றது. ஐம்மை - அழகின் தன்மையும் தெய்வவொளியின் தன்மையு மாகலாம். 'பரந்த வல்குலார், செஞ்சுணங் கிளமுலை மருங்கு சார்ந்தினார்' என்பது பழம்பாடம். பின்னிரண்டடிக்கு - வஞ்சிக்கொம்பைவென்றவரென்று கருத்து. (உ௫)

உ௬.—(இ - ள்.) (அவர்கள்), ஏமம் தொத்து அலர்ந்தவர் - இன்பமாகிய பூங்கொத்து மலர்ந்தாற்போன்ற தன்மையுடையவர்; எழில் கொள் கற்பினார் - மேன்மேல்வளர்தலைக் கொண்ட கற்புநிலைமையையுடையவர்; தாமம் தொத்து அலர்ந்து - அழகிய பூங்கொத்துக்கள் மலரப்பெற்று, தாழ்ந்து - (அவிழ்த்துவிட்டால் நிலத்தளவுந்)தொங்கி, இருண்ட - கறுத்த, கூந்தலார் - கூந்தலையுடையவர்; தூமத்து - (அகில்முதலிய வாசனைப்)புகை யூட்டப்பெற்ற, சுடர் ஒளி - விளங்குகின்ற ஒளியையுடைய ஆபரணங்கள், துளும்பு - அசைதற்கிடமான, தோளினார் - தோள்களையுடையவர்; வாமத்தின்-மிகுந்த அழகுடைமையால், மயங்கு - (கண்டவர்)திகைப்படைதற்குக் காரணமான, இமை மதர்த்த - இமைகள் செழிக்கப்பெற்ற, வாள் கணார் - வாளாயுதம்போன்ற கண்களையுடையவர்; (எ - று.)

ஏமத்தொத்தலர்ந்தவர் என்பதற்கு-இன்பமயமாச்சிறந்தவரென்றுகருத்து.ஏமத்து ஒத்து எனப்பிரித்து,இன்பவடிவம்போன்றுவிளங்கியவரென்றுரைக்கலாம். எழில் - எழுச்சி; தொழிற்பெயர்: எழு - பகுதி, இல் - விகுதி. இனி, எழில் - அழகுமாம். கற்பு - பதிவிரதாதர்மம்; அஃதாவது-தன்னைமணஞ்செய்த கணவனைத் தெய்வமென்று உணரும் மேற்கோள். கொழுநனிற்சிறந்ததொருதெய்வம் மகளிர்க்கு இல்லை யெனவும், அவனை இன்னவாறு வழிபடுக எனவும், அந்தணர்முதலியோரிடத்து ஒழுகவேண்டுமொழுக்க மிதுவெனவுந் தாய்தந்தையராலும் தமையன்மார்களாலும் கொழுநனாலும் கற்பிக்கப்படுதல்பற்றி, பாதிவிரத்தியத்திற்குக் கற்பென்பது காரணப்பெய ரென்பர். தாமம் தொத்து அலர்ந்து - மாலைவடிவமான பூங்கொத்துக்கள் மலர்தற்கிடமாய் என்றுமுரைக்கலாம். தூமம், வாமம்- வடசொற்கள். சுடரொளி - ஆபரணத்துக்கு வினைத்தொகைப்புறத்துப்பிறந்த அன்மொழித்தொகைக் காரணப்பெயர். மயங்கி மைம்மதர்த்த என்ற பாடத்துக்கு - அழகினால்நிறைந்து அஞ்சனந்தீட்டப்பட்டுக் களிப்புமிக்க என்று பொருள்கொள்க. வாட்கண் - ஒளியுடைய கண்ணுமாம். 'காமத்தொத்தலர்ந்தவர் கதிர்த்த கற்பினார்'என்பதுஆதியானபாடம்.(உ௬)

உ௭.—(இ - ள்.) அவர் - இத்தகைச்சிறப்புடைய அரசன்மனைவிமார், ஆயிரர் - ஆயிரமென்னுந்தொகையையுடையவர்;மா இருவிசும்பினின்-மிகப்பெரியதேவலோகத்தினின்று, இழிந்த -இறங்கினாற்போன்ற,மாண்பினார்-சிறப்புடையவர்களும், சேய் இரு தாமரை தெய்வம் அன்னர் என்று ஏய் உரை இலாதவர் - செந்நிறமுடைய சிறந்த தாமரைமலரிலே வாழ்கிற இலக்குமியென்னுந்தெய்வமகளை யொத்தவரென்று உவமித்துச்சொல்லும் வார்த்தைக்கு இடமில்லாதவர்களு மாகிய, இருவர் - இரண்டுபெயர், அவர்க்கு அதிகம் தேவியர் ஆயினார் - அவ்வாயிரம்மனைவிமார்களுக்குஞ் சிறந்த பட்டத்து அரசிய ராஞர்கள்; (எ - று.)—அவர்கள்பெயர் மேற்கவியில்வரும்.

பயாபதியரசனுக்கு மனைவிமார் மிகப்பலர்; அவர்களுட் சிறப்புடையவர் இருவ ரென்க. அவர்க்கு - நான்காம்வேற்றுமை எல்லைப்பொருளில் வந்தது. மா - உரிச்சொல்; மா + இரு=மாயிரு: உரிச்சொற்புணர்ச்சியாதலின், பொதுவிதிப்படி வகரமெய்பெறாது யகரவுடம்படுமெய் பெற்றது; [நன்- மெய்- ௩௩]. "மாமுன் னுயிர்வரின் யகரமெய் தோன்றும்" என்னுஞ் சூத்திரத்தையு முணர்க. விசும்பு என்னும் ஆகாசத்தின்பெயர், அதிலுள்ள தேவலோகத்துக்கு இடவாகுபெயர். விசும்பினின், இன் - ஐந்தனுருபு, நீக்கப்பொருளது. "இன்னென வரூஉம் வேற்றுமை யுருபிற்கு, இன்னென் சாரியை இன்மை வேண்டும்" என்றதொல்காப்பியச்சூத்திரத்தின் உரையிற் கூறியதனால், இங்கே இன்னுருபிற்கு இன்சாரியைவந்தது இலக்கணமாதலறிக. மாண்பு - பண்புப்பெயர்; பு - விகுதி. செம்மையென்னும் பண்புப்பெயர் ஈறுபோய் ஆதிநீண்டு முன்நின்றமெய் திரிந்து சேயெனநின்றது; இனி, யகரத்தை உடம்படுமெய்யெனினு மமையும். தெய்வம் - தைவம்; வடசொல். தாமரைத்தெய்வமன்னரொன்று ஏய் உரை இலாதவ ரென்பதற்கு- இலக்குமியை யொத்தவரல்லர் அவளினுஞ் சிறந்தவர் என்று கருத்து. அழகு செல்வச்சிறப்பு முதலியவற்றில் இலக்குமியை உவமையாகக்கொள்ளுவதற்கு ஏற்றவரல்லர் அவளுக்கு உபமானமாகத்தக்கவ ரென்றுங் கருத்துக் கொள்ளலாம். என்றே உரையிலாதவ ரெனப் பிரித்துரைத்தலுமாம். இலாதவரென்னுங் குறிப்பு வினையாலணையும்பெயரில், இல் என்னும் பகுதியே எதிர்மறையுணர்த்தியதனால்,ஆ-சாரியை. சேய்-அழகாயின், தாமரைத்தெய்வம் - செந்தாமரையில்வாழு மிலக்குமியும் வெண்டாமரைமலரில்வாழுஞ் சரச்சுவதியு மெனக் கொள்ளலாம். இரண்டாமடிக்குக்கருத்து-இவர்கள் தெய்வத்தன்மையுள்ளமகளிர் என்பது. (உஎ)

உ-அ.—(இ - ள்.) (அவ்விருமகளிருள்), தீம் கரும்பு- இனிப்பான கரும்பிற்கு, அமிழ்தம் ஊட்டி- அமிர்தத்தினினிமையைப்புகட்டி, தேன் அளாய்- தேனோடுகலந்து, பிழிந்த - அதன் சாரமெடுத்தவற்றை,போலும் - ஒக்கின்ற,ஒங்கு இரு கடல் அம் தானை வேந்து அணங்குறுக்கும் இன் சொல்-சிறந்த பெரிய கடல்போற்பரவியஅழகிய சேனையையுடைய பயாபதியென்னும் அவ்வரசனை ஆசைநோயடையச்செய்கிற கேட்டற்கினியசொற்களையுடைய, தேங்கிய திருவை அன்னாள்- (பலரிடத்துஞ்செல்லாது,ஒருவனிடத்தில்) தங்கிநிறைந்த இலக்குமியைப் போன்றவளாகிய, மிகாபதி - மிகாபதியென்பவள், மிக்க தேவி- (அவ்வரசனது)சிறந்த முதல் மனைவி; சசியொடு ஒப்பாள்- இந்திராணியோடு ஒப்பவளாகிய, சசிஎன்பாள் - சசிஎன்பவள், தாங்கு அரு கற்பின் தங்கை - (பிறரால்) தரித்தற்கருமையான கற்புநிலையுறுதியைத்தான்தரித்துள்ள இரண்டாம்மனைவியாவள்; (எ - று.)

மிக்கதேவி - மூத்தாள்; முதல்மனைவி. தங்கை - இளையாள்; இரண்டாவதுதேவி. இங்கே,தங்கை என்பது,சக்களத்தியென்னும் பொருளது. அமிழ்தம் - வடசொற்றிரிபு; மரணத்தை யொழிப்பது, சாவாமருந்து என்று பொருள். சேனைக்கு,கடல்- பரப்பாலும்,அச்சந்தருதலாலும், வரிசைவரிசையாக ஒன்றன்பின்னொன்றாய் வருதலாலும்,ஒலிமிகுதியுடைமையாலு முவமை. வேந்து- அரசத்தன்மை: அரசனுக்குப் பண்பாகுபெயர்: அரசு,அமைச்சு,தூது என்பனவுமிவ்வாறே. அணங்கு - காமவேதனை. மிகாபதி - மிருகாபதியெனவும் வழங்கும். தங்கை - தமது பின்னவள்; தாம் என்பதன் விகாரமான தம் - பகுதி, கை - முறைப்பெயர் விகுதி. சசி - ஈயீற இகரமான வடசொல்; [நன் - பத - ௨௦.] சசியொ டொப்பாள் - மூன்றும்வேற்றுமை ஒப்புப் பொருளில் வந்தது. 'வீங்கிருக் குவவுக் கொங்கை மிகாபதி' என்பது முதன்மையான பாடம்.

இருமுத வேழுகவிகள் - இச்சருக்கத்தின் முதற்கவிபோன்ற அறுசீர்க் கழிநெடிலடியாசிரியவிருத்தங்கள். (௨௮)

௨௯.—(இ-ள்.) பொன் மலர் - பொன்னாலாகிய பூக்களையுடைய, மணி கொம்பு - அழகியதொருகொம்பை, அன்ன - ஒத்த, தேம் குழல் மங்கைமார்கள் - வாசனையையுடைய கூந்தலையுடைய அவ்விரண்டுமங்கையரும், பூ குழை மகளிர்க்கு எல்லாம் - அழகையுடைய குழையென்னுங்காதணியையுடைய பெண்களெல்லோர்க்கும், திலதம் ஆய் - திலகத்தையொத்து அழகுசெய்துசிறந்து, திகழ நின்றார் - விளக்கமுற நின்றார்கள்; வயந்த காலத்து - வசந்தகாலத்திலே, மா கொழுந்து அசோகம் என்ற இரண்டுமே - மாமரத்தினிளந்தளிரும் அசோகமரத்தினிளந்தளிரு மென்றஇரண்டுதளிர்களுமே, ஆங்கு எழுந்தவற்றை எல்லாம் - அக்காலத்துத்தோன்றிய எல்லாத்தளிர்களையும், அணி பெற - அழகுசெய்விக்குமாறு, அலரும் அன்றே - மலருமன்றோ; (எ - று.)—அன்றே - தேற்றம்.

இது - எடுத்துக்காட்டுவமையணி; பின்னிரண்டடி - உபமானவாக்கியம், முன்னிரண்டடி - உபமேயவாக்கியம். வசந்தகாலத்துத்தோன்றுங் கொழுந்துகளெல்லாவற்றுள்ளும் மாங்கொழுந்தும் அசோகக்கொழுந்தும் மிகஅழகியனவாய்ச் சிறத்தல்போல அக்காலத்துள்ள மகளிரெல்லாருள்ளும் மிகாபதியும் சசியும் மிகஅழகியராய்ச் சிறந்தன ரென்க. குழை-மற்றையாபரணங்களுக்கும், குழல்- மற்றையுறுப்புக்களுக்கு முபலக்ஷணம். மகளிர், இர்- பலர்பால்விகுதி; புத்தேளிர், கேளிர் என்பவற்றிற்போல. எல்லாமென்பது, இருதிணைக்கும் பொது. பொன்மலர் - அவயவங்களுக்கும் ஆபரணங்களுக்கும், பூங்கொம்பு- உடம்புக்கு முவமை. மணிக்கொம்பு - இரத்தினமழுத்தியகொம்பென்றுமாம். உத்தமசாதிப்பெண்கள்கூந்தலில் இயற்கைமணமுண்டென்பது இலக்கணமாதலால், தேங்குழ லெனப்பட்டது. தேன் குழல்எனப்பிரித்து,'(சூடியபூக்களின்)தேனையுடைய கூந்தலென்றுங் கொள்ளலாம்; [நன் - மெய் - கக]. மங்கைமார், மார் - பலர்பால்விகுதி; கள் - விகுதிமேல்விகுதி. திலதம் - திலகம்: வயந்தம் - வசந்தம்; வடசொற்றிரிபுகள். என்றுங்கு- பெயரெச்சவீறு தொகுத்தல். ஆங்கு - அசை. அசோகமென்னும் வடசொல்லுக்கு-(தன்னிழலையடைந்தவர் அல்லது தன்னைக்கண்டவரது) சோகங்களை யொழிப்ப தென்று பொருள்;சோகம்- மனத்துன்பம். இரண்டுமே, உம்மை - உயர்வுசிறப்பு; ஏ - பிரிநிலை. வயந்தகாலம் - வசந்தமாகிய காலம்; வடசொற்புணர்ச்சியாதலின்,வருமொழிமுதல்வலிஇயல்பாயிற்று. வசந்தகாலம் - சித்திரைவைகாசிமாதங்களாகிய இளவேனிற்பருவம்; இது, பெரும்பொழுதாறனு ளொன்று. காலம் - இங்கே, இருது. எழுந்தவற்றை - வினையாலணையும்பெயர் இரண்டாம்வேற்றுமை. அணிபெற - அணிபெறுவிக்க; பிறவினைப்பொருளில்வந்த தன்வினை: வி என்னும் பிறவினைவிகுதி தொக்குநின்ற தென்க; இதனை வடநூலார் 'அந்தர்ப்பாதணிச்' என்பர். (௨௯)

௩௦.—(இ - ள்.) பெரு மகன் - யாவரினுஞ்சிறந்த மனிதனான அவ்வரசன், உருகும் - மனமுருகுதற்குக்காரணமான, பெண்மை மாண்பினும் - (அழகு நாணம் மடம் அச்சம் பயிர்ப்புமுதலிய)பெண்தன்மைக்குணங்களின் சிறப்பினாலும், காணும் பேணி மருவினும் - தினந்தோறும் விரும்பிக்கேட்டுப் பழகினாலும், புதிய போலும் - (எப்பொழுதும்)புதியனவற்றையே யொத்திருக்கிற, அம் மழலை கிளவியாலும் - அழகிய மழலைச்சொற்களின் சிறப்பினாலும், இருவரும் - (மிகாபதி சசி என்னும்) அவ்விரண்டு சிறப்புடைமங்கையரும், திருமகள் புலமை ஆக்கும் செல்வி என்ற இவர்கள் போல - இலக்குமியும் அறிவையுண்டாக்குகின்ற கல்விச்செல்வத்துக்குரிய தலைவி

யான சரச்சுவதியும் என்ற இருவர்போல, இறைவன் உள்ளத்து ஒருவர் ஆய் இனியர் ஆனார் - அரசனது மனத்துக்குச் சிறிதும்மாறுபடாதவராய் [சமமாக] மிகஇனியவரானார்கள்; (எ - று.)

மூன்றாமடியிற்கூறிய உபமானத்தால், செல்வமுங் கல்வியும் இவ்வரசனிடம் மாறுபாடின்றி உடனிருந்தமையும் விளங்கும். "நாவீற் றிருந்த புலமாமக ளோடு நன்பொற், பூவீற் றிருந்த திருமாமகள் புல்ல நாளும்" என்றார் சிந்தாமணியாரும். உருகும் பெண்மைமாண்பு - பெயரெச்சங் காரியப் பொருளது. தினந்தோறும் பழகினாலும் அரசனுக்குச் சொற்கள் புதியனவாகத்தோன்றுதற்குக் காரணம், மிக்க இனிமையும் அவற்றினிடத்து அரசனுக்கு உள்ள மிக்க அன்புமாம்; வடமொழிக்காவியங்களுட் சிறந்த மாகத்திலும் "நவம்நவம்ப்ரீதிராஹோகரோதி" என வருமாறு காண்க. 'மருவினும்' என்ற உம்மை, பழையவை புதியவையாகும் வியப்புத் தோன்ற நின்றது. புதிய - பெயர். திரு - கண்டாரெல்லாராலும் விரும்பப்படுந் தன்மைநோக்கம்; என்றது, அழகென்றபடி: அதனையுடையவள் - திருமகள். ஸ்ரீஎன்னும் வடசொல் திருவெனச்சிதைந்த தென்றுங் கூறுவர். புலமை - பண்புப்பெயர். என்றிவர் - விகாரம். மிகாபதி பெண்மைமாண்பினால் திருமகள்போல இனியளாயினளென்றும், சசி மழலையங்கிளவியால் கலைமகள்போல இனியளாயினளென்றும் முறைநிரனிறைப்பொருள்கோள்பட உரைத்தலு மொன்று. ஒருவராய் - தம்முள்மாறுபடாதவராய், மனமொத்து என்றபடி. 'மாண்பினும்' என்பது, ஏட்டின் பாடமே. (௩௦)

௩௧.—(இ - ள்.) மகளிர் - அவ்விரண்டுமங்கையரும், மன்னவன் ஆவி ஆவார் - அவ்வரசனுக்கு உயிராவார்கள்; இறைமகன் - அவ்வரசன், அமகளிர்தங்கள் இன் உயிர் ஆகி நின்றான் - அந்த மங்கையர்க்கு இனிய உயிராய் நின்றான்; முன்னவன் - பழமையாக உள்ளவனான, அம் மொய் மலர் கணையினான் - அழகிய நெருங்கிய புஷ்பபாணங்களையுடைய மன்மதன், இங்கு - இவ்வுலகத்தில், இவர்கள்தங்கட்கு - இம்மங்கையர்க்கும் இவ்வரசனுக்கும், ஒருவர்தம்மேல் ஒருவர்க்கு உள்ளம் ஓட - ஒருத்தர்மேலொருத்தருக்கு மனஞ்செல்லும்படி, புணர்த்த ஆறு - செய்தவிதம், என்னைகொல் - யாதோ? (எ - று.)

ஒருவர்க்குஒருவர்உயிராய்நிற்பவராது மனம் ஒருத்தர்மேலொருத்தர்க்குச் செல்லும்படி காமதேவன் செய்த சூழ்ச்சி யாதோவென வியந்தபடி. இறைமகன் - இறைமையையுடையமனிதன், இறைவனாகிய மனிதன் என்க; இறைமை - தலைமை. 'என்னைகொல்' என்றது - மன்மதனது மாயையைப்பற்றின அதிசயந் தோன்ற நின்றது. அஃறிணையிருபாற்கும் பொதுவாகிய எவன் என்னும் வினாவினைக்குறிப்புமுற்று, தொகுத்தல்விகாரத்தால் என் என்று ஆகி ஐகாரச்சாரியை பெற்றது; இது - பிறசாரியைகளைப்பெற்று, என்னே, என்னோ, என்ன எனவும் நிற்கும். கொல்என்பது - அசைநிலை, இடைச்சொல்; "கற்றதனா லாய பயனென்கொல்" என்றவிடத்துப் போல. முன்னவன் - யாவர்க்கும் முதல்வனான முழுமுதற்கடவுள். அம்மொய்ம்மலர்க்கணையினான் - புஷ்பபாணங்களால், புணர்த்த ஆறு - செய்தவகை என்றும் உரைக்கலாம். முன்னவன் - முத்தொழிலுள்ளும் முதலதான படைத்தல்தொழிற்கு உரிய பிரமனாகவுமாம். அமொய்ம்மலர் என்று பிரித்து, அப்படிப்பட்ட [சிறப்பையுடைய] வலியமலர் என்றுமாம்; அ - உலகறிசுட்டு. மொய்ம்மலர் - வினைத்தொகை. மலர்க்கணை - தாமரைமலர், அசோகமலர், மாமலர், முல்லைமலர், நீலோற்பலமலர் என்னும் ஐந்தும்.

௩௨.—(இ - ள்.) கமழ - வாசனைவீசும்படி, அகம் - தன்னிடத்திலே, பூத்த - மலர்ந்த, பொற்பு - அழகாகிய, தேன் அணி - தேனினையுடைய

பூங்கொத்தை, பொறுக்கல் ஆற்று - தரிக்கமாட்டாத [மிகமெல்லிய], கற்பகம் கொழுந்தும் - கல்பகவிருட்சத்தின் இளந்தளிரையும், காமம் வல்லி அம் கொடியும் - காமவல்லியென்னும் அழகிய பூங்கொடியையும், ஒப்பார் - ஒப்பவரான அவ்விரண்டுமங்கையரும், சொல் பகர்ந்து உலகம் காக்கும் தொழில் - கட்டளைச்சொற்களைக்கூறி (அரசன்) உலகமுழுவதையும் ஆளுகின்றதொழில், புறத்து ஒழிய - (அவனது கட்டளைபெற்ற பரிவாரமாகிய) மந்திரிமார்முதலியோரிடத்துச் செல்லும்படி, மல் பகர் அகலத்தானை -(ஆயுதமின்றித் தேகவலிமையாற் போர்செய்யும்) மல்தொழில்திறமையைப் புலப்படுத்துகிற மார்பையுடைய அவ்வரசனை, வாங்கி - கவர்ந்து தம்வசப்படுத்தி, மனத்திடை பிணித்து வைத்தார் - (அவனது) மனத்திலே (தங்கள்பாலுள்ள ஆசையாகிய கயிற்றைக்) கட்டிவைத்தார்கள்; (எ - று.)

தம்மிடத்துள்ள வேட்கைமிகுதியால் அரசன் இராசாங்ககாரியத்தைத் தனதுமந்திரிமாரைப் பார்க்கும்படி ஏவித் தம்முடனே எப்பொழுதுஞ் சுகித்திருக்கும்படி இம்மங்கையர் அவனை வசப்படுத்தினரென்க. அகலம் - அகற்சி; தொழிற்பெயர்: அகல் - பகுதி, அம்- விகுதி; இது - பரப்பையுடையமார்புக்குத் தொழிலாகுபெயர். மனத்திடைப் பிணித்துவைத்தார்- தமதுமனக்கருத்தின்படி கட்டிவைத்தாரு மாம். 'பொறுக்கலாற்று' என்றது,அளவுக்கு மிஞ்சின அழகின்சிறப்பை விளக்கிற்று. கற்பகம் - அரசனாதலால்,அவனுக்குரிய மெல்லியமனைவியை 'கற்பகக்கொழுந்து' என்றார்.(௩௨)

௩௩.—(இ - ள்.) மங்கையர் இருவர் ஆகி - (தனக்குச்சிறந்தமனைவியராகும்) இளம்பெண்கள் இரண்டுபேராய், மன்னவன் ஒருவன் ஆகி - (அவர்க்கு இன்பந்தருங் கொழுநனாகிய) அரசன் தான் ஒருவனேயாய், அங்கு அவர் அமர்ந்தது எல்லாம் அமர்ந்து - அவ்விடத்து அவர்கள் விரும்பியபடியெல்லாம் இருந்து, அருள் பெருகி நின்றான் - (அவ்விருவரிடத்துஞ் சமமாகச்)சிறந்த அன்பு மிகுந்து நின்ற அந்தப்பயாபதியரசன், செம் கயல்- அழகிய கயல்மீன் போன்ற, மதர்த்த - செழிப்புள்ள, வாள் கண் - ஒளியுடைய கண்களையுடைய, தெய்வம் மா மகளிர் தோறும் - தெய்வத்தன்மையுள்ள அழகிய(ஸ்ரீதேவி பூதேவி யென்னும்)இரண்டுமங்கையரிடத்தும், தங்கிய - ஒருபடியாகத்தங்குகின்ற, உருவம் - வடிவத்தை, தாங்கும் - தரிக்கிற, சக்கரன் தகைமை ஆனான் - சக்கராயுதமுடைய திருமாலின் தன்மை யுள்ளவனானான்; (எ - று.)

திருமால் - பயாபதிக்கும், ஸ்ரீதேவிபூதேவியர் - இரண்டு உத்தம மனைவியர்க்கும் உவமை. அமர்ந்ததெல்லாம் - ஒருமைப்பன்மைமயக்கம். அமர்ந்தது - சாதியொருமை. இது பொருளாற் பன்மையாதலின், 'எல்லாம்' என்னும் பன்மைச்சொற் கொடுத்துக் கூறினார். உவமையணி. தெய்வமா மகளிர்தோறுந் தங்கிய வுருவந் தாங்குஞ் சக்கரன் என்பதற்கு - சிறந்த கோபிகைப்பெண்களின்வடிவமெடுத்த தெய்வத்தன்மையுள்ள மூனிவரிடந்தோறும் ஒவ்வொருவடிவங்கொண்டு காணப்பட்ட கண்ணபிரான் என்றும், ஊர்வசிமுதலிய அழகியதேவமாதரிடந்தோறுந் தங்கும் வடிவ மெடுத்த இந்திரன் என்றும் உரைக்கவும் இடமுண்டு. தகைமை - பண்புப்பெயர்; தகைமையனுக்கு ஆகுபெயர். மூதலுரைக்கு, தோறும்- ஏழனுருபு.

௩௪.—(இ - ள்.) முற்று - பழமையாய் முதிர்ந்த, நீர் - கடல்சூழ்ந்த, வளாகம் எல்லாம் - பூமியினிடம் முழுவதிலும், முழுது உடன் நிழற்றும் - ஒருசேரச் சமமாக நிழலைச்செய்கின்ற, மூரி- வலிமையையுடைய, ஒற்றை வெள் குடையின் நீழல் - ஒற்றைவெண்கொற்றக்குடையினது நிழலிலே, உலகு - உலகத்துள்ள உயிர்களெல்லாம், கண் படுப்ப - (கவலையில்லாமற்) கண்மூடி உறங்கும்படி, கொற்றவன் - வெற்றியையுடைய அரசன்,

ஓம்ப - (அவ்வுயிர்களையெல்லாம்) பாதுகாக்க, நெடு கண் செவ்வாய் கோதையர் - நீண்டகண்களையுஞ் சிவந்தவாயையுமுடைய மாலைபோன்ற அம்மகளிர், அவனை ஓம்ப - அவ்வரசனைப் பாதுகாக்க, அவர்க்கு - அவ்வரசனுக்கும் இராணியர்க்கும், அரச செல்வம் - இராசகுலத்துக்குரிய இன்பச்சிறப்பெல்லாம், இன்னணம் - இவ்வாறு, அமர்ந்தது - நிலைபெற்று நடந்தது; (எ - று.)—அன்றே - ஈற்றசை. மற்று - அசை.

வளாகம் - சூழ்ந்தவிடம். நிழற்று - நிழல் என்பதன் பிறவினை; று - விகுதி. இன்னணம் - இன்னவண்ணம் என்பதன் மரூஉ. 'அரசச்செல்வம்' என வலிமிக்க பாடமே சிறப்புடையது. 'அரசசெல்வம்' என்பதில் உயர்திணைப்பெயர்முன் வலிஇயல்பாயிற் றென்றுவது, அரச என்பது ராஜ என்னும் வடசொற்றிரிபாதலின் அதன்முன் வலிஇயல்பாயிற் றென்றுவது கொள்க. நீழல் - நிழல் என்பதன் நீட்டல். 'ஓம்பிக், கொற்றவ னெடுங்கணார்தங் குவிமுலைத் தடத்து மூழ்கி' என்பது பழம்பாடம். (௩௪)

நகரச்சருக்கம் முற்றிற்று.

---

# குமாரகாலச்சருக்கம்.

காப்பியத்தலைவனான திவிட்டனது இளமைப்பருவத்துச்செய்தியைக் கூறும்பாக மென்று பொருள். இதனைப் பாலகாண்டமென்பதுபோலக் கொள்க. இதில், பயாபதிசக்கரவர்த்திக்கு விஜயன் திவிட்டன் என்னும் இரண்டுகுமாரர்கள் பிறந்ததும், அவர்களது பாலியத்தில் நடந்ததொரு செய்தியுங் கூறப்படுகின்றன. குமார காலம் - இளையமகனாயிருக்குங் காலம். குமாரனதுகாலமென ஆறனுருபுத்தொகையாகவுங் கொள்ளலாம். இது, கௌமாரகாலச்சருக்கமென இருப்பின் நலம். கௌமாரம் என்பது, பதினாறுபிராயம்வரையிலுமாகிய இளம்பருவம்.

க.—(இ - ள்.) வாங்கு - (உலகத்தை) வளைந்த, நீர் - நீர்மயமான கடலினது, திரை - அலைகளிலே, வளர் - தோன்றிவளர்கிற, வளையும் - சங்கத்தையும், அ கடல் - அந்தக்கருங்கடலினது, ஓங்கு நீர் - உயர்ந்தநீரினது, நிழலும் - ஒளியுள்ள நிறத்தையும், ஒத்து - போன்று, ஒளிரும் - (முறையே வெண்ணிறமுங் கருநிறமுமாய்) விளங்குகிற, மூர்த்தியார் - வடிவமுடையவர்களாகிய, இருவர் - இரண்டுகுமாரர், கற்பம் - ஒருகற்பத்திலே, ஆங்கு - அவ்வுலகத்திலே [மேலுலகத்திலே], அமரர்-தேவர்களை, ஆண்டு- அரசாண்டிருந்து, ஈங்கு- இவ்வுலகத்திலே [இப்பொழுது], உடன் இழிந்து வந்து - ஒருசேர இறங்கிவந்து, அவர் திரு வயிறு - கீழ்க்கூறிய மிகாபதியும் சசியு மென்பவரது அழகிய வயிற்றிலே, தோன்றினார் - பிறந்தார்கள்.

ஸகஸ்ரார மென்னுங் கற்பத்தில் இந்திரனாய்த் தேவலோகத்தை அரசுபுரிந்தவனே இவ்வுலகிற் சீவகனென்னுஞ் சிறந்த அரசனாய் அவதரித்தா னென்று சிந்தாமணியிற் கூறியுள்ளவாறுபோல முன்னொருகற்பத்தில் இந்திரனாயரசாண்ட இருவரே இக்குமாரராய் அவதரித்தன ரெனக. மேல் மந்திரசாலைச்சருக்கத்திலும் "அன்னணம் புராணநூலகத்துத் தோன்றிய, கன்னவி லெலங்குதோட் காளை யானவன், பின்னவில் விசும்பினின் றிழிந்து வீங்குசீர், மன்னிய வரைப்பக மலைத் தோன்றினான்," "கானுடை விரிதிரை வையங் காக்கிய, மானுட வுடம்பினான் மறைந்து வந்தவந், தேனுடை யலங்கலான் தெய்வ மார்பகந், தானமர்ந் தடைவதற் குரிய வடையலே" எனக்கூறப்படும். ஆங்கு - அக்காரத்திலென்றுமாம். அமரர் - அமிருதமுண்டதனால் மரணமில்லாதவர். இது, இங்கு, இரண்டாம்வேற்

றமைத்தொகை. 'அமரர்க்கற்பமாண்டு' என வலிக்கபாடமே இவ்வுரைக்கு வலியுடையது. கற்பம் - கல்பம்; காலத்தின் ஒருபெரும்பகுதி. கற்பம்- சுவர்க்கலோகமாயின், அமரரது கற்ப மென்க. ஆண்டு, ஆள் - பகுதி. உடன் என்பதைத் தோன்றினு ரென்பதனேடுங் கூட்டுக. நீர் - கடலுக்கு இலக்கணை. திரைவது, திரை; ஏதுப்பெயர்: திரைதல் - மடிதல். வளை - உட்சுழிந்தவடிவுடையதெனக் காரணக்குறி. கடல்-கள்தல் எனப்பிரித்துத் தொழிலாகுபெயராக்கித் தோண்டப்பட்டது என்று பொருளுரைப்பர். முறைநிரனிறைப்பொருள்கோள். 'அமரர்கற்பம்'என்பதே எமக்குக்கிடைத்த ஏட்டுப்பிரதியின் பாடம். அமர்ந்தகற்பமென்ற பாடத்துக்கு, அமர்ந்த என்பது- கற்பத்துக்கு அடைமொழி; அமர்தல் - பொருந்துதல்.

இதுமுத விருபத்துநாலுகவிகள் -நாட்டுச்சருக்கத்தின் முதற்கவி போன்ற கலிவிருத்தங்கள். (க)

உ.—(இ-ள்.) பெண்ணில் - பெண்களிலே, ஆம் தகை - சிறந்தபெருமையையுடைய, பெரு தேவி - (பயாபதியரசனது பிரதானமனைவியரிருவருள்) பெரிய தலைவியான மிகாபதியினது, பேர் அமர் கண்-(ஆடவர்க்குக் காமநோயைவளர்த்துப்) பெரும்போர்செய்யவல்ல கண்களிலே,ஆம் களி வளர் உவகை கைம்மிக - மிகுந்தகளிப்பு வளர்தற்குக் காரணமான மகிழ்ச்சி அதிகப்படும்படியாகவும், தண் நிலா - குளிர்ந்தசந்திரகாந்தியோடொத்த வெண்ணிறமுடைய புகழ், உலகு எலாம் தவழ்ந்து - இவ்வுலகமுழுவதிலும் பரந்து, வான் கொள - தேவலோகத்தையுஞ் சென்றடையும்படியாகவும், வெள் நிலா சுடர் ஒளி விசயன் - வெண்மையான சந்திரகாந்திபோல விளங்குகிற வெண்ணிறத்தேககாந்தியையுடைய விசயன் என்பவன், தோன்றினன்-(அவளது குமாரனாய்ப்) பிறந்தான்; (எ - று.)

"வயாவும் வருத்தமும் ஈன்றக்கால் நோவும், கவாஅன் மகற்கண்டு தாய்மறந் தாஅங்கு" என்பதனால், 'பெருந்தேவிகண்ணில் உவகைகைம்மிக' என்றார். தகை - நாணம்முதலிய பெண்மைக்குணமும் அழகு மாகவுமாம். பெண் நிலாம் தகை எனப்பிரித்து, பெண்களுட்சிறந்துவிளங்குந் தகுதியையுடைய வென்று முரைக்கலாம். பெருந்தேவி - முறைமையில் மூத்தமனைவி. பேரமர் - பிரசித்தமானபோருமாம். அமர் - ஸமரமென்னும்வடமொழிச்சிதைவு; இது- சமர், சமம் எனவும் வழங்கும். கண்ணில் - கண்கள்போல, உவகைகைம்மிக என்றுமுரைக்கலாம். களி - முதனிலைத்தொழிற்பெயர். உவகை-தொழிற்பெயர்;உவ-பகுதி,கை-விகுதி. 'கைம்மிக'என மெலிமிக்குநிற்கும்; தனியைம்முன் மெலிமிகு மாதலின். கைம்மிக என்பதில், கை என்பது-தனியே ஒருபொருள்தராமல் வினையையடுத்து நின்றதனால், தமிழ் உபசருக்கமாம். சொல்வடிவமானகீர்த்தியை உருவமுடையதுபோல வெண்ணிறத்ததென வருணித்தல், கவிமரபு. இனி, மூன்றுமடிக்கு, தனது வெண்மையான உடம்பிெனொளி இவ்வுலகத்திலும் மேலுலகத்திலுஞ் சென்றுபரவ வென்றும், சந்திரனொளி உலகமெங்கும் விளங்கும் ஒரு இராப்பொழுதிலே யென்றும், தான் பிறக்கும்பொழுது நல்ல நிமித்தமாய்ச் சந்திரனொளி மாசின்றி நன்கு விளங்க வென்றும் பொருளுரைக்க இடமுண்டு. விசயன்-விஜயன்; இவ்வடசொல்லுக்கு-விசேஷமான வெற்றியையுடையவ னென்றுபொருள்; தன்னைவெல்வாரொருவரு மில்லாதவ னென்று முரைக்கலாம். (உ)

ந.—(இ-ள்.) ஏர் - அழகிலே, அணங்கு - திருமகளையொத்த, இள பெரு தேவி - இளைய சிறந்த இராணியான சசியென்பவளுக்கு, நாள் உற- (கருப்பம்முதிர்ந்து) பிரசவகாலம் வர, சீர் அணங்கு அவிர் ஒளி திவிட்டன் - சிறந்த தெய்வத்தன்மையுள்ள விளங்குகிற ஒளியையுடைய திவிட்டனென்னுங்குமாரன், தோன்றினான் - அவதரித்தான்; (அப்பொழுது, சுபநிமித்த

மாய், சீர் அணங்கு ஒளி வலை திரந்து விம்மின - சீரில் விரும்பிவாழ்கிற ஒளியையுடைய சங்குகள் ஒருங்குகூடி ஒலித்தன; ஆர் அணங்கு அலர் மழை அமரர் சிந்தினர் - அருமையான அழகிய கற்பகப்பூமாரியைத் தேவர்கள் சொரிந்தார்கள்; (எ - று.)

முதலடியில், அணங்கு - சிறந்ததெய்வப்பெண்; இரண்டாமடியில், அணங்கு - தெய்வத்தன்மை; மூன்றாமடியில், விரும்பம்; நான்காமடியில், அழகு: இரண்டாமடியில் - அழகும், நான்காமடியில் - தெய்வத்தன்மையுமாகவுமுரைக்கலாம். காளுற - சுபதினம் பொருந்த என்றுமாம். அவிர் ஒளி - வினைத்தொகை. சீர் - ஸ்ரீ என்னும் வடமொழித் திரிபு. திரந்து, திர - பகுதி. அலர்மழை - புஷ்பவருஷம். ஆர் - நிறைந்த என்றுமாம். இளந்தேவிக்குப் பெருமையென்னும் அடைமொழி கொடுத்தது, கதைத்தலைவனைச் சிறந்த திவிட்டனைப் பெறுதலால். (௩)

௪.—(இ-ள்.) (அப்பொழுது,சுபக்குறியாய்) திசை எலாம் தெளிந்தன - திக்குக்கள்யாவுந் தெளிவையடைந்தன; தேவர் பொன் நகர் இசை எலாம் பெரு சிறப்பு இயன்ற - தேவர்களது பொன்மயமான அமராவதிநகரத்துச் சங்கீதவகைகள்யாவும் மிக்கசிறப்போடு பொருந்தின; ஏற்பவர் நசை எலாம் - இரப்பவர்களது ஆசைமுழுவதும், அவிந்தன - (அவ்வரசன் மகிழ்ந்து செய்யுந் தானங்களால்) அடங்கின; (அவன் அவதரித்த புண்ணியத்தால்), பலர்க்கும் - யாவர்க்கும், நலியும் தீவினை பசை எலாம் - (இம்மைமறுமைகளில்) வருத்துந் தன்மையுடைய பாவகாரியங்களில் உண்டாகும் விருப்பமெல்லாம், பறந்தன - விரைந்தழிந்தன: என்ப - என்றுசொல்லுவர் (நூலோர்); (எ - று.)

எங்குமுள்ள நீர்நிலைகள்யாவுந் தெளிவையடைதலும் வானம் மாசின்றி நக்ஷத்திரங்கள் விளங்கப்பெறுவதுமாகிய நல்நிமித்தங்களைக் கருதி, 'திசையெலாந் தெளிந்தன' என்றார். தேவதுந்துபிமுதலிய தெய்வவாத்தியங்கள் பலவும் மிகுதியாய் முழங்கின வென்பது, இரண்டாவது வாக்கியத்தின் கருத்து. இயன்ற - முற்று. ஏற்பவர், ஏல் - பகுதி. "ஒண்பொற் குன்றந் தலைதிறந்திட், டிறைவன் சிறுவன் பிறந்தானென் றேற்பார்க் கூர்தோறுய்த்திடுமின்" எனச் சிந்தாமணியிலும், "யாவையும், முறைகெட வறியவர் முகந்து கொள்க" எனக் கம்பராமாயணத்திலுங் கூறியுள்ளபடி அரசன் புத்திரபாக்கியத்தாலுண்டான ஆனந்தத்தால் வரையறையின்றி வேண்டிய பொருள்களை அளித்தலால், 'ஏற்பவர்நசையெலாமவிந்தன' என்றது. நலியும் என்னும் இருவினைப்பொதுப்பெயரெச்சம், இங்கே பிறவினைக்குவந்தது. தீவினை - கொடுந்தொழில். உம்மை - முற்று. (௪)

௫.—(இ - ள்.) செய்த - (அழகிதாகச்) செய்யப்பட்ட, மாண் - சிறப்பையுடைய, நகரியில் - அந்தப்பட்டணத்திலே, சிறந்து எய்தினர் - சிறப்புற்று அவதரித்து அடைந்தவராகிய (விசயன் திவிட்டன் என்னும்) அவ்விருவரும், சென்று சென்று - நன்றாகவளர்ந்து, குமரர் ஆம் பிராயம் எய்தலும் - இளையவரான வயதை அடைந்தவளவிலே, மை அழாம் நெடு கணார் மனத்துள் - மைகலந்த நீண்டகண்களையுடைய மகளிரது மனத்திலே, காமனார் - மன்மததேவரது, ஐது உலாம் - அழகுடையதாய் விளங்குகிற, கவர் கணை - (மனத்தைத் தன்வசத்தில்) இழுக்கும் மலரம்புகள், அரும்பு வைத்த - அரும்புவைத்தன; (எ - று.)

அரும்புவைத்த - அழுந்தலுற்றன வென்றபடி. கீழ் நகரச்சருக்கத்தில் "நூலவர் வகுக்கப்பட்ட...போதனம்" என்றதற்கேற்ப, 'செய்தமாணகரி' என்றார். நகரி - ஈயீறு இகரமாத்திரிந்த வடசொல்; [நன் - பத - உ௦.] சென்று சென்று - அடுக்கு, மிகுதிப்பொருளது. குமாரம் பிராயம் - கௌமாரமென்னும்பருவம்; இதனை அடைதலும் என்றது, யௌவனத்தின் தொ

டக்கத்தை அடைக்கமாத்திரத்தி லென்றவாறு. அந்நகரத்துப் பெண்கள் பலர் அவனழகைக்கண்டு அவனிடங்காதல்கொள்வாராயின ரென்பது, பின்னிரண்டடியின்கருத்து. அழாவுமென்னுஞ் செய்யுமெனெச்சத்து ஈற்றுஉயிர்மெய்சென்றது. 'காமனார்' என்றதில்,ஆர்என்னும்பலர்பால்விகுதி-யாவரையுந் தன்வசப்படுத்தும் அவனது திறமையையும், யாவரையும் வருத்தும் அவனது கொடுமையையும் விளக்கும். ஐது - ஐஎன்னும் உரிச்சொலடியாப் பிறந்த ஒன்றன்பாற்குறிப்பு வினையாலணையும்பெயர்; இது, இங்கே வினையெச்சப்பொருள்பட்டு வினையுரியாய் நின்றது. கவர்கணை - வினைத்தொகை. வைத்த - முற்று. கணையென்பது பால்பகாவஃறிணைப்பெயராதலின், 'வைத்த' என்னும் பலவின்பால்முற்றைக் கொண்டது. இனி, ஐது என்பதைத் தெலுங்கினின்றுவந்த திசைச்சொல்லெனக் கொண்டால், ஐந்தாய்விளங்குங்கணையென்னலாம். குமரர் - குமாரரென்பதன்குறுக்கல்; இவ்வடசொல்லுக்கு-மன்மதனையுங் குற்சிதரூபமுடையவனாக்கவல்ல கட்டழகுடையவரென்று பொருள்: இம்முருகக்கடவுளின்பெயர், அவன்போலழகிய மைந்தர்க்கெல்லாம் உவமவாகுபெயராய் வழங்கும். காமனார்கணை யென இயையும். 'மாரகரி' என்றும்பாடம். எய்தினார், எய்து - பகுதி. "ஐவியப்பாகும்" என்ற தொல்காப்பியச்சூத்திரத்தால், ஐ - வியப்புப்பொருள்தருவதோர் உரிச்சொல்லுமாம். (௫)

இதுவும், மேற்கவியும் - ஒருதொடர்; இவ்விரண்டுகவிகளும் அக்குமாரரிருவருள் மூத்தவனது இயல்பை விளக்குவன.

௬.—(இ - ள்.) காமரு வலம்புரி கமழும் மேனியன் - அழகிய சங்கத்தின் வெண்மைநிறம் வெளிவிளங்குந் தனதுஉடம்பையுடையவன்; தாமரை அகம் இதழ் தடுத்த கண்ணினன் - செந்தாமரைமலரின் உள்ளிதழின் தன்மையைத்(தனக்கு ஒப்பாகாதென்று) தடுத்த கண்களையுடையவன்; தூம் மருள் இருள் திணர்ந்து அனைய குஞ்சியன்- புகையும் மனம்மயங்குதற்குக்காரணமான இருளுங் கொத்தாகத் தொக்காற்போன்ற [மிகக்கரிய] தலைமயிர்முடியையுடையவன்; பூ மரு பொலம் குழை புரளும் காதினன் - பொலிவுமிக்க பொன்னாலாகிய குண்டலங்கள் அசைகின்ற காதுகளையுடையவன்; (எ - று.)—இவற்றிற்கெல்லாம்எழுவாய்-வருங்கவியில்'பெரியநம்பி'என்பது.

காமரு-காமமருவு என்பதன் மரூஉ. வலம்புரி - வலப்பக்கமாய்ச் சுழிந்துள்ளது; இது - சங்கத்தின் சிறந்த சாதி. அகவிதழ் தடுத்த - அகவிதழின் தன்மைமுழுவதையும் புறத்தே செல்லவிடாது தன்னிடத்தே அடக்கிக்கொண்ட என்றும் உரைக்கலாம். கமழும், தடுத்த இவ்விரண்டும் உவமவுருபென்றுங் கொள்ளலாம். தூம் - தூமமென்பதன் கடைக்குறை; நீலம் - நீல், காமமுறு-காமுறு, ஐயமுறு - ஐயுறு, ஏமமுறு-ஏமுறு என்பனபோல. தூம்மருளிருள்-உம்மைத்தொகை. குஞ்சி-ஆண்மயிர். பொன்+குழை=பொலங்குழை;இப்புணர்ச்சிக்கு விதி "பொன்னென் கிளவி யீறுகெட முறையின், முன்னர்த் தோன்றும் லகார மகாரஞ், செய்யுண் மருங்கிற் றொடரிய லான" என்னுந் தொல்காப்பியச்சூத்திரம்; நிலைமொழி னகரமெய்கெட்டு லகரவுயிர்மெய்யும் மகரமெய்யுந் தோன்றிப் பின்பு மகரம் வன்மைக்கினமாய்த் திரிந்ததென்க: நன்னூலின்படி பொலம்குழை என்றேபிரித்துப் புணர்க்கவேண்டும். குழை - ஒருவகைக்காதணி. தூம்மருள் - இருளையொத்த என்றுமாம்; மருள் - உவ வுருபு. (௬)

௭.—(இ-ள்.) வாடல் இல் கண்ணியன்- (எப்பொழுதும்) வாடுதலில்லாத [புதிது புதிதான] மாலையையுடையவன்; மலர்ந்த மார்பினன் - பரந்த மார்பையுடையவன்; தாள் தவழ் தட கையன் - முழங்காலளவுஞ் செல்லுகிற பெரியகைகளையுடையவன்; துயங்கு சோதியன் - விளங்குகின்ற (உட

ம்பின்) ஒளியையுடையவன்; கோடு உயர் குன்று என குலவு தோளினன் - சிகரமுயர்ந்த மலைபோல விளங்குகிற தோள்களையுடையவன்; பீடு உடை நடையினன் - பெருமையையுடைய நடையையுடையவன்: (யாரென்னில்), பெரிய நம்பி - (அக்குமாரரிருவருள்) மூத்தமகனான விசயன்; (எ - று.)

பீடு உடை நடை-பிறர்வீரத்தை அழிக்குந் தனது நடையுமாம். 'வாடலில் கண்ணியன்' என்றதனால், தெய்வத்தன்மை விளங்கும்; தேவர்கள்மாலை வாடாதாதலின். 'கண்ணி - முடிக்கும் மாலை' என்பர் நச்சினார்க்கினியர். மலர்ந்த மார்பு-பூமாலைகள்மலரப்பெற்ற மார்புமாம். தாள் தவழ் கை-ஆஜாநுபாகு. தோள் நீண்டிருத்தல், உத்தமபுருஷலக்ஷணம். சோதி - ஜ்யோதி என்னும் வடமொழித் திரிபு. தோளுக்குக் குன்று உவமை - பருமைக்கும், படைக்கலங்களால் ஊறடையாத உறுதிக்கும், உயர்ச்சிக்கு மென்க. தோள்-தோஸ் என்னும் வடமொழிச் சிதைவென்பர். பீடு-கம்பீரமான தன்மை. நம்பி - ஆடவரிற்சிறந்தவன்; ஆண்பாற்சிறப்புப்பெயர்: (யாவராலும்) நம்பிச்சரணமடையத் தக்கவனெனக் காரணக்குறி: நம்பு-பகுதி, இ-செயப்படுபொருள் விகுதி: இனி, நமக்குஇன்றனென்னும் பொருள்பட வருவதோர் உயர்ச்சிச்சொல்லாகவுங் கொள்ளலாம்; நாம் - பகுதி, பி - முறைப்பெயர் விகுதி: இனி, இது - பூர்ணனென்னும் வடசொல்லின் பொருள் கொண்டதென்றுங் கூறுவர். என - உவமவுருபு. வாடலில் கண்ணி - இரத்தினமாலையென்றுங் கொள்ளலாம். (எ)

இதுவும், மேற்கவியும் - ஒருதொடர்; இவ்விரண்டும் அவ்விருவருள் இளையவனியல்பை விளக்குவன.

அ.—(இ - ள்.) பூவை அம் புது மலர் புரையும் மேனியன் - அழகிய புதிய [அன்றலர்ந்த] காயாம்பூவை யொத்த [கருநிறமுடைய] உடம்பையுடையவன்; தா விரி தாமரை தொலைத்த கண்ணினன் - பரிசுத்தமாய் மலர்ந்த செந்தாமரைப்பூவை (த்தனக்கு ஒப்பாகாதென்று) ஒழித்த கண்களையுடையவன்; தீ விரி ஆம்பலின் சிவந்த வாயினன் - நெருப்பின்நிறமாய் மலர்ந்த செவ்வாம்பல்மலர்போலச் சிவந்த வாயையுடையவன்; மா விரி திரு மறு அணிந்த மார்பினன் - சிறப்புமிக்க அழகிய மறுவை அணிந்த மார்பையுடையவன்; (எ - று.)—இவற்றிற்கெல்லாம் எழுவாய்- வருங்கவியில் 'இளையநம்பி' என்பது.

திருமகளையும் ஸ்ரீவத்ஸமென்னும் மறுவையுந் திருமார்பிலுடைமையால், திருமறுமார்பனென்று திருமாலுக்கொருபெயர்; காயாமலர்நிறவனென்றும், புண்டரீகாக்ஷனென்றும் அக்கடவுளுக்குத் திருநாமங்களுண்டென அறிக. பூவை - முதல்வேற்றுமை. இந்தமரத்தின்பெயர், அதன்மலருக்குப் பொருளாகுபெயர். புரையும் - உவமவுருபு. மறு - பிறந்தபொழுதே உடம்பில் உடன்தோன்றும் நிறம்வேறுபட்டதோரடையாளம். மாவிரி - வெற்றித்திருமகள் [ஜயலக்ஷ்மி] விளங்கிவீற்றிருத்தற்கிடமானமார்புமாம்.

க.—(இ - ள்.) செம் கயல் - சிவந்த கயல்மீனும், வலம்புரி - சங்கமும், திகிரி - சக்கரமும், என்ற இவை - என்றுசொல்லப்பட்ட இவைகள், தங்கிய - (இரேகைகளாய்த்) தங்கப்பெற்ற, அங்கையன் - அகங்கையையுடையவன்; அடி தண் போதினன் - குளிர்ந்த தாமரைமலர்போன்ற பாதங்களையுடையவன்; மங்கலம் மழ களிறு அனைய செலவினன் - மங்களகரமான இளமையான ஆண்யானையின் நடையை யொத்த [கம்பீரமாய்அழகிய] நடையையுடையவன்: (யாரென்னில்), இங்கு முன் மொழிந்தவற்கு இளைய நம்பி - இங்கே கீழ்க்கூறப்பட்ட விசயனுக்கு இளையவனான திவிட்டகுமாரன்; (எ - று.)

கயல் - மீனின்பொதுப்பெயர். முதலடியிற்கூறிய மூன்றுங் கைகளில் இரேகைகளாக அமைதல் உத்தமபுருஷலக்ஷணமென்பது சாமுத்திரிகநூலார் கொள்கை. அகம் + கை = அங்கை; அகம்முனர்க் கைவர இடையனகெட்டன: [நன் - மெய் - கஎ.] இனி, அம்கையெனப்பிரித்தால், அழகியகையென்க. அடித் தண்போதினன் - தண்போதுஅடியினனென்க; உபமானம் முன்பின்னாக மாற்றிஉரைக்கப்பட்டது: பாதமாகிய குளிர்ந்த தாமரைமலரையுடையவனென உருவகமாக்கி உரைத்தல் உயர்ந்தோர்மரபன்று. எல்லாமலர்களுள்ளுந் தாமரைசிறத்தல்பற்றி, அடைமொழிகொடாமல் வாளா 'போது' எனப்பட்டது; "பூவெனப் படுவது பொறிவாழ் பூவே," "பூவிற்குத் தாமரையே," "பூவினுக் கருங்கலம் பொங்கு தாமரை" என்னும்மேற்கோள்களைக்காண்க. மழ - இளமையுணர்த்தும் உரிச்சொல்; "மழவுங் குழவு மிளமைப் பொருள" என்பதுதொல்காப்பியம். மழ களிறு - உரிச்சொற்புணர்ச்சியாதலின், வலிஇயல்பு; [நன் - மெய் - நஉ.] களிறு - யானையின் ஆண்மைப்பெயர்; "வேழக் குரித்தே விதந்துகளி றென்றல்" என்றார் தொல்காப்பியனார். களிறு - மதக்களிப்பையுடையதெனக் காரணப்பெயர்; களி - பகுதி, று - பெயர்விகுதி. செல்கை - தொழிற்பெயர். முன் - காலமுன். இளைய - இளமையென்னும் பண்படியாப் பிறந்த குறிப்புப்பெயரெச்சம். (௯)

௧௦.—(இ - ள்.) உலகு - தமது நாட்டிலுள்ள ஜனங்கள், திரு விளைத்து - செல்வம் மேல்மேல்வளரப்பெற்று, கண் மலர - கண்மலர்ச்சியுற்று மகிழ்ந்திருக்கவும், தெவ்வர்தம் - பகைவர்களுடைய, புரிவளை - மதிலேற்சூழப்பட்ட, நல் நகர் - சிறந்தபட்டணங்களிலுள்ள, செல்வம் - பொருள்களெல்லாம், புல்லென - நிலைகெடவும், வரி வளை தோளியர் மனத்துள் - கோடுகளையுடைய வளைகளை யணிந்த தோள்களையுடைய பெண்களது மனத்திலே, காதல் ஆம் எரி வளர்த்திடுவது - (தம்மிடத்துண்டாகிற) ஆசைநோயாகியதீயைச் சூழ்ந்துவளரச்செய்வதாகிய, ஓர் இளமை - ஒப்பற்றதொருஇளம்பருவத்தை, எய்தினார் - (அவ்விருமக்களும்) அடைந்தார்கள்.

இளமை - யௌவனம். "பகைமையுங் கேண்மையுங் கண்ணுரைக்குங் கண்ணின், வகைமை யுணர்வார்ப் பெறின்" என்னுந் திருக்குறளிற் கூறியபடி மனத்திலுள்ளமகிழ்ச்சியுந் துன்பமும் முறையே கண்களின்மலர்ச்சியாலும்மலர்ச்சியின்மையாலும் அறியப்படுமாதலின், மகிழ என்னும்பொருளில் 'கண்மலர' என்றார். இனி, கண் - உபசருக்கமெனினும் அமையும். உலகுகள் மலரவென்றும் பிரித்துஉரைக்கலாம். "தெவ்வுப்பகைமை" என்றதொல்காப்பியசூத்திரத்தால், தெவ் என்பது-பகைமையையுணர்த்துவதோருரிச்சொல்லாம்; அதனையுடையவர், தெவ்வர். புரிசையென்பது புரியெனக் கடைக்குறைவிகாரப்பட்டது. புல்லென - சிறுமைக்குறிப்பு. தோளி, இ - பெண்பால்விகுதி. மனம் - மநஸ்என்னும்வடசொல்திரிபு. 'காமநோயெரி' என்பது பழையபாடம்.. சேர்ந்தஇடத்துக்கு மிக்கவருத்தத்தை விளைத்தலால், காமம் நோயென்றும் நெருப்பென்றுங் கூறப்பட்டது. மலர, புல்லென என்னும்இரண்டுசெயவெனெச்சத்துக்கும் 'இளமையெய்தினார்' என்பது முடிக்குஞ்சொல். அன்பர் செல்வஞ்செழித்து வளரவும், பகைவர் செல்வங்குறைந்து வருந்தவும் இவர் இளமையெய்தின ரென்க. (௧௦)

௧௧.—(இ - ள்.) உவர் விளை - உப்புத்தன்மையைத் தருகிற, கடல் - கடலில்வளர்கிற, கொடி பவளம் - பவழக்கொடியை, ஓட்டிய - தமதுசெந்நிறத்துக்கு ஒப்பாகாதென்று துரத்திவிட்ட, துவர் இதழ் வாயவர் - செந்நிறத்தையுடைய அதரத்தையுடைய வாயையுடையவர்களும், துளங்கும் மேனியர் - விளங்குகின்ற உடம்பையுடையவர்களு மாகிய, அவர்கள் - அவ்விரண்டுகுமாரரும், தம் அருள்கொலோ - தமது அருளினாலோ, அனங்கன்

ஆய் மலர் கவர் கணை கடைக்கணித்து - மன்மதனது ஆராய்ந்தெடுத்த பூக்களாகிய வசீகரிக்கவல்ல அம்புகளின் தன்மையைத் தமதுகடைக் கண்களிலே பெற்று, உருவு காட்டினார் - தமது அழகியவடிவத்தை (ப்பல மகளிர்க்கும்) காண்பித்தார்கள்; (எ - று.)

தம்பிலுங்கீழ்ப்பட்ட மன்மதனம்பின் தன்மையைத்தாம் கண்ணிலடைதற்கும், நகரத்தில் எங்குமுலாவிச்சென்று அங்கங்குள்ளமகளிர் தமதழகைக்கண்டு ஆனந்திக்கும்படி எல்லோர்க்குந் தரிசனந்தருதற்கும், இவர்களது இயற்கையாகியஅருளே காரணமென உத்பிரேக்ஷித்தார். காமபாணத்தின் தன்மையைக் கடைக்கண்ணிலே பெறுதல்- தமது கடைக்கண்பார்வையால் மகளிரை வசப்படுத்தவல்லவராதல். ஒட்டிய - உவமவுருபாகவுமாம். இதழ் - உதடு. கொல் - வினா; ஓ - அசை. ஓ-வினாவாயின், கொல் - அசையெனக. சனகர்முதலிய முனிவர்நாலவர்க்கு யோகநிலையை உணர்த்துதல்நிமித்தம் தாஞ் சிறிதுபொழுது யோகஞ்செய்துநின்ற சிவபிரான்மீது பிரமனேவலால் மலரம்புகளையெய்து அவரதுதவத்தைக் கெடுக்கலுற்று அதனாற்சினந்த அவரது நெற்றிக்கண்ணின்நெருப்புக்கு இரையாகி அங்கம் வெந்ததனால், மன்மதனுக்கு அனங்கனென்று பெயர்; "இங்கண்மே வுஞ்சடைத் தேவன்மேல் மாரவேள், இங்குநின் றெய்யவும் எரிதரும் நுதல் விழிப், பொங்குகோ பஞ்சுடப் பூளைவீ யன்னதன், னங்கம்வெந் தன்று தொட்டனங்கனே யாயினான்" என்றார் கம்பரும். அநங்கன் - சரீரமில்லாதவன்; ந,அங்கம்,அன் எனப்பிரிக்க. கடைக்கணித்து-கடைக்கணென்னும் பெயர்ச்சொலடியாகப்பிறந்த இறந்தகாலவினையெச்சம். கண்ணின்கடை என்பது கடைக்கண்என முன்பின்னாகமாறிய ஆறாம்வேற்றுமைத்தொகை; இதனை இலக்கணப்போலி யென்பர். கடைக்கண் - கடாக்ஷவீக்ஷணம். உருவு - ரூபமென்னும் வடமொழிச் சிதைவு. காட்டினாரென்னுமுற்றில், காண்என்னுந் தன்வினைப்பகுதிமேல், டு - பிறவினைவிகுதி. கணை கடைக்கணித்து - கணைகளபோலக் கடைக்கண்களாற்பார்த்து என்னலாம். இனி, இப்பாட்டுக்கு, பவழத்தைவென்ற அதரத்தோடுகூடிய வாயையுடையவர்களும் விளங்குமுடம்பை யுடையவர்களுமாகிய அந்நாட்டுமகளிர், தமது மாயையினாலோ மன்மதனது மலர்க்கணையின்தன்மையைத் தமது கடைக்கண்பார்வையிற்பெற்று அழகியவடிவத்தைக்காட்டி விளங்கினார்கள் என்றும் ஒருஉரைகூறலாம்; இவ்வுரைக்கு, அவர்கள்தம் மருள்கொலோ எனப்பதம்பிரிக்க. (௧௧)

௧௨.—(இ - ள்.) 'கடல் ஒளி மணி வணன் - கடல்போலுமொளியையுடைய அழகிய கருநிறமுடைய திவிட்டன், கனவில் வந்து - (எங்கள்)கனவிலே வந்து, எமது உடல் அகம் வெறுவிது ஆய் - எம்முடைய உடம்பினிடம் வெறுமையுடையதாம்படி, உள்ளம் வவ்வினான் - எங்கள்மனத்தைக் கவர்ந்துசென்றான்; விடல் இலன் - (அதனை மீண்டும் எங்கள்பால்)விடுகின்றானில்லை; (இங்ஙனம் மனத்தையே விடாதவன்), எம் உயிர் விடுக்கும் கொல்- எமதுஉயிரை எங்களிடம் விடுவானோ?' என - என்று கருதியுங்கூறியும், மடவரலவர் குழாம் - மடமைக்குணத்தின் வருகையையுடைய அந்நகரத்து மகளிர்கூட்டம், மயக்கம் உற்றது - காமமயக்கத்தை யடைந்தது; (எ-று.)

இங்கே, இளையவனாகியதிவிட்டனை மூத்தவனாகிய விசயனுக்கு முற்கூறினது,கதாநாயகனாதலாலும்,சிறந்தவனாதலாலு மென்க. மணி வணன்- நீலமணிபோன்ற நிறமுடையவ னென்றுமாம். கனவு - கனா ஈறுகுறுகி உகரமேற்றது. வெறுவிதாய்என்பதில், ஆய் - ஆகவென்னும் எதிர்காலச் செயவெனெச்சத்தின் திரிபு. வெறுவிதாய் - சூனியமாகும்படி யென்றவாறு. வெறுமை - பொருளொன்றுமின்மை; இப்பண்பினடியாக வெறுவிதென

ஒன்றன்பாற்குறிப்பு வினையாலணையும்பெய ருண்டாயிற்று:இடையிலே, இ-சாரியை. உள்ளம் - உள்ளேயுள்ளஉறுப்பு. மனமும்உயிரும் ஒன்றன்றி வேறாதலின் 'உள்ளம்வவ்வினன்விடலிலன்' என்றும், 'உயிர்விடுக்குங்கொல்' என்றும் தனித்தனிகூறியது. மடமையாவது-"கொளுத்தக்கொண்டு கொண்டதுவிடாமை; எல்லாமறிந்து மொன்றுமறியாதுபோலிருக்குந் தன்மையு மாம். வரல், மயக்கம்-தொழிற்பெயர்கள்; இவற்றில், அல், அம்-விகுதிகள். இது, கனவிற்காட்சி கூறிற்று. எப்பொழுதும் ஆசையோடு நினைக்கப்பட்ட பொருள் கனவிற்காணப்படுதல், இயல்பு. கொல்- ஐயவினா விடைச்சொல்.

கந.—(இ - ள்.) 'வார் வளை வண்ணன் - கடல்நீரில்வாழ்கிற சங்கம் போன்ற வெண்ணிறத்தையுடைய விசயன், எம் மனத்து உளான் - எமது மனத்தினுள்ளே எப்பொழுது மிருக்கின்றான்; (ஆதலால்), பிறர் - அயலாரது, ஏர் வளர் நெடு கணுக்கு - அழகுமிக்க நீண்ட கண்களுக்கு, இலக்கம் அல்லன் - இலக்காகமாட்டான்; ஆல் - ஆதலால், கார் வளர் கூந்தலார் இவர்கள் காதலை - மேகம்போலக் கருநிறமாய் வளர்ந்த கூந்தலையுடைய வராகிய இந்நகரத்துப்பிறமகளிரது காமநோயை, வளர்த்தவர் யார் கொல்-வளரச்செய்திட்டவர் (இவனையன்றி) வேறு யாரோ?' என்பவரும் - என்று தனித்தனி கருதிக் கூறுபவர்களும், ஆயினார்- ஆனார்கள், (அந்நகரத்துமாதர்கள்); (எ - று.)

இங்ஙனம், மனத்தினுள்ளபொருள் வெளியிற்புலப்படா தெனக் கூறியது-தமது இயல்பாயுள்ள பேதைமையாலும், காமப்பித்தினாலு மென்க. வார் - நீருக்கு, வடசொல். இனி, வார் வளை - நீண்டசங்கமென்றுமாம். எம்-இயற்கைத்தனித்தன்மைப்பன்மை; ஒவ்வொருவருந் தம்மைத்தாம்நினைக்கும்பொழுது பன்மையாகவே கருதுத லியல்பு. பிறர், பிற-இடைச்சொல், பகுதி. இலக்கம் - லக்ஷ்யமென்னும் வடசொற் றிரிபு; எதிர்ப்படும்பொருளென்று பொருள். ஆல் - ஆதலால் என்பதன் தொகுத்தல்விகாரம். 'கார் வளர் கொம்பனை ரிவர்கள் காமநோய்' என்பது, இயற்கையான பாடம்; கார் வளர் கொம்பு அனார்-மேகம் தன்மீதுவளரப்பெற்ற பூங்கொம்புபோன்றவர் நீண்டகூந்தலையுடையஇம்மாத ரென்க. யார் - வினாவடியாப்பிறந்த உயர்திணைமுப்பாற்கும்பொதுவான குறிப்புமுற்று. 'என்பவரும்' என்றதில், உம்மை - கீழ்க்கவியிற்கூறியதை நோக்கியதனால், இறந்ததுதழுவிய எச்சப்பொருளது. (கந)

கச.—(இ - ள்.) கண் நிலாம் - யாவர்கண்களிலும் உலாவி விளங்குகின்ற, கவின் ஒளி - அழகிய உடம்பினொளியையுடைய, காளைமார் திறத்து - இளம்பிராயமுடைய இக்குமாரர்கள்விஷயத்திலே, உள் நிலா எழுதரு - மனத்திலே அடங்கிநிற்காமல் மேல்மேல்வளர்கிற, காதல் - காமநோயாகிய, ஊழ் எரி - ஊழித்தீ, வெள் நிலா சுடர் சுட - வெண்மையான சந்திரகாந்தியினொளி சுடுதலால், விரிந்தும் - மேன்மேல் மிகப்பெற்றும், நாண் விடா - (தமது இயற்கையான) நாணத்தை நீங்காத, பெண்ணில் - பெண்தன்மையைக்காட்டிலும், ஆம் - மேற்பட்டதாகிய, பெரியது-சிறப்புடையதொரு, உயிர்—, பிறிது இல்லை-வேறு இல்லை; (எ - று.)—ஈற்றேகாரம்-தேற்றம்.

நிலாம் - நிலாவும். காளைமார் - இளவெருது போன்றவர்; இது-குமாரர்க்கு, நடை வலிமை காம்பீரியங்களா லுவமை. இரண்டாமடியில், நிலா-நில்லாமல் என ஈறுகெட்ட எதிர்மறை வினையெச்சம். செய்யா என்னும் வாய்பாட்டு உடன்பாட்டு இறந்தகாலவினையெச்சமாகக் கொண்டு, மனத்திலே நிலைநின்ற என்று முரைக்கலாம். எழுதரு என்றதில், தா - துணைவினை, ஊழியென்பது ஊழ் என ஈறுவிகாரப்பட்டது. 'காமவூழெரி' என்பது, ஏட்

டின் பாடம். ஒருவரொடொருவர் கூடியுள்ள தலைவன்தலைவியர்க்கு மிகுந்தமகிழ்ச்சியைச் செய்யுமியல்பினதான சந்திரகாந்தி, அங்ஙனங்கூடாது தனித்துநின்ற அவர்க்கு அவ்வேட்கைநோயை வளர்த்து வருத்தலால், 'வெண்ணிலாச்சுடர்சுடவிரிந்து' என்றது. 'விரிந்தும்' என்ற உம்மை - உயர்வுசிறப்பு; அது, காமத்தீயினது பொறுத்தற்கரியதன்மையை விளக்கும். ஊழி - யுகாந்தகாலம். நாண் - நாணுதல்; முதனிலைத்தொழிற்பெயர். இதனால் "காமுற்ற, பெண்ணுக் கணிகல நாணுடைமை" என்றபடி பெண்களுக்கு முக்கியமாச்சிறந்த நாணமென்னும் நற்குணத்தை அவர்கள்விடாத சிறப்புக் கூறப்பட்டது. எவர்க்கும் உயிரினும் மேம்பட்டதொரு பொருள் இன்றாதலால், 'இதற்குமேற்பட்டதோருயிருமில்லை' எனச்சிறப்பித்துக் கூறினார். பிறிது என்னும் ஒன்றன்பாற் குறிப்பு வினையாலணையும்பெயரில், பிறவென்னுமிடைச்சொல்-பகுதி, ஈறுதிரிந்தது. உலகத்திற் சாதாரணமாகவுள்ள தீயினும் மிக்ககொடுமைபுரிதலால், காமத்தை ஊழித்தீயென வேண்டிற்று. வெண்ணிலா, வெண்மை - இயற்கையடைமொழி. (கச)

கரு.—(இ - ள்.) திரு வளர் செல்வர் மேல் - அழகுவளர்ந்த எல்லாச்செல்வமுமுடைய அக்குமாரர்களின்மேல், சென்ற-ஓடிப்போன, சிந்தை - மனத்தில் உண்டாகிற, நோய் - காமநோயை, ஒருவரின் ஒருவர் மிக்கு உடையர் - (அந்நகரத்து மகளிர்பலரும்) ஒருத்தரினும் ஒருத்தர் அதிகமாகவுடையவர், ஆதலால் - ஆகையினால், (இக்குமாரர்கள்), உரு வளர் அணங்கு அனார் உள்ளம் காய்வது - அழகுமிகுந்த தெய்வப்பெண்ணையொத்தவரான மகளிரது மனத்தை யெரிப்பதான, ஓர் எரி - ஒப்பற்றதொரு காமத்தீயை, வளர்த்திடுவது - வளரச்செய்வதான, ஓர் இளமை - ஒப்பற்றதொரு இளமைப்பருவத்தை, எய்தினார் - அடைந்தார்கள்; (எ - று.)

'உருவளர்கொம்பனார்' என்ற பழமையானபாடத்திற்கு, அழகுமிக்க பூங்கொம்புபோன்றவரென்க. ஒருவரின், * இன் - ஐந்தனுருபு, எல்லைப்பொருளது. (கரு)

கசு.—(இ-ள்.) மற்று - பின்பு, ஓர் நாள் - ஒருதினத்தில், அமர் இகை கொடி கொள் - போரில் (பகைவரை அச்சுறுத்தி) வருத்துந்தன்மையையுடைய துவசத்தை மேலேகொண்ட, மா மணி - சிறந்த இரத்தினத்தைப் பதிக்கப்பெற்றுள்ள மாளிகையிலே, சுற்று வான் சுடர் ஒளி தழுவி - சுற்றிலும்பரவிநின்ற சிறந்த கிரணங்களின் ஒளியோடு பொருந்தி, சூழ் மலர் மூற்றி - சுற்றிலும் பூமாலையால் வளைக்கப்பட்டு, வண்டு இனம் விடா - (அதில் மொய்க்கும்) வண்டுகளின்கூட்டம் நீங்காத, முடி - கிரீடத்தை, கொள் - கொண்ட, சென்னி - சிரசையுடைய, அ கொற்றவன் - வெற்றியையுடைய அந்தப்பயாபதியரசன், இளையவர் குழைய - தனது மனைவிமாரான இளமங்கையர் (காமவின்பநுகர்ச்சியால்) மெலிவையடையும்படி, வைகினன் - (அவர்களோடு) கூடியிருந்தான்; (எ - று.)

மற்று என்னுமிடைச்சொல், இங்கே பின் என்னும்பொருளது. இகை - முதனிலைத்தொழிற்பெயர். இகைக்கொடி - இரண்டனுருபும்பயனுந் தொக்க தொகை. மாமணி - பெரிய மாளிகைக்கு அடையடுத்த சினையாகுபெயரென்றாவது, பண்புத்தொகையன்மொழியென்றாவது கொள்க; இங்ஙனங் கொள்ளாவிட்டால் பொருளொன்றும் பொருந்தாமை காண்க. மணிமாளிகையில் வைகினன் என இயையும். மலர் - பூவினாலாகிய நெற்றிப்பட்டத்துக்குக் கருவியாகுபெயர். திருப்பாற்கடலில் மூதேவிக்குப்பின்பு பிறந்த இலக்குமிக்கு இளையவளென்று ஒருபெயராதலால், இளையவரென்பது அவள்போலழகிய மகளிரை யுணர்த்தும். வைகினன், வைகு - பகுதி. (கசு)

கஎ.—(இ - ள்.) மஞ்சு உடை - (உயர்ச்சியால்) மேகங்களைச் சிதறச் செய்கிற, மணி சுரும் - இரத்தினங்கள் விளங்கப்பெற்ற, மாலை - (அழகுக்காகவும் பரிமளத்துக்காகவுஞ் சுற்றிலும்) பூமாலைகள் தொங்கவிடப்பட்டுள்ள, மண்டபத்து - ஒருமண்டபத்திலே, அகில் புகை அளைந்து - அகிற்புகை யூட்டப்பெற்று, தேன் அளாய் - (மேலே பரப்பப்பட்ட பூக்களின்) தேன் பொருந்தி, பஞ்சு உடை - பஞ்சை உள்ளே உடைய, அம் சுடர் - அழகிய ஒளியையுடைய, அமளிமேல்-ஒருமெத்தையின்மேல், பள்ளி ஏற்பவன்-நித்திரைசெய்தலைக்கொள்பவனான அவ்வரசன், (அப்பொழுது),செம் சுடர் இரிவது ஓர் திறத்தன் ஆயினான் - செந்நிறமான ஒளியையுடைய சூரியனுந்(தன்னொளிக்குமுன்) தோற்கும்படியானதொரு தன்மையுடையவனானான்.

இதனால், அரசன் உறங்குகையிலும் தான் உலகங்காக்கின்ற அவனது தெய்வவொளியின் தன்மை கூறப்பட்டது; "உறங்கு மாயினு மன்னவன் றன்னொளி, கறங்கு தெண்டிரை வையகங் காக்குமால்" என்றார் சிந்தாமணியிலும். மஞ்சுஉடை - அழகுடைய என்றுமாம். அஞ்சுடர் -அமளிக்கு அடைமொழி. ஏற்பவன், ஏல்-பகுதி. அளாய் என்னும் இறந்தகாலவினையெச்சம், 'உடை' என்னுங் குறிப்புவினைப்பெயரெச்சங் கொண்டது. செஞ்சுடர்- சூரியனுக்குஅடையடுத்தசினையாகுபெயரென்றுவது, பண்புத்தொகையன்மொழியென்றுவது அறிக. (கஎ)

கஅ.—(இ - ள்.) மன்னவன் - (அங்ஙனந் துயில்கொண்ட) பயாபதியரசன், துயில் விடுத்து அருள - தூக்கத்தையொழித்தருளுமளவும், பொன் துன்னிய உடையினர் - அழகியதாய் நெருங்கின உடுப்புக்களையுடையவர்களும், துதைந்த கச்சையர் - நெருங்கின கச்சையையுடையவர்களும், பின்னிய ஞாணினர் - பின்னப்பட்ட அரைஞாணையுடையவர்களும், பிடித்த வில்லினர் - கையிலேந்திய வில்லையுடையவர்களும் ஆகிய, மைந்தர் - சிலவீரர்கள், அன்னவன் அடி முதல் காவல் நண்ணினார் - அவ்வரசனது பாதங்களின் முக்கியமான காத்தற்றொழிலைப் பொருந்தினார்கள்; (எ - று.)

'அன்னவனடிமுதல்' என்றபாடத்துக்கு இவ்வுரை. சிறந்தவீரர் சிலர், அரசனுறங்குகையில் திருமேனிக்காவல் செய்துநின்றார்கள் என்பதாம். துயில் - தூங்குதல்; முதனிலைத்தொழிற்பெயர். அரசனது தெய்வத்தன்மையாகிய சிறப்புத் தோன்ற 'விடுத்தருள'என்றும், 'அடிமுதற்காவல்' என்றுங்கூறினார். பொன் துன்னிய - பொன்னிறமாயமைந்த என்றும், பொன்னினாற் சித்திரவேலை செய்யப்பட்ட என்றுங் கொள்ளலாம். உடுக்கப்படுவது, உடை; ஐ - செயப்படுபொருள்விகுதி. பொன் துன்னிய உடை - உடுப்பைப் போல உடம்பைமறைத்தமைந்த பொற்கவசமென்றுங் கொள்ளலாம். கச்சை - இடைக்கட்டு: என்றது-இங்கே, சல்லடமென வழங்குங் குறுங்காற் சட்டையை; இது, கஞ்சுகமென்னும் வடமொழித் திரிபு: இது, கச்சு என்றும் விகாரப்பட்டு வழங்கும்; கச்சு என்பதன்மேல், ஐ - சாரியையுமாம்: கக்ஷ்யா என்னும் வடமொழி கச்சையெனத் திரிந்ததெனினும் ஒக்கும். ஞாண் - நாண் என்பதன் முதற்போலி. காவல் - தொழிற்பெயர், அல் - விகுதி. மைந்து - பலபராக்கிரமங்கள்; அவற்றையுடையவர், மைந்தர். 'அன்னவர்" என்ற பாடத்துக்கு, அத்தன்மையுடையவரான எனச் சிறப்புப் பொருள்தோன்ற உரைத்து மைந்தர்க்கு அடைமொழியாக்குக; இனி, அன்னவர் மைந்தர் - அந்தக்குமாரர் இருவரும், காத்தல் பொருந்தினார் என்று உரைப்பாரு முளர். (கஅ)

கக.—(இ - ள்.) தங்கிய - (தம்மிடத்திலே இயற்கையாகப்)பொருந்தின, தவழ் - பரவுந்தன்மையுள்ள, ஒளி -ஒளிகள், தடாவி - சுற்றுப்பக்கங்களிற் படர்ந்துசென்று, வில இட - ஒளியைச்செய்யும்படி, மங்கலம் உழை

கலம்-(கண்ணாடி,விளக்கு, சாமரை, கலசம், நிறைகுடம்முதலிய) மங்கலப் பொருள்களைத் தம்மிடத்திலேயுடைய பாத்திரங்கள், சேர்ந்தன - பக்கங்களிற் பொருந்தினவாக, அங்கு - அவ்விடத்திலே[அப்பொழுது], அவன்- அப் பயாபதியரசன், கண் கழூஉ அருளி செய்தனன் - (துயிலெழுந்து) கண்களை நீராற்கழுவுதலைச் செய்தருளினான்; (அப்பொழுது), பங்கயம் முகத்தர் - செந்தாமரைமலர்போன்ற முகத்தையுடைய மகளிர்பலர், பல்லாண்டு கூறினார் - வாழ்த்துப்பாடல்களைப் பாடினார்கள்; (எ - று.)

அரசன் துயிலொழியும்போது அவன் கண்ணெதிரிலே காணும்படி அவன் தூங்குமிடத்தைச்சுற்றிலும் பசுக்கள் வாத்தியங்கள் முதலிய மங்கலப்பொருள்கள்பலவற்றையும் அமைத்துவைக்கும் மரபை இக்கவியின் முன்னிரண்டடிகளாற் கூறினார். சாமரம், விளக்கு, பொற்குடம், இணைக்கயல், கண்ணாடி, அங்குசம், கொடி, முரசம் என்னுமிவை அஷ்டமங்கலப் பொருள்களெனப்படும். சுபத்தையுணர்த்தும் மங்கலமென்னும் வடசொல், அதற்குக்காரணமான பொருள்களுக்குக் காரியவாகுபெயர்; 'இனி, மங்கலவுழைக்கல மென்பதற்கு-உழைமுதலியஏழுவகைச்சுரங்களமைந்த மங்கலகரமான யாழ் முதலிய இசைக்கருவிகள்' அரசனருகிற்சேர்ந்தன வென்று உரைப்பினு மமையும். நடத்து என்பது நடாத்து என விகாரப்படுதல்போல, தடவிஎன்பது தடாவியென நீண்டது. சேர்ந்தன-வினைமுற்று, வினையெச்சப்பொருள்பட்டது. கழுவு என்னும் முதனிலைத்தொழிற்பெயர்ச்சொல், கழூஉ என விகாரப்பட்டு அளபெடுத்தது; இது,சொல்லிசையளபெடையின்பாற்படும்: மாத்திரை மூன்று. அருளிச்செய்தனன் - செய்தருளினன் என விகுதிபிரித்துக் கூட்டப்பட்டது; அருளுதல் என்னுந் துணைவினையை உடன்கொடுத்தது,அரசனது சிறப்புத் தோன்ற:எழுந்தருளினான்,உண்டருளினான் என இங்ஙனம் பிறவாய்பாடுகளும் உபசாரவகையாற் பொருந்தும். பல்லாண்டு-இன்னும் பலவருஷகாலம் வாழவேண்டுமென்று பாடும் பாட்டு.பல + ஆண்டு =பல்லாண்டு; பலவென்பது பிறவர அகரங்கெட்டது: [நன்-உயிர்-உ௦]. ஆண்டு என்னுங் காலப்பெயர், இங்கே இலக்கணையாய்ப் பாடலை யுணர்த்திற்று. துயில் தெளியக் கண்கழுவுதல், வழக்கு. ஆண்டு - யாண்டுஎன்பதன் மரூஉ; ஆனை,ஆடு, ஆளி, ஆமை, ஆக்கை, ஆர் என்பனவு மிவ்வாறே. கழூஉச்செய்தனன் - கழுவினான்; இங்கே "பண்கெழு மெல்விரலாற் பணைத்தோளி தன், கண்கழூஉச்செய்து" என்ற சிந்தாமணியையும், 'கழூஉச்செய்து' - "நல்ல, மரூஉச்செய்து" [நாலடியார் - அறிவுடைமை - சு] என்பது போல நின்றது' என்ற அதன்உரையையும் உணர்க: இதனால், மரூஉச்செய்து-மருவி, கழூஉச்செய்து-கழுவி எனஇவை ஒருசொல் தன்மையன வென்க.

உ௦ —(இ - ள்.) அந்தணர் - பிராமணர்கள், ஆசு இடை கூறி - ஆசீர்வாதங்களை இடையிடையே சொல்லி, ஆய் மலர் பை துணர் - ஆராய்ந்தெடுத்துச் சூடத்தக்க சிறந்த பூக்களையுடைய பசிய பூங்கொத்துக்களை, நெடு முடி பயில - (அவ்வரசனது) நீண்டகிரீடத்தையணிந்த சிரசின்மீது பொருந்தும்படி, ஏற்றினார் - இட்டார்கள்; இந்திரன் அனையவன் - தேவேந்திரனைப்போன்ற அவ்வரசன், தேவர்மாட்டு - பூதேவர்களாகிய அப்பிராமணரிடத்து, செம் துணர் நறு மலர் தெளித்து - அழகிய பூங்கொத்துக்களி லுள்ள பரிமளமுடைய பூக்களைத் தூவி, இறைஞ்சி- (அவர்களை) வணங்கி, ஏத்தினான் - துதித்தான்; (எ - று.)

இதனால், அரசன் துயிலொழிந்து அமருகையில் பிராமணர்கள் பலர் வந்து ஆசீர்வாதங்கள்பல செய்து அவன்முடியிற் பூக்களைச் சொரிதலும், பூமிக்குத்தேவராகிய அவ்வந்தணருடைய திருவடிகளிலே அரசன் அன்புடன் மலர்களையிட்டு அருச்சித்துத் தொழுது வணங்கித் துதித்து உபசரி

த்தலுங் கூறப்பட்டன. "ஆவ தற்கும் மழிவதற் கும்மவா, வுவ கிற்கும் விதியுமென் றுலினி, யாவதெப்பொரு ளிம்மையு மம்மையுந், தேவ ரைப்பரவுந்துணை சீர்த்ததே" என்னுங் கம்பராமாயணத்தாலும், பூசுராகிய பிராமணராதுசிறப்பையும்,அவர்களிடஞ்செய்யும் பக்தியின் பயனையும் அறிக. அந்தணர் என்பதற்கு-அழகிய தண்மையான அருளை யுடையரென்று பொருள்: அம் தண் அர் எனப்பிரிக்க; இனி, அந்தத்தை அணவுவார் அந்தணர் என்று வேதாந்தத்தையே பொருளென்று மேற்கொண்டு பார்ப்பவரென்றுங் கொள்ளலாம்: இவ்வுரைக்கு, அந்த அணவு அர் எனப் பிரிக்க. இச்சொல் பிறர்க்குப்பெயராகாமல் பிராமணர்க்கே பெயராவது, காரணவிடுகுறிப்பெயர்; இதனை வடநூலார் யோகரூடமென்பர். ஆசீஸ் என்னும் வடமொழித் திரிபாகிய ஆசி என்பது ஆசு என ஈறு திரிந்தது; இனி, இரண்டாம்வேற்றுமைவிரியாகிய ஆசிஷமென்னும் வடசொல், ஷகரம் டகரமாய் ஈறுதிரிந்து ஆசிடையென நின்றதென்றுங் கொள்ளலாம்: இனி, ஆசிஇடை என்பது ஆசிடையெனத் தொக்கதாக்கி ஆசியிடுதலெனவுரைக்கினும் பொருந்தும். தேவர்என்பதற்கு - விண்ணுலகத்துள்ளவரென்றும், விளங்குபவரென்றும் பொருள். 'தேவர்மாட்டு இந்திரனனையவன்' என்றதனால், பிருகஸ்பதிமுதலிய சிறப்புடைத்தேவர்களிடம் இந்திரன்போல அந்தணர்களிடம் இவ்வரசன் அடிமைபூண்டு ஒழுகினானென்க. இச்செய்யுளில் அரசனும் முனிவரும் ஒருவர்க்கொருவர் சொல்லோடு மலரைக் கொடுத்து வாங்கினதாகக் கூறினமையின், பரிவர்த்தனையென்னு மலங்காரம்; இதனைத் தமிழ்நூலார் மாற்றுநிலையணி யென்பர். பைந்துணர் என்பதில், பசுமை - தேனின் குளிர்ச்சியையும், வாடாமையையும், புதுமையையுங் குறிக்கும். தேவர்மாட்டு, மாட்டு - ஏழனுருபு. (௨0)

௨௧.—(இ - ள்.) விரை அமர் கோதையர் - வாசனைபொருந்திய வெற்றிப்பூமாலையை யுடையவர்களும், வேணு கோலினர் - மூங்கிலாகிய தண்டத்தைக் கையிலுடையவர்களு மாகிய காவற்காரர்கள், உரை அமர் காவல் பூண் கடையினூடு போய் - புகழ் பொருந்தின காத்தற்றொழிலைத் தாம்தாம்செய்தற்குரிய வாயிலிடங்களிலே சென்று நின்று, முரசு அமர் முழங்கு ஒலி-பேரிகைகளிற்பொருந்தின ஆரவாரிக்கின்ற ஓசையையுடைய, மூரி தானையன் - வலிமையையுடைய சேனையையுடைய அவ்வரசன், அரசு அவை மண்டபம் அடைவது - இராஜசபாமண்டபத்தை அடைதலை, எண்ணினார் - கருதினார்கள்; (எ - று.)

வேணு - வடசொல். காவலர் யாவரும் அவ்வவ்விடத்திலிருந்து வழக்கப்படி அரசன் கொலுமண்டபத்துக்கு வருவதை எண்ணி எதிர்பார்த்து நின்றார்களென்பதாம். போய் எண்ணினார் என்க. (௨௧)

௨௨.—(இ - ள்.)' பொன் அவிர் திருஅடி - பொன்போலருமையாகவிளங்கிறஅரசனதுசீர்பாதங்கள், போற்றிபோற்றி - வாழ்வனவாகவாழ்வனவாக', என்று - என்றுகூறி, அன்னம் மெல் நடையவர் - அன்னப்பறவையின் நடைபோன்ற மென்மையான நடையினையுடைய மகளிர்பலர், பரவ - வாழ்த்தவும், ஆய் துகில் கன்னியர் - ஆராய்ந்துஎடுத்துஉடுத்தசிறந்த பட்டுச்சேலையையுடைய இளம்பெண்கள், கவரி கால் எறிய - சாமரங்களைக் காற்றுண்டாக வீசவும், காவலன் - அரசன், முன்னிய நெடு கடை முற்றம் - (அங்ஙனம் யாவராலுந் தன்வருகையை) எண்ணி எதிர்பார்த்திருக்கப்பட்ட நீண்ட முன்னிடவாயிலை, முன்னினான் - சென்றான்; (எ - று.)

திருவடியைப்போற்றினது, அரசனிடத்துள்ள பக்திமிகுதியால். பொன் என்பதைக் கருவியாகுபெயராகக்கொண்டு, பொன்னாலமைந்த கழலென்னும் அணி பொருந்தின திருவடி யென்று முரைக்கலாம். வாழிய வென்

னும் வியங்கோள்வினைமுற்று, ஈற்றுயிர்மெய் கெட்டு வாழியென நிற்றல் போல, போற்றிய என்னும் வியங்கோள் போற்றி எனநின்றது; இனி, இதனை இகரவீற்றுவியங்கோளாகவுங் கொள்ளலாம்: சிந்தாமணியில், 'காட்டி-இகரவீற்று வியங்கோள்'என்றார் நச்சினார்க்கினியர். 'போற்றிபோற்றி'யென்ற அடுக்கு,அன்புபற்றியது. நடைக்கு மென்மை - கண்ணுக்கினிமை. மென்னடை-மந்தகதியுமாம். அன்னம் என் நடை யெனப்பிரித்து,அன்னமென்று உவமைகூறப்படும் நடை யென்றுங் கொள்ளலாம். கன்னியர்-கலியாணமாகாத இளம்பெண்கள். கன்னி - கந்யா என்னும வடமொழித் திரிபு. ஆய் துகிற் கன்னியர் - சாமர கன்னிகைகள். கவரி - சமரீ என்னும் வடமொழிச் சிதைவு; இவ் வொருவகைப் பெண்மானின் பெயர், அதன் வால்மயிரினாற் செய்யப்பட்டதோர் இராசசின்னத்துக்கு இருமடியாகுபெயர். காவலன் - காத்தற்றொழிலில் வல்லவன்; கா வலன் எனப் பிரிக்க: அன்றி, காத்தற்றொழிலுடையனென்றுங் கொள்ளலாம்; காவல் அன் எனப் பிரியும். முன்னிய - நினைத்த; முன் என்னும் வினைப்பகுதியடியாகப் பிறந்த இறந்தகாலவினையெச்சம். முன்னினான் - முற்பட்டான். பரவ, எறிய என்னும் வினையெச்சங்களில் எண்ணும்மை தொக்கது, வினைச்செவ்வெண். 'எறிப்ப' என்றும் பாடம்.

உங.—(இ - ள்.) மஞ்சு இவர் - (உயர்ச்சியால்) மேகமண்டலத்தை அளாவிய, வளம் நகா - எல்லாவளங்களையுமுடைய அப்பட்டணத்தை, காக்கும் - அரசாளுகிற, வார் கழல் - நீண்ட வீரக்கழலையும், நஞ்சு இவர் வேல் - (பகைவர்க்கு) விஷத்தையொத்த வேலாயுதத்தையு முடைய, நரபதியை - மனிதர்களுக்குத்தலைவனான அவ்வாசனை, ஆ யிடை - அவ்விடத்திலே [கொடுங்கைடைமுற்றத்திலே], வெம் சுடர் வாளினர் - (பகைவர்க்கு) ப்பயங்கரமான ஒளியையுடைய வாளாயுதத்தையுடையவர்களும், விசித்த கச்சையர் - இறுக்கிக்கட்டின இடைக்கட்டையுடையவர்களுமாகிய, கஞ்சுகியவர்கள் - காவற்காரர்கள், மெய் காவல் ஓம்பினார் - திருமேனிக்காவல் செய்து உடன்சென்றார்கள்; (எ - று.)

கழல்-வீரர்காலணி; "வீரத்தின் வீக்கிய, கழலே யாடவர் காண்மிசையணிவடம்" என்பதனானு மறிக. நஞ்சிவர்,இவர்-உவமவுருபு.நஞ்சு இவர் வேல்-நஞ்சின்தன்மையை விரும்பிக்கொண்ட வேல் என்றுங் கொள்ளலாம். பகைவரைத் தவறுதலின்றிக் கொல்லுதலின்,'நஞ்சிவர்வேல்' எனறார். நரபதி - தற்சமவடமொழி. அ + இடை—ஆயிடை;சீண்டசுட்டின்முன் யகரந் தோன்றிற்று; [நன்- உயிர் - கங.] சிந்தாமணியில் "வெம்புஞ்சுடர்" என்பதற்குப்போல, இங்கே, வெஞ்சுடரென்பதற்கு - எல்லாரும் விரும்புஞ் சுடரென இளஞாயிறென்றுரைத்து, வெஞ்சுடர் வாளினர் - இளஞ்சூரியன்போல விளங்கும் வாட்படை யுடையாரென்றுமாம். கஞ்சுகியென்னும்வடசொல்லுக்கு - கவசமுடையவனென்று பொருள்; இங்கே, கஞ்சுகமென்றது - பேருடையையாகவுமாம்: அது, தமிழில் குப்பாயமெனப்படும். இனி, கஞ்சுகிஎன்பதற்கு-(அரசனுக்குக்) கவசம்போல உடற்காவல்செய்பவ னென்றும் உரைப்பர். நிலையில்லாமையாற் பொய்யாகிய உடலை மெய்யென்பது, மங்கலவழக்கு. ஓம்புதல் - கருத்தொடு காத்தல். நரபதியை யோம்பினா ரென முடிக்க. ஆயிடை - அப்பொழுது என்றுமாம். இடத்தையுணர்த்துஞ் சொற்களெல்லாம்,காலப்பொருளையுங் குறிக்கும். (உங)

உச.—(இ - ள்.) வாசம் நீர் தெளித்து - வாசனையையுடைய பனிநீர்முதலியவற்றைக் கீழேதெளித்து, அலர் பாப்பி - பூக்களைக் கீழே இடைவிடாதுதூவி, வானகம் ஏசு உளின் இருக்கைய - தேவலோகத்தினிடத்தையும் இகழும்படியான [மிகஅழகிய] உள்ளிடத்தையுடையனவும், இலங்கு சென்னிய - விளங்குகிற முடியையுடையனவுமா யுள்ள, நூசு தேன் கெடு

கடை மூன்றும் - மொய்க்கின்ற வண்டுகளையுடைய நீண்ட மூன்றுவாயில்களிலும், போய் - சென்று கடந்து, புறத்து -(அவற்றிற்கு) வெளியேயுள்ள, ஓசை நீள் மண்டபம்அது - புகழ்மிகுந்ததொரு கொலுமண்டபத்தினிடத்தை, உவந்து எய்தினன் - விரும்பியடைந்தான்; (எ - று.)

இருக்கைய, சென்னிய - பலவின்பாற் குறிப்பு வினையாலணையும்பெயர்கள். வாச நீர் தெளித்தல் - நறுமணமுண்டாதற்கும் புழுதியெழாமைக்கும், அலர்பரப்புதல் - அரசனது அடியின்மென்மைக்கு ஏற்ற உபசாரத்திற்கும், வாசனைக்கும் என்க. பரப்பியென்னும் வினையெச்சம், ஏசு என்னும் வினைப்பகுதியையாவது,இருக்கையஎன்னும் வினையாலணையும்பெயரில் தோன்றுகிற உடைய என்னும் வினையையாவது கொள்ளும். வானகம் ஏசு உளின் இருக்கைய - தேவலோகமுமிகழ்ப்படும்படி உயர்ந்துள்ள உள்ளிடத்தையுடையன என்றும் உரைக்கலாம். இருக்கை என்னுங் கைவிகுதி பெற்ற தொழிற்பெயர், ஆகுபெயராய் இருப்பிடத்தைக் குறிக்கும். 'இலங்கு சென்னி' என்றது, மேலுள்ள கோபுரசிகரத்தை. அலர் பரப்பியுள்ளதனால் வண்டு மொய்ப்பனவாயின. கடை மூன்று - தலைக்கடைவாயில், இடைக்கடைவாயில், புறக்கடைவாயில் எனப்படும். ஓசை நீள் மண்டபம் - (அங்குள்ள மந்திரிமார்முதலியோரின் கூட்டத்தால்) ஓசை மிகுந்த மண்டபம் என்றுமாம்.இனி, புறத்து ஓசை நீள் மண்டபம் எனஎடுத்து,வெளியிலே (சூழ்ந்துநிற்குஞ்சனங்களின்) ஓசை மிக்க [உள்ளிடத்திலே ஓசையின்றி ஏகாந்தமாகவுள்ள] மண்டபமென்றுங் கொள்ளலாம். மண்டபமது, அது - பகுதிப்பொருள்விகுதி; அசை எனினுமாம். உவந்தது என எடுத்து, தான் விரும்பினதாகிய கொலுமண்டபமென்றுமாம். (உ௪)

உரு.—(இ - ள்.) பளிங்கு - ஸ்படிகக்கற்களை, ஒளி கதுவ - ஒளி மிகும்படி, போழ்ந்த - பிளந்ததனாலாகிய, பலகை - பலகைகளை, கண் குலவ - இடம்விளங்கும்படி, சேர்த்தி- (ஒன்றோடொன்று)பொருத்தி யமைத்து இட்டு, விளங்கு ஒளி விசும்பின் செம் பொன் - விளங்குகின்ற ஒளியையுடைய ஓரங்களிலே சிவந்த பொன்னினாலமைக்கப்பட்ட, வேதிகை - மேடைகளையும், வெள்ளி வேயுள் - வெள்ளித்தகடுகளாலமைத்த மேலிடத்தையும், துளங்கு ஒளி பவளம் திண் கால் - அசைந்துவிளங்குகிற பவழத்தாலாகிய வலிய தூண்களையும், சுடர் மணி தவழும் பூமி - விளங்குகின்ற நவரத்தினங்கள் ஒன்றுமாறியொன்று அமைந்த அடியிடத்தையு முடைய, வளம் கவின்று அனையது ஆய - செல்வப்பொருள் அழகியவடிவத்தைப் பெற்று விளங்கினாற்போன்ற, மண்டபம் - அம்மண்டபம், மலிய - விளங்கும்படி, புக்கான் - (அதனிடத்தை) அடைந்தான் (அரசன்;) (எ - று.)

சேர்த்தி என்னும்வினையெச்சம், செம்பொன்என்பதன்பின் வருவிக்கப்பட்ட 'அமைக்கப்பட்ட' என்னும்பெயரெச்சவினையைக் கொள்ளும்.வேயுள்- மேல்வேயுங்கூரைக்குத் தொழிலாகுபெயர். கவின்று - கவின்என்னும்வினைப்பகுதி யடியாப் பிறந்த இறந்தகால வினையெச்சம். கொலுமண்டபத்தில் வீற்றிருத்தலால் அரசனுக்கு அழகுண்டாவதென்பதன்றி இவ்வரசன்வந்து வீற்றிருத்தலால்மண்டபத்திற்குங்குறைந்தவிளக்கமுண்டாவதென இவனது சிறப்பையுணர்த்துவார், 'மண்டபமலியப்புக்கான்' என்றார்; "புனைமணிமண்டபம் பொலிய வெய்தினன்" என்றார் கம்பரும். 'மண்டப மவிரப் புக்கான்' என்றபாடத்துக்கு, அவிர - விளங்க என்க. இரத்தினங்களை யறுத்து வேலை செய்கையில் அவற்றினொளி நன்குவெளிவிளங்குதலால். 'பளிங்கொளி கதுவப் போழ்ந்த பலகை' என்றார். பூமி - வடசொல்.

இதுமுதற் பதினேழுகவிகள் - கீழ்ச்சருக்கத்தின் முதற்கவி போன்ற அறுசீராசிரியவிருத்தங்கள் (உரு)

௨௬.—(இ - ள்.) குஞ்சரம் குழவி - இளமையான யானைக்குட்டியை, கவ்வி - (அதிக்கையாற்) கவர்ந்தெடுத்து, குளிர் மதி கோடு போலும் அம் சுடர் எயிற்ற - குளிர்ச்சியான சந்திரனது இளம்பிறைவடிவத்தை யொத்த அழகிய ஒளியையுடைய தந்தங்களையுடைய, ஆளி - யாளியென்னும் மிருக விசேடத்தினது, அணி முகம் - அழகிய முகத்தின் தன்மை, அலர - விளங்கும்படி, ஊன்றி - அமைக்கப்பட்டு, செம் சுடர் அணி - சிவந்த ஒளியைக் கொண்ட, பொன் சிங்காசனம் மிசை - பொன்னினாலாகிய சிங்காதனத்தின் மேல், சேர்ந்த - ஏறிவீற்றிருந்த, செல்வன் - எல்லாச்செல்வங்களையுமுடைய பயாபதியரசன், வெம் சுடர் உதயத்து உச்சி விரிந்த வெய்யவனோடு ஒத்தான் - வெவ்வியவொளியையுடைய உதயகிரியின்சிகரத்திலே தோன்றிவிளங்கிய சூரியனோடு ஒத்தான்; (எ - று.)

உவமையணி. சிங்காசனத்துக்கு - உதயகிரிச்சிகரமும், அரசனுக்கு - சூரியனும்உவமை. குஞ்சரமென்னும் வடசொல்லுக்கு - காட்டுப்புதர்களிற் சஞ்சரிப்பதென்றும், மத்தகத்துக்குக்கீழிருக்கிற குழிகளை யுடையதென்றும் அவயவப்பொருள்; குஞ்சம் - புதரும், குழியுமாம். குழவி - இளமையையுடையது; குழ - இளமை, உரிச்சொல்: "மழவுங் குழவு மிளமைப் பொருள" என்பது தொல்காப்பியம்; இ - பெயர்விகுதி. "குஞ்சரம் பெறுமே குழவிப் பெயர்க்கொடை" என்ற தொல்காப்பியத்தால், 'குஞ்சரக்குழவி' என்றார். மதிக்கோடு - யானைத்தந்தத்துக்கு, வளைவாலும் வெண்ணிற வொளியாலும் உவமை. கவ்வியென்னும் வினையெச்சம், எயிற்ற என்னுங் குறிப்புப்பெயரெச்சவினை கொண்டது. ஆளி - யாளியென்பதன் மரூஉ. யாளி - யானையைக் கொல்வதும் சிங்கம்போல்வதும் துதிக்கையையுடையது மாகியதொரு சிறந்த மிருகம். முகம்மலர என்றும் பிரிக்கலாம். சிங்காசனம் - சிங்கந்தாங்குவதுபோல அதன்முகமுங் கால்களுந் தோன்றச் சித்திரித்துச்செய்யப்பட்ட பீடம்; சிங்க ஆசன மெனப் பிரிக்க: வடமொழிப் புணர்ச்சி, தீர்க்கசந்தி;'அஆமுன்அஆவரில் இரண்டுங்கெட ஓர் ஆகாரம்வரும்'. ஆஸநம்-வீற்றிருக்குமிடம். வெஞ் சுடர்-வெய்யவனுக்கும் அடைமொழியாகலாம். உதயம் - உதயகிரியென்னும் வடமொழியின் விகாரம்; சிந்தாமணியில் "அத்தம் மனைய களிறு" என்றவிடத்து 'அத்தகிரியென்னும் வடமொழிச்சிதைவு விகாரமாயிற்று' என்றார் நச்சினார்க்கினியர். வெய்யவன் - வெப்பமுடையவன். (௨௬)

௨௭.—(இ - ள்.) (அப்பொழுது), பூ மரு - அழகுபொருந்தின, புரிந்த - விரும்பத்தக்க, நுண் நூல் - நுட்பமான சாஸ்திரங்களை யறிந்த, புரோகிதன் - புரோகிதனும், பொறி வண்டு ஆர்க்கும் - புள்ளிகளையுடைய வண்டுகள் ஒலித்தற்கிடமான, மா மலர் அணிந்த கண்ணி - சிறந்த பூக்களைக்கொண்டு தொடுக்கப்பட்ட மாலையையுடைய, மந்திரம் கிழவர் - மந்திரிமார்களும், மன்னர் ஏமரு கடல் அம் தானை இறை மகன் - பகைவர்கள்கலங்குதற்குக் காரணமான கடல்போற்பரந்த அழகிய சேனையையுடைய அரசனது, குறிப்பு - மனக்குறிப்பை, நோக்கி - எதிர்பார்த்து, தாமரை செம் கண் சைகை பணித்த தானத்தர் ஆனார் - தாமரைமலர்போன்ற சிவந்த தனது கண்களால் (அம்மண்டபத்தில் அவ்வரசன்) குறிப்பிட்டுக்காட்டிநியமித்த இடங்களில் இருப்பவரானார்கள்; (எ - று.)

மரு - மருவுசென்பதன் விகாரம். நூலென்ற சொல்லின் பொருட்காரணத்தை "பஞ்சிதன் சொல்லாப் பனுவ லிழையாகச், செஞ்சொற் புலவனே சேயிழையா — எஞ்சாத, கையேவா யாகக் கதிரே மதியாக, மையிலா நான்முடியு மாறு," "உரத்தின் வளம்பெருக்கி யுள்ளிய தீமைப், புரத்தின் வளமுருக்கிப் பொல்லா - மரத்தின், கனக்கோட்டந் தீர்க்குநூ லஃதே

போன் யாந்தர், மனக்கோட்டந் தீர்க்குநான் மாண்பு" என்னும் நன்னூல் வெண்பாக்களா லறிக. "நாலே காக மூக்கோல் மணையே, ஆயுங் காலை அந்தணர்க் குரிய" என்னுந் தொல்காப்பியசூத்திரத்தின்படி, இங்கே, நுண்ணூலென்பதற்கு-நுட்பமாய்விளங்குகிற பூணூ லென்றும் பொருள்கொள்ள லாம். புரோஹிதன் - வடசொல்; காரணப்பெயர்: (சுபாசுபகாரியங்களில்) முன்னே வைக்கப்படுபவ னென்று பொருள்; பின்னேவருகிற நன்மைதீமைகளை முன்னேஅறிந்து சொல்பவனென்றும் பொருள்கொள்ளலாம். மாமலர், மா - அழகுமாம். மந்திரம் - ஆலோசனை; அதற்கு உரியவர், மந்திரக்கிழவர். இனி, மந்திரக்கிழவர் என்பதற்கு-ஆலோசனையில் முதிர்ந்தவர் என்றும் பொருள்கொள்ளலாம். மன்னார் - தன்னோடு பொருந்தாதவர்; எனவே, பகைவராயிற்று: எதிர்மறைப் பலர்பால்வினையாலணையும்பெயர். ஏமரு என்பதில், ஏமா - பகுதி; ஒருசொல்: இனி, ஏமம்யா அல்லது ஏமம்ஆ என்பது ஏமாஎன விகாரப்பட்ட தெனினு மமையும். குறிப்புநோக்குதல் - அரசன் கருத்தை அவன்கூறாமல் அவனது முகம் கண் என்னுமிவற்றின் நிலைமையா லறிதல். கண்ணிற்சொல்லிச் செவியின்நோக்குவது இறைவனதுமாட்சிமையாதலாலும், இவ்வரசனது உறுதிச்சுற்றத்தவர் இங்கிதமறியும் நுண்ணறிவின ராதலாலும், இறைமகன்குறிப்புநோக்கிக் கட்சைகைபணித்ததானத் தராயினர். சைகை - ஸம்ஜ்ஞா என்னும் வடசொற் சிதைவு. தானம் - ஸ்தாநம்; வடசொல். அரசனுக்கு நன்மைநாடுவதிலும் தீமைதீர்ப்பதிலும் இவர்கள் மிகமுயன்றுஉதவுபவ ராதலால், இவர்களை இங்கே எடுத்துக்கூறினார். இவ்விருதிறத்தவருள் லௌகிகத்துக்குமாத்திரமே பெரும்பாலும் உதவுகிற மந்திரியரினும் லௌகிகம் வைதிக மென்னும் இரண்டிற்கு முதவுகிற புரோகிதனது சிறப்புத் தோன்ற, அவனை முதலில்வைத்தார்; அமைச்சர் - இம்மைக்கும், புரோகிதர் - இம்மை மறுமை இரண்டிற்கும் முக்கியமாகப் பயன்படுபவ ரென்க. செங்கண் - சிவந்த உத்தமரேகைகள்சிலவற்றை யுடைய கண். (௨௭)

உ-அ.—(இ - ள்.) அவர் - (கீழ்க்கூறிய) புரோகிதனும் மந்திரிமாரும், முன் இருந்த பின்னை - முன்னே (அவரவர்க்குரிய ஆசனத்தில்) வீற்றிருந்த பின்பு, மின் இவர் கடகம் பைம் பூண் - மின்னலையொத்து விளங்குகிற கடகமென்னுங் கையணியையும் மற்றும் பசுமையான பொன்னாபரணங்களையுமுடைய, வென்றி வேல் - வெற்றியைத்தருகிற வேலாயுதத்தை யேந்திய, வேந்தர் எல்லாம்-அரசர்கள்யாவரும், மூரி நீர் உலகம் காக்கும் மன்னவன் கழலை - பழமையான [பெரிய வலிய]கடல் சூழ்ந்த நிலவுலகமுழுவதையும் அரசாளுகிற அப்பயாபதியரசனது பாதங்களை, தங்கள் மணி முடி நுதியின் தீட்டி - தங்களது இரத்தினங்களைப்பதித்த கிரீடங்களின் நுனிகளிலே அழுந்தவைத்து, பின் - அதன்பின்பு, அவன் பணித்த தானம் - அவ்வரசன் குறிப்பாற்கட்டளையிட்ட இடத்தை, பெறும் முறை வகையின் - பெறுகின்ற முறைமையின் விதப்படி, சேர்ந்தார் - அடைந்தார்கள்; (எ - று.)

அவரவர்க்குரிய ஆசனத்தில் ஒழுங்காக வீற்றிருந்தன ரென்பதாம். 'முன்னவர்'என ஒருசொல்லாகஎடுத்து,மற்றையோரினும் அரசனுக்கு முக்கியமானவராகிய புரோகிதனும் மந்திரியரும் என்றுமுரைக்கலாம். பின்னை - பின்என்னும் காலவிடைச்சொல்லின்மேல், ஐ - சாரியை. கழலைத் தங்கள் மணி முடி நுதியிற் றீட்டுதல் - அரசனதுஅடிகளில் தமதுமுடிபடும்படி சாஷ்டாங்கமாக விழுந்து நமஸ்கரித்தல். "கோவுடை நெடுமணி மகுட கோடியாற், சேவடி யடைந்தபொற் கழலுந் தேயுமால்" என்ற கம்பர்வாக்கிற் போல, கழலை முடிநுதியின் தீட்டி- வீரக்கழலைக் கிரீடத்தின் நுனியால் தேய்த்து என்றுமுரைக்கலாம். கடகம் - ஒருவகைக்கைவளை. பசும்பொற்பூண்

என்பார், 'பைம்பூண்' என்றார். இனி, இறுதியடிக்கு, ஒளியிருந்த கேடய மென்னு மாயுதத்தையும் பசம்பொற்பூணையுடைய வெற்றியைத்தரும் வேற்படையையு முடைய அரசனைவரு மென்றும் பொருள்கொள்ளலாம். பயாபதி அரசர்க்கரசனாதலால், அரசர்களெல்லோரும் அவன்பணித்ததாணம் பெறுமுறைவகையிற் சேர்வாராயினர். வென்றி - தொழிற்பெயர்; வெல் - பகுதி, றி - விகுதி, லகரம் னகரமானது-சந்தி: இதனைப் பண்புப் பெயரென்றுங் கூறலாம். (உ௮)

உகூ.—(இ - ள்.)உழையவர் - மந்திரிமார்களுள், வழிமுறை பயின்று வந்த மரபினோர் - (அரசனது)பரம்பரையிலே தொன்றுதொட்டுப்பழகிவந்த பழமையான தன்மையையுடையவர்களும், மன்னர் கோமான் விழு மலர் அடிக்கண் மிக்க அன்பினோர் -அரசர்களுக்கு அரசனான அவனது சிறந்த தாமரைமலர்போன்ற பாதங்களில் மிகுந்த அன்பையுடையவர்களும், வென்றி சீரார் - வெற்றியை விளைத்த தன்மையுடையவர்களும், எழு வளர்த்து அனைய தோளார் - இருப்புத்தூணை ஒழுங்காக மேன்மேல் வளரச்செய்தாற்போன்ற தோள்களையுடையவர்களும், இளையவர் - யௌவனபருவமுடையவர்களுமாகிய, இன்ன சீரார் - இப்படிப்பட்ட தன்மையை யுடையவர்கள், ஆக - (ஒருவர்பின் ஒருவராய்) இருக்கும்படி, ஓடை மால் களிற்றினான் - நெற்றிப்பட்டத்தையுடைய பெரிய யானைச்சேனையையுடைய அந்தப் பயாபதியரசன், வைத்தான் - (அவர்களை அச்சபாமண்டபத்தில்) வீற்றிருக்கச்செய்தான்; (எ - று.)

தனது தாதை மூதாதை முதலியோரிடத்து மந்திரித்தொழில்பூண்டிருந்து அனுபவப்பட்டவர்களைப் பிரதானமாக முதலிலும், தனதுபாதங்களில் மிக்க அன்புடையவரை அவர்பின்னும், இதற்குமுன் பல சமயங்களில் போர்செய்தும் ஆலோசனைகூறியும் வென்றதன்மையுடையாரை அவர்பின்னும், பகைவரை வெல்லவல்ல தோள்வலிமையுடையாரை அவர்பின்னும், காளைப்பருவமுடையாரை அவர்பின்னுமாக அரசன் முறைப்பட அமைச்சரை இருத்தியமைத்த ஒழுங்கை இக்கவியாற் கூறினார். வயதிற் குறைவுபட்டவர் உலக அனுபவத்திற் குறைவுடையவராய் ஆலோசனைக்குச் சிறந்தவரல்லராதலின், அவர்களை இறுதியில் நிறுத்தியது. "குலமுதற் றொன்மையுங் கலையின் குப்பையும், பலமுதற் கேள்வியும் பயனு மெய்தினார்" எனக் கம்பராமாயணத்திலும், பரம்பரையாகவருதலை மந்திரிகளுக்கு முக்கியச் சிறப்பாக முதலில் எடுத்துக்கூறியவாறு காண்க. வழிமுறை - தலைமுறை. "விழுமஞ் சீர்மையுஞ் சிறப்பு மிடும்பையும்" என்ற தொல்காப்பியத்தின்படி சிறப்பையும் அழகையு முணர்த்தும் விழுமமென்னும் உரிச்சொல், விகாரப்பட்டு 'விழுமலர்'என வருமொழியோடு புணர்ந்தது. இனி, விழும் மலர் எனப்பிரித்து, தேனொழுகும் பூவென்றுங் கொள்ளலாம். மலரடி-உவமைத்தொகை. அடிக்கண், கண் - ஏழனுருபு. இன்ன - இகரச்சுட்டிடைச்சொல் லடியாப் பிறந்த குறிப்புப் பெயரெச்சம். உழையவர் - அருகிலுள்ளவர் என்றுபொருள்; மந்திரிகளுக்குக் காரணப்பெயர்: இது-அமாத்தியரென்னும் வடசொல்லின் பொருளுடையது; அமா-அண்மை: அங்குள்ளவர் அமாத்தியரென்க; இங்கே "உறுதி, யுழையிருந்தான் கூறல் கடன்"என்னுங் திருக்குறளையும்,அதனுரையிற் பரிமேலழகர் 'உழையிருந்தான் எனப் பெயர்கொடுத்தார்,அமாத்தியரென்னும் வடமொழிப் பெயர்க்கும் பொருண்மை அதுவாகலின்' எனக் கூறியதையும் உணர்க. ஓடை-நெற்றிப்பட்டம்; முகபடாமன்று: அது, சூழியெனப்படும்; இவ்வேறுபாட்டை "விழுச்சூழிய விளங்கோடைய"என்னும் மதுரைக்காஞ்சியினாலு மறிக. மால் களிறு - மதமயக்கங்கொண்ட யானை யெனினுமாம். களிறு - தேர் கு

திரை காலாள் என்னும் மற்றை மூன்று அங்கங்களுக்கும் உபலட்சணம். நால்வகைப்படையுள் யானை சிறந்ததாகலின், அதனையே பிரதானமாக எடுத்துக் கூறினார்; "யானை யுடையபடை காண்டல் மிகவினிதே," "படைதனக்கி யானை வனப்பாகும்" என்பன காண்க. இனி, களிற்றினன்- (வலிமை, கோபம், கம்பீரமான தன்மை, நடை முதலியவற்றில்) யானைபோன்றவனென்றுங் கொள்ளலாம். இனி, இச்செய்யுளுக்கு - தனித்தனி வழிமுறையின் றுவந்தமரபினரையும் மன்னர்கோமான்விழுமலரடிக்கண்மிக்கஅன்பினரையும் வென்றிவீரரையும் எழுவளர்த்தனையதோளாரையும் இன்னவீரராகிய தனதுதம்பிமாரையும் அரசன் தனதருகிலுள்ளவராக இருக்கச்செய்தானென்று உரைப்பாருமுளர். (௨௯)

௩௰.—(இ-ள்.) காவலன் என்னும் - பயாபதியரசனென்கிற, செம்பொன் கற்பகம் - சிவந்த பொன்மயமான கற்பகதரு, கவின்ற போழ்தின் - அழகுபெற்றுச் செழித்த அப்பொழுதிலே, நாவலர் என்னும் வண்டு - கவிகளென்கிற வண்டுகள், நகை முகம் பெயரின் ஆய் - விளக்கத்தையுடைய (அவ்வரசனது)முகமென்கிற பெயரால் பொருந்திய, பூ-(கற்பகத்தின்)மலர், அலர் - மலர்ந்துள்ள, பொலிவு - அழகை, நோக்கி - பார்த்து, புலம் மயம் களிப்ப ஆகி - தமதுமனம் மிகமகிழ்ந்து களிப்புமயமாயினவையாய், பா அலர் இசையின் தோன்ற - பாடல் சிறந்த இசையுடனே விளங்கும்படி, பாடுபு - பாடிக்கொண்டு, பயின்ற - நெருங்கின; (எ - று.)—அன்றே - ஈற்றசை; அப்பொழுதே யென்றுமாம்.

உருவகவணி. கற்பகவிருக்ஷம் செழித்துவளர்கையில் அதன்மலர் மலருஞ்சமயத்தை நோக்கி வண்டுகள் மிகக்களித்து வாயாற்பாடிக்கொண்டு அருகில்வந்து மொய்த்தல்போல, அரசன் அங்ஙனம் அழகுமிகவீற்றிருக்கையில் அவனது முகமலர்ச்சியை நோக்கிப் புலவர்கள் மிகமகிழ்ந்து பாட்டுமிசையும்பாடி அருகில்நெருங்குபவராயினரென்க. 'பா அலரிசையின் தோன்ற' என்றதில், பா என்றது - செய்யுள்நடையான சாகித்தியத்தை; இசை என்றது - அதற்குஏற்ற சங்கீதத்தை. அரசனைக் கற்பகமென்றது - நினைப்பார் நினைப்பவற்றை அவர் கேட்கவேண்டாதபடி குறிப்பறிந்து தருதலாலும், நாவலரை வண்டென்றது - எப்பொருளிலும் சாரத்தை அப்பொருள்கெடாதபடி உட்கொள்ளுதலாலும், முகத்தை மலரென்றது - அழகுந் தண்மையும் மலர்ச்சியு முடைமையாலு மென்க. செம்பொற் கற்பகமென்றது - பொன்னுலகாகிய தேவலோகத்திலுள்ள பொருள்கள் யாவையும் பொன்மயமானவை யாதலால். இனி, பொற் கற்பகம் - பொன்னுலகத்துள்ள கற்பகமெனவுமாம். கவின்ற-கவின்என்னும் வினைப்பகுதியடியாப் பிறந்த இறந்தகாலப்பெயரெச்சம். போழ்து - பொழுது என்பதன்மரூஉ; இது, போது எனவும் வழங்கும். நாவலர் - நாக்கினாற் பாடல்பாடவும் பிரசங்கஞ்செய்யவும் வல்லவர். அலர் பொலிவு, அலர் இசை - வினைத்தொகைகள். மயம் களிப்ப - களிப்புமயத்தன என விகுதிபிரித்துக்கூட்டுக. பாடுபு - செய்பு என்னும்வாய்பாட்டு இறந்தகாலவினையெச்சம்; இதில் - பு விகுதியே காலங்காட்டிற்று: இது, இங்கே 'நகுபுவந்தான்,' 'கூப்புபுதொழுது' என்பவற்றிற்போல, பாடாநின்று பயின்ற என நிகழ்காலப்பொருள்கருதிற்றென்க. பயின்ற - முற்று. அரசனுக்கு எப்பொழுதும் எல்லோரிடத்தும் இயல்பாக உள்ள முகமலர்ச்சி இதிற்கூறப்பட்டது. அரசனருகிலிருந்து உரியகாலங்களில் புகழ்ச்சிக்கவிபாடும் ஸ்துதிபாடகர்கள் செய்தியை இக்கவியாற் கூறினார்; மேலிரண்டுகவிகளிலும் அதன்விவரமே கூறப்படும். காவலனென்னுங் கற்பகம், நாவலரென்னும் வண்டு என உருவகத்தில் உயர்திணை அஃறிணையோடு மயங்கியது, திணைவழுவமைதி; [நன் - பொது - ௫௧.] (௩௰)

நக.—(இ - ள்.) பண் அமை - எழுவகையிசைகளும் அமைந்த, மகரம் நல் யாழ் - சுறாமீனின்வடிவுதோன்ற அமைந்த சிறந்த மகரவீணையையுடைய, பனுவல் நூல் புலவர் - செய்யுள்செய்யவல்ல நூல்களையறிந்த கவிகள், பாடி-(பலவகைத்துதிப்பாடல்களை முதலிற்) பாடி, (இறுதியில்), 'மண் அமர் வளாகம் எல்லாம் - மண்மயமாயமைந்த கடல்சூழ்ந்த உலகமுழுவதிலும், மலர்ந்த - பரவிய, நின் புகழோடு - உனதுகீர்த்தியுடனே, ஒன்றி - பொருந்தி, விண் அகம் விளங்கு திங்கள் வெண் குடை நிழலின் வைகி - ஆகாயத்தின்இடம் விளங்குதற்குக் காரணமான சந்திரமண்டலத்தையொத்த ஒற்றைவெண்கொற்றக்குடையின் நிழலோடு பொருந்தி, கண் அமர் உலகம் காக்கும் கழல் அடி வாழ்க - இடம்பரந்த உலகத்திலுள்ள உயிர்களைக் காத்தருளுகிற வீரக்கழலையணிந்த உனது சீர்பாதங்கள் வாழக்கடவன,' என்றார் - என்றுகூறி வாழ்த்தினார்கள்; (எ - று.)

பாடி என்றார் எனமுடிக்க; என்று பாடினார் என விகுதிபிரித்துக்கூட்டலுமொன்று. பண் - இசைப்பாட்டென்றும், நரம்பென்றுங் கொள்ளலாம். பேரியாழ், மகரயாழ், சகோடயாழ், செங்கோட்டியாழ் என்னும்நான்கினுள் பத்தொன்பதுநரம்புகட்டினது, மகரயாழ்; "ஒன்று மிருபது மொன்பதும் பத்துடனே, நின்ற பதினான்கும் பின்னேழுங் - குன்றாத, நால்வகை யாழுக்கு நன்னரம்பு சொன்முறையே, மேல்வகைய நூலோர் விதி:" முறையே உக, கக, கசு, எ - என்க; இனி, மகரயாழ் செங்கோட்டியாழ்களுக்கு முறையே கள, கசு - நரம்பு கொள்வாருமுளர். மகரம் - சுறாமீன்: அதனது அங்காந்தவாய்போல வளைந்த நுனி அமைக்கப்படுதலால், மகரவீணையென்று பெயர்பெற்றது போலும்; இதனை " கவிகளெல்லோரும் பிரதானமாக எங்குமெடுத்துக்கூறுஞ் சிறப்புத்தோன்ற, 'நல்யாழ்' என்றார். 'யாழ்ப்புலவர்' என்றதனால், பாடகரென்க. புலவர் - அறிவுடையவர்; புலமை, அல்லது புலம் - அறிவு. விண்ணகம் விளங்கு - ஆகாயத்தினிடத்திலேவிளங்குகிற என்றுமாம். புகழ் - நற்காரியங்களைச் செய்வார்க்கு இம்மைப்பயனாய் இவ்வுலகில் நிகழ்ந்து என்றுமிறவாது நிற்பதாய கீர்த்தி. 'அடிவாழ்க' என்றது, "அனைவோர்க்குந் தெய்வம், இலைமுகப் பைம்பூ ணிறை" என்றும், "திருவுடை மன்னரைக் காணிற் றிருமாலைக் கண்டேனே யென்னும்" என்றுங் கூறியபடி அரசனையே தெய்வமெனக்கொண்ட தகுதி தோன்ற. வாழ்க - வியங்கோள்முற்று; க - விகுதி: இது இருதிணையைம்பால்மூவிடத்துக்கும்பொது.()

கஉ.—(இ - ள்.) 'மஞ்சு உடை மலையின் - மேகங்களைத் தம்மீதிலுடையதொரு பெரியமலையிலே, வல்லி தொடர - கொடிகள் தன்மேலே சுற்றிப்படரவும், வான் வணங்க - தன்னைத் தேவலோகத்தாரும் பணிந்து தொழவும், நின்ற - தவஞ்செய்துநின்ற, அம் சுடர் கடவுள் - அழகியதவவொளியையுடைய சூரியபகவானோ டொத்த வாகுவலியென்னு மரசனால், காத்த - தலைவனாயிருந்து வளர்க்கப்பட்ட, அரு குலம் - அருமையான இராசகுலம், அலர - விளங்கும்படி, தோன்றி - (அக்குலத்திலே) பிறந்து, வெம் சுடர் எஃகம் ஒன்றின் - வெவ்விய ஒளியையுடைய கூர்மையான வேலாயுதமொன்றினால், வேந்து கண் அகற்றி நின்ற - பகையரசர்களைத் தன்னிராச்சியத்தினிடத்தை விட்டு ஒழியச்செய்து நிலைபெற்ற, செம் சுடர் முடியினாய் - செந்நிறமான பொன்னொளியையுடைய கிரீடமுடையவனே! நின் கோல் இது செல்க - உனது இவ்வரசாட்சி (என்றுந் தடையிலாது) செல்வதாக,' என்றார் - என்று வாழ்த்துக்கூறினார்கள், (புலவர்கள்); (எ - று.)

குலப்பெருமையையும் பராக்கிரமமிகுதியையும் எடுத்துச்சிறப்பித்துக் கூறிப் பாடி வாழ்த்துதல், துதிபாடகரது இயல்பு. வாகுவலியென்பவன் - ஓரரசன்; கச்சனது மருகன்: இவன்வழியிற் பிறந்தவனே, இப்பயாபதி.

வாருவலியென்பவன் தன்மகனுக்கு இராச்சியபட்டாபிஷேகஞ்செய்து வனத்தையடைந்து பெரியதொரு மலைச்சிகரத்திலே அருந்தவஞ்செய்துநிற்கையில் அவனது பாதங்களிற் புற்றுமூடிப் பாம்புகளூர்ந்து அவனது சடைமுடியிற் குருவிகள் குடைந்து அவனதுடம்பின்மேற் கொடிகள் படர்ந்து சுற்றின என்றவரலாற்றை இந்நூலில் மேல் (ஆறுவது) துறவிச்சருக்கத்தில் ௧௨௧ - ஆம்கவிமுதல் ௧௧- பாடல்களில் காண்க. இவன் இங்ஙனம் அருந்தவஞ்செய்து அதனிறுதியில் முத்தியின்பத்தை அடைந்தனனென அறிக. "பொழிலணிந் தெழுந்த வல்லி புதைந்தன" என்றும், "கருவடி நெடுங்கணல்லார் கலந்ததோள் வல்லி புல்ல"என்றும் மேல்வருவன நோக்குக. முற்றத்துறந்துமுழுத்தவஞ்செய்பவனைத் தேவர்களும்வணங்குதலை "தன்னுயிர் தானறப் பெற்றானை யேனைய, மன்னுயி ரெல்லாந் தொழும்" என்ற திருக்குறளினாலு மறிக; "தேவர்க ளுலக மெல்லாஞ் செழுமண மயர்ந்து கூட்டக்,கேவலப் பெண்ணென் பாளோர் கிளரொளி மடந்தை தன்னை, யாவியு ளடக்கிப் பின்னை யமரர்க்கு மரிய னானான்" என்பர் மேல் துறவிச்சருக்கத்தும். வான் - விண்ணுலகத்தார்க்கு இடவாகுபெயர். அவன் திவ்விய குணங்களாகிய பேரொளியைப் பெற்று என்றுமழியாதமுத்தியுலகில் நிலைநின்றமை தோன்ற,'நின்ற வஞ்சுடர்க்கடவுள்'என்றார்.அருங்குலம்என்றது-இப்படிப்பட்டசிறப்பையுடையகுலம் உலகத்தில் வேறுஇல்லை யென்னுங்கருத்தால். நீதிதவறாத அரசாட்சி, செவ்வியகோல்போலுதலால், செங்கோல்என்றும் கோல்என்றுங் கூறப்படும்; வடநூலாருந்தண்ட மென்றார்.()

௩௩.—(இ - ள்.) இன்னணம் - இவ்வாறு, பலரும் - துதிபாடகர்கள்பலரும், ஏத்த - புகழ்ந்துவாழ்த்த, அங்கு - அம்மண்டபத்திலே, இனிதின் - இனிமையாக,இருந்த - வீற்றிருந்த, வேந்தன் - அந்தப்பயாபதியரசன், பொன் அணி வாயில் காக்கும் பூ கழலவனை நோக்கி - பொன்னினாலாகிய அழகிய தனது இருப்பிடத்துவாசலைக் காவல்செய்யுந்தன்மையுள்ள அழகியவீரக்கழலையுடையாரொருகாவலாளனைப்பார்த்து, 'கல் நவில் தோளினாய் - கல்லின்தன்மையை வெளிப்படுத்துகிற தோள்களையுடையவனே! நாழிகை ஏழு காறும் - இதுமுதல் ஏழுநாழிகைவரையிலும், என்னவரேனும் ஆக வர - வருபவ ரெப்படிப்பட்டவராயினு மாகுக அவர்கள் உள்ளே வரும்படி, நீ காவல் விடு - நீ அவர்களைத்தடுத்தலை யொழிந்திரு,' என்றான்- என்று கூறினான்; (எ - று.)

பலரும், உம்மை - முற்று. நோக்கி என்றான் என இயையும். என்னவர் - எகரவினாவிடைச்சொலடியாப்பிறந்த பலர்பாற்பெயர்; ன், அ - சாரியைகள். ஏனும் - எனினுமென்பதன் மரூஉ. உம்மை - இழிவுசிறப்பு. ஆக - வியங்கோள். நாழிகை - நாடிகாஎன்னும்வடமொழித்திரிபு. ஏழு - ஏழ்என்னும் ழுகரமெய்யீற்றுப்பெயர் உகரச்சாரியைபெற்றதென்பது,தொல்காப்பியனார் கொள்கை; முற்றியலுகரவீற்றுப்பெயரென்பது,நன்னூலார் மதம். காறு - அளவுப்பொருள் குறிப்பதோ ரிடைச்சொல். உம்மை - முற்றுப்பொருளது. நவிலல் - சொல்லல், கற்றல்; இங்கே, இதனை உவமவுருபென்னலாம். இது, அரசன் யாவர்க்குந் தடையின்றித் தரிசனந்தந்து குறைவிசாரித்து அருள்செய்யுஞ் சமயம். தோளினாய் - தோளினான் என்பதன் விளி.(௩௩)

௩௪.—(இ - ள்.) ஆ யிடை - அந்தச்சமயத்தில், அலகு இல் மெய் நூல் அளவு சென்று அடங்கி நின்றான் - அளவில்லாத உண்மையான சாஸ்திரங்களின்எல்லை எவ்வளவுண்டோ அவ்வளவுவரையிலும் போய் (அக்கல்வியறிவுக்கு ஏற்ப) அடக்கங்கொண்டுநின்றவனும், சேய் இடை நிகழ்வது எல்லாம் சிந்தையின் தெளிந்த நீரான் - தூரதேசங்களிலும் தூரகாலங்களிலும் நடக்குஞ் செய்திகளெல்லாவற்றையும் மனத்தால் ஆராய்ந்தறிக்க

தன்மையையுடையவனுமாகிய, ஓர் நிமித்திகன் - (அங்கதனென்னும் பெயரையுடைய) நிமித்திக னொருவன், மேய் - அங்குவந்து, (அவ்வாயில்காவலனை நோக்கி),'இடை பெறுவன் ஆயின்- (இப்பொழுது இங்கு) இடம்பெற்றுச் செல்வேனானால், வேந்து - அரசன், காண்குறுவன்கொல்லோ - (என்னைப்) பார்த்தருளுவானோ? நீ இடை அறி சொல் - நீ சமயத்தையறிந்து சொல்வாய்,' என்று—, நெறியின் - (அரசன் திருவாயிலிடங்கூறும்) முறைமைப்படி, சொன்னான் - கூறினான்; (எ - று.)

நூலளவு சென்று - சாஸ்திரங்களின் எல்லை முழுவதையும் அறிந்து என்றபடி. செல்லுதல் அறிதலென்னும்பொருளதாதலை இந்நூலின் காப்புச் செய்யுளிலுங் காண்க. தேயமிடையிட்டவற்றையுங் காலமிடையிட்டவற்றையும் எளிதில் ஆராய்ந்து ஐயந்திரிபற அறியுஞ் சிறந்த அறிவையுடையவனென்பது,இரண்டாமடியின் கருத்து. செய்மையென்னும்பண்புப்பெயர் ஈறுபோய்ச் சேயெனநின்றது. இரட்டுறமொழித லென்னு முத்தியால், இடை என்பது இடமுங் காலமு மாயிற்று. நிகழ்வதெல்லாம் - ஒருமைப்பன்மைமயக்கம். நிகழ்வது - சாதியொருமை. மேய், மே- பகுதி; இஃதே உகரச்சாரியைபெற்று மேவுஎன நிற்பது: கூ என்பதுபோல. பெறுவன், அன் விகுதி தன்மையொருமைக்கு வருதல் - புதியனபுகுதல். வேந்து காண்குறுவன்கொல்லோ - நான் அரசனைப் பார்க்கப்பெறுவேனோ எனினுமாம். கொல், ஓ என்னும் இரண்டுஇடைச்சொற்களில்,ஒன்று-வினா;மற்றொன்று-அசை. அறிசொல் - அறிந்துசொல்; வினைமுற்று வினையெச்சப்பொருள்பட்டது: இனி, 'வரிப்புனை பந்து' என்பதில் 'வரி' என்பதுபோல, அறி என்னும் பகுதி விகுதிமுதலியனபுணர்ந்துகெட்டு வினையெச்சப்பொருள்தந்ததென்றுங் கொள்ளலாம். நிமித்திகன் - நிகழுங்குறிகளை நோக்கி ஆராய்ந்து அறிந்து பின்வருந்தொழில்களை முன்கூறுபவன். இவன், புரோகிதனும் மந்திரியும்போல அரசர்க்கு உறுதிச்சுற்றத்துள் ஒருவனாயவன்.நிமித்தம்-குறி. மேய்ச்சொன்னானென இயையும். இவன்பெயர் அங்கதனென்பது, மேல் தூதுவிடுசருக்கத்தில் விளங்கும். (௧௪)

௧௫.—(இ - ள்.) ஆங்கு - அப்பொழுது [அவ்விடத்தில்], அவன் - அவ்வாயில்காவலன், (நிமித்திகப்புலவனை நோக்கி), 'அரசர் கோமான் குறிப்பு அறிந்து அருளப்பட்டீர்-அரசர்களுக்கரசனான பயாபதிக்கு நிமித்தங்களை அறிந்து கூறியருளவல்லவரே! ஈங்கு இனி புகுமின் - இவ்விடத்து இப்பொழுதே (நீர்)சென்றருளும்,' என்றான்- என்று(வணக்கத்தோடு) கூறினான்; (கூற), அவனும்- அந்நிமித்திகனும், இறைவனை சேர்ந்தான்- அரசனைப்போயடைந்தான்; (அப்பொழுது), வீங்கு இரு தானையானும்-(பகைவர்மேற்)பொங்குகிற பெரிய சேனையையுடைய பயாபதியரசனும்,(அந்நிமித்திகனை நோக்கி), வெள் மலர் பிடித்த கையால் ஓங்கு இரு தானம் காட்டி-வெண்ணிறமானதொருபூவை யேந்திய தனதுகையினால் உயர்ந்த சிறந்த ஆசனத்தினிடமொன்றைச் சுட்டிக் காண்பித்து, உவந்து இனிது இருக்க என்றான் - மகிழ்ந்து இனிமையாய் இங்கு வீற்றிருக்க வென்று கூறினான்; (எ-று.)

அருளப்பட்டீர்- அருள்வீர்; செயப்பாட்டுவினை செய்வினைப்பொருளது: அறிந்தருளுதலை யஃடார்நீ ரென்றும் விரித்து உரைக்கலாம். அருளப்பட்டீர் - அருளப்பட்டார் என்பதன் விளி; ஈற்றயல் திரிதல் - விளியுருபு. புகுமின் - ஏவற்பன்மைமுற்று; மின் - விகுதி. அருளப்பட்டீர் என்றும், புகுமின் என்றும் பன்மையாக ஒருவனைநோக்கிக் கூறியது, உயர்வுபற்றி வந்த பால்வழுவமைதி; [நன்-பொது-௨௮]. வெண்மலர் - இவ்வரசகுலத்துக்குரிய அடையாளப்பூ. இனி என்பது - இங்கே, இப்பொழுதென்னும் பொருளது; "எண்கையாய் கேளினி" என்பதிற் போல. (௧௫)

௧௬.—(இ - ள்.) குணம் குன்று ஒப்பான் - குணங்களில் மலையையொப்பவனாகிய அந்நிமித்திகன், உற்ற தன் ஒழுக்கிற்கு ஏற்ப - தான் பொருந்தியுள்ள நல்லொழுக்கத்திற்குத் தக்கபடி, உலகு உபசாரம் நீக்கி - தனக்கு உலகமாயினோர் செய்யு முபசாரங்களை விலக்கி, கொற்றவன் குறிப்பு நோக்கி - அரசனது இங்கிதத்தை ஆராய்ந்து, இருந்த பின் - (அவன் காட்டின ஆசனத்தில்) வீற்றிருந்தபின்பு, முற்றிய உலகில் மூன்று காலமும் முழுதும் நோக்கி கற்ற நூல் புலமை தன்னை காட்டுதல் கருதி - நிறைந்த உலகத்திலே மூன்றுகாலத்துச் செய்திகளையும் முழுவதும் ஆராய்ந்து அறிந்த தனது நிமித்தநூலுணர்ச்சித்திறத்தை (ப்பிறர்க்கு) வெளிப்படுத்துதலை யெண்ணி, சொன்னான் - (சிலவார்த்தைகள்) கூறினான்; (எ - று.)—அவற்றை மேல் மூன்றுகவிகளிற் காண்க. காலம் - காலத்துச்செய்திக்கு ஆகுபெயர்.

ஒழுக்கு - ஒழுகு என்னும் முதனிலை திரிந்த தொழிற்பெயர். ஏற்ப என்னும் வினையெச்சத்தில், ப் - எழுத்துப்பேறு: எதிர்காலவிடைநிலை யன்று: செயவெனெச்சம் முக்காலத்துக்கும் பொது வாதலால். உபசாரம் - வடசொல். குணங்களிற் குன்றை யொத்தலை "அளக்க லாகா வளவும் பொருளுந், துளக்க லாகா நிலையுந் தோற்றமும், வறப்பினும் வளந்தரும் வண்மையு மலைக்கே," "மலையே, அளக்க லாகாப் பெருமையு மருமையும், மருங்கக லுடைமையு மேறற் கருமையும், பொருந்தக் கூறுப பொச்சாப் பின்றி" என்னுஞ் சூத்திரங்களா லறிக. மூன்றுகாலம் - இறப்பு நிகழ்வு எதிர்வு என்பன. (௧௬)

இதுவும், மேற்கவியும் - ஒருதொடர்.

௧௭.—(இ - ள்.) கய தலை களிற்றினாய் - பெரிய தலையையுடைய யானைச்சேனையையுடையவனே! கங்குல் - (நேற்று) இராத்திரியிலே, கண்டது - பார்த்ததாகிய, ஓர் கனா - சொப்பன மொன்று, உளது - உள்ளது; அது - அந்தக்கனவை, நயந்து - விரும்பி, தெரியின் - அறியவேண்டினால், ஓர் வேழம் - ஒருயானை, விசும்பு அகத்து இழிந்து வந்து - ஆகாயத்தினிடத்தினின்றும் இறங்கிவந்து, நம்பி நளி கடல வண்ணன் தன்னை - ஆடவரிற் சிறந்தவனான பெரிய கடல்போலுங் கருநிறத்தையுடைய திவிட்டகுமாரனை, வெண் போது சேர்ந்த தயங்கு ஒளி மாலை சூட்டி - வெண்ணிறமான பூக்கள் பொருந்தின விளங்குகின்ற ஒருமாலையைச் சூட்டியலங்கரித்து, தன் இடம் அடைந்தது - தனது இடத்தைச் சேர்ந்தது; (எ - று.)

கய, நளி - பெருமையையுணர்த்து முரிச்சொற்கள் "தடவுங் கயவும் நளியும் பெருமை" என்பது தொல்காப்பிய மாதலின். கய + தலை = கயந்தலை: உரிச்சொற்புணர்ச்சியாதலின், வலிமிகாது இனமெலி மிக்கது; நளி கடலென வலியியல்பானதற்குங் காரணமிதுவே. "கயவென் கிளவி மென்மையுஞ் செய்யும்" என்றசூத்திரத்தின்படி, கயந்தலைக்களிறு - மென்மையான தலையையுடைய யானை யென்றுமுரைக்கலாம்; "கயந்தலை மடப்பிடி" என்றார் பிறரும். இனி, கயந்தலை - யானைக்கன் றென்றுங் கொள்ளலாம்; "கயந்தலை போதகம் துடியடி களபம், கயமுனி யானைக் கன்று கும்மே" என்பது பிங்கலந்தை நிகண்டு. கனா - குறியதன்கீழ் ஆ இயல்பாய் நின்றது. தெரியின் - கூறத்தொடங்கினா லென்றபடி. சூட்டி, சூட்டு - பகுதி; அது - சூடு என்பதன் பிறவினை. மூன்றாமடியில், யகரத்துக்குச் சகரம் எதுகை. (௧௭)

௧௮.—(இ - ள்.) மல் - மற்போர்வல்லமை, மலர்ந்து - விளங்கப்பெற்று, அகன்ற - விசாலமான, மார்ப - மார்பையுடைய அரசனே! அதன் பயனும் கேண்மோ - அக்கனவினது பிரயோஜனத்தையுங் கூறக்கேட்பாயாக; மின் மலர்ந்து இலங்கு பைம் பூண் - மின்னல்போன்றஒளி பரவி விளங்குகிற பசும்பொன்னாபரணங்களையுடைய, விஞ்சை வேந்து ஒருவன் - ஒருவித்தியா

தராசன், வந்து - இங்குவந்து, நல்மலர் நகைகொள் கண்ணி நம்பிதன் நாமம் ஏத்தி - நல்லபூக்களாலாகிய விளங்குதலைக்கொண்ட மாலையையுடைய சமதிவிட்டனது பேரைப் புகழ்ந்து, தன் மகள் ஒருத்திதன்னை தந்தனன் போகும் - தனது ஒருபெண்ணை (அவனுக்கு) மணஞ்செய்துகொடுத்துச் செல்வான், என்றான் - என்றுகூறினான், (நிமித்திகன்); (எ - று.)

மன் மலர்ந்து அகன்ற எனப்பிரித்து, மிகப்பரந்து விளங்கிய என்றுமுரைக்கலாம். மார்ப - மார்பன் என்பதன் விளி; ஈறுகெட்டது - விளியுருபு. மற்று - அசை; பின்பு என்றும் பொருள்கொள்ளலாம். பயன் - பய மென்பதன் இறுதிப்போலி. உம்மை - இறந்தது தழுவிய எச்சப்பொருளது; கீழ்க்கூறிய கனவையே யன்றி என்றபொருளைத் தந்ததனால். கேண்மோ, மோ - முன்னிலையசைச்சொல். நகை - விளங்குதல், தொழிற்பெயர்; நகு- பகுதி, ஐ - விகுதி. நாமம் - வடசொல். ஒருத்தி - ஒருத்தன் என்பதன் பெண்பால். 'தந்து தான் போகும்' என்றும் பாடம். ஒருவன் போகும் - செய்யுமென்முற்று ஆண்பாலுக்கு வந்தது; [நன் - பொது - உ௯]. விஞ்சைவேந்தொருவ னென்றது, இரதநூபுரத் தரசனாகிய சடி யென்பவனை. தன் மகளொருத்தி யென்றது, அவன்மகளாய்ச் சிறந்த சயம்பிரபையை. (௩௮)

௩௯.—(இ - ள்.) 'பகர் - சிறப்பித்துக் கூறப்படுகிற, கள் திவலை - தேனின் துளிகளை, சிந்தும் - சொரியவிடுகிற, கடி கமழ் - வாசனைவீசுகிற, குவளை கண்ணி - கருங்குவளைப்பூமாலையையுடைய, திட்பம் ஆம் சிலையினாய் - வலிமையையுடையதான வில்லையுடையவனே! நாள் ஏழு சென்றால் -(இன்றுமுதல்) ஏழுநாள் கழிந்தால், ஒட்பம் ஆய் உரைக்க வல்லான் ஒருவன் - விளக்கமாய்ப் பேசவல்லவனொரு வித்தியாதரத்தூதன், ஓர் ஓலை கொண்டு - திருமுகமொன்றை யெடுத்துக்கொண்டு, புட்பமாகாண்டம் என்னும் பொழிலகத்து இழியும் - புட்பமாகாண்டமென்னும் பெயரையுடைய (உனது) சோலையினிடத்திலே இறங்குவான்; நீ தெளிக - (இதனை) நீ நம்புவாயாக', என்றான் - என்றுங் கூறினான், (அந்நிமித்திகன்); (எ - று.)

ஒருவ னென்றது, சடியரசனிடத்திலிருந்து தூதுவருகின்ற மருசி யென்பவனை. திட்பம், ஒட்பம் - பண்புப்பெயர்கள்; முறையே திண், ஒள் - பகுதிகள், பம் - விகுதி. ஓலை கொண்டு - இரண்டாம்வேற்றுமைத்தொகையாதலின், வலிஇயல்பு; [நன்-உருபு- ௧௫.] புட்பமாகாண்டம்-பயாபதியரசனது சிங்காரப்பூந்தோட்டம். புஷ்பமஹாகாண்டம் என்னும் வடசொல்லுக்கு-மலர்களின் மிக்க தொகுதியை யுடையதென்று பொருள். பொழிலகத்து, அகத்து - ஏழனுருபு. இனி, கள் திவலை பகர் சிந்தும் எனஎடுத்து, தேன் துளிகளை வண்டுகளுக்கு விலைகூறிச்சொரிகிற என்றுரைக்கலாம். "அன்பறிவாராய்ந்த சொல்வன்மை தூதுரைப்பார்க்,கின்றியமையாத மூன்று" என்பவாதலால்,'ஒட்பமாயுரைக்கவல்லான்' என்றார். (௩௯)

௪௦.—(இ - ள்.) அவன் - அந்நிமித்திகன், என்று இயம்ப - என்று இவ்வாறுசொல்ல, இருந்தவர் -(அந்தச்சபாமண்டபத்தில்) இருந்தவர்யாவரும், கேட்டு - செவியுற்று, வியந்து - ஆச்சரியமடைந்து, நோக்கி - (அரசனைப்) பார்த்து, 'ஒன்றிய உலகம் எல்லாம் - பொருந்தின உலகங்களெல்லாவற்றையும், ஒரு குடை நிழல் - ஒற்றை வெண்கொற்றக்குடையின் நிழலிலே, காக்கும் - காத்தருளுகிற, பொன் திகழ் அலங்கல் மார்ப - பொன்னினாலாகி விளங்குகிற அசையுந்தன்மையதான ஆரத்தை யணிந்த மார்பையுடையவனே! சென்று உயர் திலகம் கண்ணி திவிட்டன் - மேற்சென்று உயர்ந்த திலகம்போலச்சிறந்த முடிக்கும்மாலையையுடைய திவிட்டகுமாரன், இத்திறத்தனே ஆம் - (இந்நிமித்திகன்கூறிய) இந்தத்தன்மையயு

டையவனே யாவன்; பொய்அன்று-(இது)பொய்யாகாது;போற்றி-(இதனை) விரும்பி உட்கொண்டருளுவாய்,' என்றார்- என்று கூறினார்கள்; (எ - று.)

இக்கவியிலே, 'இருந்தவர்' என்றது-புரோகிதனும், மந்திரிகளும், அரசர்களும் முதலியோரை. சென்றுயர் திலகக்கண்ணி என்பதற்கு-மேல்நோக்கி உயர்ந்துள்ள நெற்றிப்பொட்டையும் பூமாலையையும் உடைய என்றும் உரைக்கலாம். போற்றி - போற்றியஎன்னும் வியங்கோளின் விகாரம்; இதனைத் தொழிற்பெயரென்பது ஒருவாற்றானும் பொருந்தாமை காண்க. இவர்கள் இங்ஙனங்கூறினது, திவிட்டனது திருமேனியி லுள்ள நல்லிலக்கணங்களை நோக்கியுள்ளதனாலும், 'விளையும்பயிர் முளையிலே தெரியும்' என்றபடி அவனது பின்னர்வெளிப்படும் பராக்கிரம்முதலிய சிறப்புக்கள் முன்னமே அவனது இளமைத்தோற்றத்தில் விளங்குதலாலு மெனக. திறத்தனே, ஏ - தேற்றம். பொன் திகழ் அலங்கல் மார்ப - பொன்னாபரணங்கள் விளங்குகின்ற பூமாலையையணிந்த மார்பை யுடையவனே என்றுமாம். (௩௦)

௩௧.—(இ - ள்.) இப்பால் - இதன்பின்பு, உரை அமைந்து இருப்ப - (யாவரும்) பேச்சடங்கி இருக்கையில், ஓதும் நாழிகை ஒன்று ஓட - (கணிதநூலாரால் கணக்கிடப்பட்டுக்) கூறியுள்ள ஒருநாழிகை விரைவிற்கழிய, முரசம் ஒன்று அதிர்த்தது - (சபை கலைதற்கு அடையாளமாகப்) பேரிகை ஒன்று முழங்கிற்று; ஓங்கி அதிர்த்தலும் - (அம்மங்கலவாத்தியம் அங்ஙனம்) மிகுதியாய் ஆரவாரித்தவளவிலே,முகத்தினாலே அரசு அவை விடுத்து-தனது முகக்குறிப்பினாலே (அங்குவந்த) அரசர்களை அச்சபையினின்று விடைபெற்றுச் செல்லும்படி அனுப்பின, வேந்தன் - அரசன், அகத்த நூலவரை நோக்கி - தனது அருகிடத்திலுள்ள நூலுணர்ந்த புரோகிதனும் மந்திரியும் என்பவரைத் தனது கண்களின் குறிப்பால் ஆலோசனைச்சபைக்கு வரச்சொல்லி, வரை உயர் மாடம் கோயில் மந்திர சாலை சேர்ந்தான் - மலைபோலுயர்ந்த மாளிகைகளையுடைய தனது அரண்மனையிலே உள்ள ஆலோசனையிடத்தை அடைந்தான்; (எ - று.)

நாழிகை - நாளில் அறுபதில் ஒருபங்கு; இருபத்துநான்கு நிமிஷங்கொண்ட பொழுது. நாழிகை ஒன்று ஓட என்றது - பிராணிகளின் ஆயுட்காலம் கழிவது தெரியாமல் மிகவிரைவிலே கழியுமியல்பின தென்னும் உண்மையை உணர்த்துதற்கு. அகத்த - குறிப்புப்பெயரெச்சம். கோ + இல் = கோயில்; இங்கே, அரசனது இடம் என்றுபொருள்: கோவில் என வகர உடம்படுமெய் பெற்று வரவேண்டுவது யகரம் பெற்றது - இலக்கணப்போலி. சாலை - சாலா என்னும் வடமொழித் திரிபு. (௩௧)

௩௨.—(இ - ள்.) (அம்மந்திரசாலையில்), கொங்கு அலர் தெரியலான் - தேன்பெருகும் பூமாலையையுடைய அவ்வரசன், அவன் - அந்நிமித்திகன், கங்குல்வாய் கனவு - இராப்பொழுதிலே கண்ட சொப்பனத்தை, கருதி - (மறவாமல்) எண்ணி, சொற்றதும் - எடுத்துக்கூறினதையும், மங்கலம் பெரு பயன் வகுத்த வண்ணமும் - (அக்கனவிற்கு) மங்களகரமான பெரிய பிரயோசனத்தை அமைத்துக்கூறிய விதத்தையும், கூறி - (தான் மந்திரிகளின்முன்) எடுத்துச்சொல்லி, கொய் மலர் தொங்கல் ஆர் நெடு முடி சுடர - பறிக்கப்பட்ட பூக்களைக்கொண்டு தொடுத்த மாலை பொருந்தின நீண்ட தனது தலையின் கிரீடம் விளங்க, தூக்கினான் - ஆலோசிப்பவனானான்; (எ-று.)

சொற்றது என்னும் இறந்தகால வினைப்பெயரில், சொல் - பகுதி, ற் - இடைநிலை, அ - சாரியை, து - விகுதி. மங்கலப்பெரும்பயன் - வித்தியாதரகன்னிகைவிவாகம். கொங்கு அலர் - நறுமணம் பரவிய என்றுமாம். தெரியல் - விளங்குதல்; தொங்கல் - தொங்குதல்: இத்தொழிற்பெயர்கள், அத்தன்மையையுடைய மாலைக்கு ஆகுபெயர்கள். பெரிய ஆலோசனை

செய்யுங்காலத்துத் தலைமயிர்தல் இயல்பாதலால், 'முடி சூடாத் தூக்கினான்' என்றார். இனி, தொங்கலார் என்பதை ஒருசொல்லாகக் கொண்டு இறுதியடிக்கு-பூமாலையையுடைய மந்திரிகளது பெரியதலைகளிலே விளங்கும்படி இவ்வாலோசனைப்பாரத்தை ஏற்றினான் என்றும் உரைக்கலாம்.

இதுமுதல் மூன்றுகவிகள் - கீழ் நாட்டுச்சருக்கத்தின் முதற்கவி போன்ற கலிவிருத்தங்கள். (சஉ)

இதுவும், மேற்கவியும்-ஒருதொடர்.

சங.—(இ - ள்.) பாழி அம் தோளினாய் - வலிமையையுடைய அழகிய புயங்களை யுடையவனே! (இக்குமாரன்), நீர் சூழும் - கடல் சூழ்ந்த, உலகு எலாம் - எல்லாவுலகத்து உயிர்களும், தொழுது - வணங்கி, தன் அடி நீழலே - தனது திருவடிகளின் நிழலிலே, நிரந்து - நிறைந்து, கண்படுக்கும் - (கவலையின்றித்) துயில்செய்யும்படியான, நீர்மையான் - காத்தற்றொழிலின் தன்மையையுடையவனாகிய, ஆழி அம் கிழவன் ஆய் - அழகிய சக்கராயுதத்திற்கு உரிய திருமாலின் வடிவமாய், அலரும் - விளங்கும், என்பது - என்கிற செய்தியை, பண்டும் - முன்பும், கேட்டும் - கேட்டுள்ளோம்; (எ - று.) —ஏ - தேற்றம். இது - மந்திரிகள் அரசனைநோக்கிக் கூறும் வார்த்தை.

ஆழி அம் கிழவன் என்பதில், அம் - சாரியையு மாம். ஆழியங்கிழவன் - சக்கரவர்த்தி என்றுங் கொள்ளலாம். பண்டும் கேட்டும் என்றது - இவன் பிறந்தகாலத்தில் இவனது சாதகநிலையை நோக்கிச் சோதிடநூலார் கூறக் கேட்டதை. பண்டும், உம்மை - இப்பொழுதுகேட்டதேயன்றி என்னும்பொருளைத் தந்ததனால், எச்சப்பொருளது. பண்டு - பழமையென்னும் பண்புப்பொருள் குறிப்பதொரு இடைச்சொல். கேட்டுமே - கேட்டுள்ளோமே. கேட்டும் - தன்மைப்பன்மை முற்று: டும் - விகுதி; இதுவே, இறந்தகாலங் காட்டிற்று. (சங)

சச.—(இ - ள்.) நம்பி - திவிட்டகுமாரன், நல் தவம் உடையனே - (முற்பிறப்பிற்செய்த) சிறந்ததவத்தின்பயனை யுடையவனேயாவன், என்று - என்றுகூறி, பூண் வில் தவழ் - ஆபரணங்களின்ஒளி பொருந்திய, சுடர் ஒளி விளங்கும் மேனி - விளங்குகின்ற தனதுஇயற்கையானஒளி வீசுகிற உடம்பையுடைய, அ கொற்றவன் - வெற்றியையுடைய அந்தத் திவிட்டகுமாரனது, குறிப்பினை -(உத்தமவிலக்கணங்களின்) அடையாளத்தை, அறிந்து - தெரிந்து, கூறிய -சொல்லுதற்கு, தொடங்கினார்-தொடங்கினார்கள்: (யாவரெனில்), மந்திரத்து உளார் அவர்-(அரசனது) ஆலோசனைக்கு உடனுள்ளவராகிய அம்மந்திரிமார்; (எ - று.)

உடையனே, ஏ - தேற்றம். பூணப்படுவது - பூண்; காரணப்பெயர்: செயப்படுபொருள்விகுதி புணர்ந்துகெட்டது. கூறிய - இயஎன்னும்விகுதி பெற்ற எதிர்காலவினையெச்சம். மற்று- அசை. இனி, மந்திரிமார் பயாபதியரசனதுமனக்குறிப்பையறிந்து என்றுகூறத்தொடங்கினார்கள் என முடித்து உரைப்பாரும் உளர். (சச)

சரு.—(இ - ள்.) ஐயற்கு - யாவராலுங் கொண்டாடத்தக்க திவிட்டகுமாரனுக்கு, சங்க லேகையும் - சங்கத்தின்வடிவமுள்ள இரேகையும், சக்கிர லேகையும் - சக்கரத்தின்வடிவமுள்ள இரேகையும்; அங்கை - அகங்கைகளிலே, உள்ளன—;ஆதலால் - ஆகையால், சங்க பாணியான் - (பாஞ்சஜந்யமென்னுஞ்)சங்கத்தை(த்தனதுஇடத்திரு)க்கையிலேயுடைய திருமாலாவன் இவன், சக்கிர ஆயுதம் அம் கை ஏந்தும்-(திருமாலுக்கு உரிய சுதரிசனமென்னுஞ்) சக்கராயுதத்தை அழகியகையிலே தரிப்பான், என்று அறையல் வேண்டும் - என்றுகூறுதல் தகுதி; (எ - று.)—ஈற்றேகாரம் - தேற்றம்.

[illegible] ; இட்டத்தப் புகையைக்கண்டு அதனைக் [illegible] இவனே நெருப்புடைத்து அறிதல்போல, இவன்கை உத்தமவிலக்கணமாகிய சங்கசக்கரவிரேகைகளைக் கண்டு இவன் சங்கசக்கரங்களைக் கையிலேந்தித் திருமாலவன் என்று உய்த்துணர்ந்தவாறு. ரேகா என்னும் வடமொழி, போலிபெற்று லேகாஎன்றாகிப் ஈறுதிரிந்து லேகைஎன நின்றது. 'சக்ரலேகை'என வடசொல்லாகவே பாடங்கொள்ளின், ஓசையின்பஞ் சிறக்கும். சங்கலேகை, சக்கிரலேகை என்பன வடசொற்றொடராதலால், இலேகையெனலகரத்திற்குமுன்இகரம்பெறவில்லை. ஆர்ய என்னும்வடமொழி,பிராகிருதபாஷையில் அய்யஎன்றாகித் தமிழில் ஐயஎன வந்தது. ஐயற்குஎன ஒருமையானபாடமே தகுதி. 'ஐயர்க்கு' எனப் பன்மையானபாடத்திற்கு - உயர்வுபற்றிவந்த பலர்பால் என்க. வேண்டும்- ஒருவகைவியங்கோள்முற்று;இங்கே தகுதியென்னும்பொருளது.

இக்கவி - முதற்சீரும் மூன்றாஞ்சீரும் மாச்சீர்களும், மற்றையிரண்டும் விளச்சீர்களும் ஆகிய அளவடி நான்கு கொண்டு வந்த கலிவிருத்தங்கள். ()

சசு.—(இ - ள்.) விஞ்சையர் உலகு உடை - வித்தியாதரரது உலகத்தைத் தன்னதாகவுடைய, வேந்தன்தன்-அரசனொருவனது, மகள் - பெண், வஞ்சி அம் கொடி இடை - அழகிய வஞ்சிக்கொடிபோன்ற இடையையும், மயில் அம் சாயலாள்-மயில்போன்றஅழகியசாயலையு முடையவள்,எஞ்சல் இன்று - ஒருகுறைவுமில்லாமல், இயங்கி - (இவிட்டகுமாரனுக்கு மனைவியாகப்)பொருந்தி, வந்து இழியும் ஆய் விடில் - (இங்கு) இறங்கி வருவளானால், இஉலகுஆட்சி-(நமது) இந்தவுலகத்தி னரசாட்சி,அஞ்சி-(பகைவர்க்கு) அச்சந்தருவதாய், நின்று - அழியாது நிலைபெற்று,செல்லும் - நடக்கும்; (எ-று.)

மனிதர்க்கு அரசனான உனக்குப் பதினெட்டுத்தேவகணங்களுளொருவரான வித்தியாதரரது சம்பந்தம் நேருமாயின் பகைவர் மிகஅஞ்ச அரசாட்சி நன்கு சிறப்புற்று நடக்குமென்றார். "திருமக ளிவளைச் சேர்ந்தான் றெண்டிரை யாடை வேலி, யிருநில மகட்குஞ் செம்பொ னேமிக்கு மிறைவ னாகும்" எனச் சிந்தாமணியிற் கூறியுள்ளபடி வித்தியாதரமகளது வடிவத்தின் நல்லிலக்கணத்தைநோக்கி இங்ஙனங் கூறியதாகவுங் கொள்ளலாம். இன்றி என்னும் எதிர்மறைக்குறிப்புவினையெச்சம், ஈறுதிரிந்து இன்றுஎன நின்றது; "உப்பின்று புற்கை யுண்க" என்பதிற் போல: [நன் உயிர்-௨௬]. இவ்வுலகாட்சி எஞ்சலின்று செல்லு மென்றுங் கூட்டலாம். அஞ்சி - அஞ்ச என்னும் எச்சத்தின் திரிபு. ஆட்சி- தொழிற்பெயர்; ஆள் - பகுதி, சி - விகுதி. "சாயல் மென்மை" என்ற தொல்காப்பியச் சூத்திரத்தால், சாயலென்பது-மெய், வாய், கண், மூக்கு, செவி என்னும் ஐம்பொறிகளுக்கும் புலனாகிற ஐவகைமென்மைகளையு முணர்த்துவதோ ருரிச்சொல்லா மென்க.

இதுமுதல்இச்சருக்கம்முடிகிறவரையிலுள்ள நான்குகவிகள்-நாட்டுச் சருக்கத்தின் முதற்கவி போன்ற கலிவிருத்தங்கள். (சசு)

சஎ.—(இ - ள்.) தெய்வம் ஆம் - (குடிகள்யாவர்க்கும்) தெய்வத்தையொத்த, தார் மரு மாலையாய் - பரிசுத்தமான பரிமளத்தையுடைய மாலையையுடையவனே! இனி - இனிமேல், நாம்—, அவன் மொழிந்த நாளினும்- அந்நிமித்திகன் கூறிய தினமளவும், கா மரு பொழிலிடை-அழகிய (புட்பமாகாண்டமென்னும்) உத்தியானவனத்திலே, தே மரு சிலாதலம் இருத்தி - தேவர்கள் விரும்பத்தக்க வட்டக்கல்லினாலாகிய இடத்தைச் செவ்வைசெய்து, துருமகாந்தனை - துருமகாந்தனென்பவனை, காவல் வைத்தும் - (விஞ்சையர்தூதனது வருகையை யறிந்து வந்து தெரிவிக்கும்படி) காவலாக வைப்போம்; (எ - று.)—ஏ - ஈற்றசை. தெய்வம்-தைவம்; வடசொல்.

நாம் - அரசனை யுளப்படுத்திய தன்மைப் ... என்பதும், தெய்வத்திற்கு ஒருபெயர்; ஓரெழுத்தொருமொழி: இதனை தேவசப்தபவமென்பர். வித்தியாதரர் சாரணர் முதலிய தேவசாதி... சிலாதலத்தில் வீற்றிருந்து செய்திகூறுத லியல்பாதலால், 'தேமரு சில... லம்' எனப்பட்டது. மரு - மருவுஎன்பதன் விகாரம். தேம் மரு எனப்பிரித்து, இனிமைபொருந்திய என்றுமாம். சிலாதலம் - வடமொழித்தொடராதலின், வலியியல்பு. திருத்தி- திருந்தியென்பதன்பிறவினை. தெய்வம்ஆம்தூமருஎன எடுத்து - தெய்வத்தன்மையுள்ள நறுமணமென்றுங் கொள்ளலாம். த்ருமகாந்தனென்னும்வடசொல்லுக்கு-மரங்களால்விரும்பப்படுபவனென்று பொருள்; மரங்களைச்செழித்துவளரும்படிபோற்றுபவனென்பது கருத்து. காவல்- காவலனுக்குத் தொழிலாகுபெயர். காவல் வைத்தும் - காத்தற்றொழிலில் வைப்போமென்றுங் கொள்ளலாம். வைத்தும் - உளப்பாட்டுத்தன்மைப் பன்மை வினைமுற்று; தும் - விகுதி, எதிர்காலங்காட்டிற்று. (சுஎ)

சுஅ.—(இ - ள்.) அவர் - புரோகிதனும் மந்திரியரும், என்று மொழிந்த பின் - என்றுகூறியபின்பு, இலங்கு பூணினன் - விளங்குகிற ஆபரணங்களையுடைய அப்பயாபதியரசன், அது பெரிதும் நன்று என்று அருளி - (நீவிர்கூறிய) அவ்வாலோசனை மிகவும் நல்லதென்று சொல்லியருளி, நாள் தொறும் அவன் சென்று காக்க என மொழிந்து - (வித்தியாதரத்தூதன் வருகிறவரையில்) தினந்தோறும் அத் த்ருமகாந்தன் போய் (ச்சோலையில்) காவல்செய்வானாக வென்று கட்டளைமொழி கூறி, தேன் குழல் இன் துணையவர்கள்தம் கோயில் எய்தினன் - (சூடின பூக்களின்) தேனையுடைய கூந்தலையுடைய இனிமையான தனக்குத்துணையாகுந் தேவிமார்களது சிறந்த இடத்தை அடைந்தான்; (எ - று.)

நன்று - பண்படியாப்பிறந்த ஒன்றன்பாற்குறிப்புமுற்று. பெரிது - குறிப்புமுற்றெச்ச வினையுரி. உம்மை, மிகுதிவிளக்கும். காக்கஎன-காக்கென; வியங்கோள்ஈறுதொகுத்தல், செய்யுள்விகாரம். தேன்+குழல்=தேங்குழல்; தேன்மொழி வலிவர வேற்றுமையில் ஈறுபோய் மெலிமிக்க தென்க: [நன்-மெய்-கக.] தேம்குழல் எனப்பிரித்தால், இனிமையை அல்லது இயற்கைநறுமணத்தை யுடைய கூந்தலென்க. ஆணுக்குப்பெண்ணும் பெண்ணுக்கு ஆணும் இனியதுணையாதலால், மனைவியர் இன்துணையவரெனப்பட்டார். இன்துணையவர்கள்தங்கோயில் என்றது, அரண்மனையில் அந்தப்புரத்தை. (சுஅ)

சுகூ.—(இ - ள்.) எரி படு - நெருப்பினொளியை யொத்த, விரி சுடர் - பரவுகிற ஒளி, இலங்கு - விளங்குகிற, பூணினன் - ஆபரணங்களையுடைய பயாபதியரசனது, திரு அடி - சீர்பாதங்களை, தொழுது - வணங்கி, செல் - போகிற, த்ருமகாந்தனும் - த்ருமகாந்தனென்னும் பெயரையுடையவனும், வரி படு மதுகரம் முரல - கோடுகள் பொருந்திய வண்டுகள் ஒலிக்கும்படி, வார் சினை - நீண்ட கிளைகளிலே, சொரிபடு மது - சொரிகிற தேனையுடைய, மலர் - பூக்களையுடைய, சோலை - (புட்பமாகாண்டமென்னுஞ்) சோலையை, நண்ணினன் - அடைந்தான்; (எ - று.)

எரிபடு, படு - உவமவுருபு. திரு - அழகு, மேன்மை, செல்வம்முதலிய பலபொருள்குறிக்கும்ஒருபெயர்த்திரிசொல். த்ருமகாந்தனும்என்றஉம்மை- இறந்ததுதழுவிய எச்சப்பொருளது; கீழ்க்கவியில் 'அரசன் கோயிலெய்தினன்' என்பதனை நோக்குதலால். வரி - இசைப்பாட்டுமாம். மதுகரம் - தேனைச் செய்வதென்று காரணப்பொருள்; தேனைச் சேர்ப்பதென்று கருத்து: வடசொல். சொரிபடு, படு - துணைவினை. (சுகூ)

குமாரகாலச்சருக்கம் முற்றிற்று.

---